# வல்லிக்கண்ணன் கட்டுரைகள்

வல்லிக்கண்ணன்



பதிப்பகம்

ஸ்ரீராம் குடியிருப்பு

212எ/156 சி- 2 சூளைமேடு நெடுஞ்சாலை சென்னை 94

# VALLIKANNAN KATTURAIGAL

A Collection of Essays

VALLIKANNAN




Publisher :
**ARCHUNA PATHIPPAKAM,**
# 252A/156 C-2 Sri Ram Apartments,
Choolaimedu High Road, Chennai - 94.



Arjuna Book No : 3



First Edition : December 2004



Sales right :
**Mithra Arts & Creations Pvt.Ltd.,**
32/8-10, Arcot Road, Kodambakkam,
Chennai - 600 024. Ph : 044 -23723182



Pages : 136



Price : **Rs. 55/-**

# முன்னுரை

தமிழில் சிறுகதை இலக்கியம் போலவே கட்டுரையும் பல வண்ணங்களோடும் வனப்போடும் வளமாகச் செழித்து வளர்ந் திருக்கிறது. இன்னும் வளர்ந்து கொண்டிருக்கிறது.

இலக்கியவடிவங்கள் அனைத்திலும் என் எழுத்தை ஈடுபடுத்த வேண்டும் என்ற ஆர்வத்துடன் எழுத்து முயற்சிகளில் முனைந்த நான் கதை, நாவல், குறுநாவல், கவிதை, நாடகம், வாழ்க்கைவரலாறு, மொழிபெயர்ப்பு எனப் பல வகைகளிலும் எழுதி வந்தேன். கட்டுரை களும் எழுதினேன். சிறுகதைகளைவிட கட்டுரைகள் அதிகம் எழுதி யுள்ளேன் என்று சொல்லலாம்.

ஒருகட்டத்தில், காலத்தின் கட்டாயத்தால், தொடர்ந்து கட்டுரை களையே நான் அதிகமாக எழுத நேர்ந்தது. புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும், சரஸ்வதிகாலம், பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை, தமிழில் சிறுபத்திரிகைகள் என்று வரலாற்று அடிப் படையில் கட்டுரைகள் எழுதவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவை "தீபம்" இலக்கிய இதழில் தொடர்ந்து பிரசுரம் பெற்றன. அதனால் பிந்திய தலைமுறையினரால் நான் கட்டுரையாளனாகவே அறியப் படலானேன்.

ஒரே பொருள் குறித்து, தொடர்கட்டுரைகள் எழுதியது போலவே, பல்வேறு பொருள்கள் பற்றிய கட்டுரைகளை நான் வெகுகாலமாகவே எழுதி வந்திருக்கிறேன். பலவகையான கட்டுரைகளை எழுதியிருக் கிறேன். அவை தமிழ்நாட்டின் பலப்பல பத்திரிகைகளிலும், சிங்கப்பூர் "தமிழ் முரசு", இலங்கை "தினகரன்" ஆகிய பத்திரிகைகளிலும் அவ்வப்போது பிரசுரம் பெற்றுள்ளன.

நான் எழுதிய கட்டுரைத் தொடர்கள் அனைத்தும் நூல் வடிவம் பெற்றுவிட்டன. எனது தனித்தனிக் கட்டுரைகள் தொகுக்கப் பெற்று இதுவரை நூலாக வெளிவரவில்லை. இதுதான் எனது முதலாவது கட்டுரைத்தொகுப்பு ஆகும்.

என்னிடம் நட்பு உணர்வும் மதிப்பும் கொண்டிருக்கும் ஈழத்து

எழுத்தாளர் நண்பர் எஸ்.பொ அவர்களின் அன்பும் தூண்டுதலும் தான் இதை சாத்தியமாக்கியுள்ளது. அவருக்கு என் நன்றி.

பல்வேறு காலங்களில், பலப்பல இதழ்களில் வெளிவந்து சிதறிக்கிடக்கும் எண்ணற்ற கட்டுரைகளிலிருந்து ஒருசில கட்டுரைகள் மட்டுமே இங்கு, தொகுத்துத் தரப்பட்டிருக்கின்றன.

சிந்தனைக் கட்டுரைகள், வர்ணனைக் கட்டுரைகள், நையாண்டிக் கட்டுரைகள், புத்தகங்கள் மற்றும் நூலாசிரியர்கள் பற்றிய கட்டுரைகள், இதழியல் கட்டுரைகள், இலக்கியம் சம்பந்தமானவை, கவிதைகள் மற்றும் கதாபாத்திரங்கள் பற்றியவை, பொதுவான விஷயங்கள் பற்றிய கட்டுரைகள், மனிதர்களின் குணவிசித்திரங்கள் மற்றும் கால மாறுபாடுகள் குறித்த கட்டுரைகள் - இப்படி எத்தனையோ வகையான கட்டுரைகளை எழுதியுள்ளேன். அவற்றில் "மாதிரிக்குச் சில" என்ற தன்மையில், குறைந்த அளவிலான கட்டுரைகளே இத்தொகுப்பில் இடம் பெற்றிருக்கின்றன.

ஏற்கனவே பத்திரிகைகளில் பிரசுரம் பெற்றிராத கட்டுரைகளும் இத்தொகுப்பில் உள்ளன.

புதுமைப்பித்தனின் விமர்சனப்பார்வை என்ற கட்டுரை, புதுடில்லியில் சாகித்ய அகாடமி, அகில இந்திய அளவில் ஒரு வருடம் ஏற்பாடு செய்திருந்த புதுமைப்பித்தன் நினைவுக் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டது ஆகும்.

அதேபோல, புதுமைப்பித்தனின் புதுமைகள் என்பது சென்னையில் நடைபெற்ற ஒரு கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரை.

இத்தொகுப்பில் உள்ளவை வெவ்வேறு காலங்களில் எழுதப் பட்ட கட்டுரைகள் ஆயினும், தற்காலத்துக்கும் எக்காலத்துக்கும் பொருத்தமானவையேயாகும். இன்றைய வாசகர்களும் இனி வரக் கூடிய வாசகர்களும் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் பற்றி இக்கட்டுரைகள் பேசுகின்றன.

மணிக்கொடிக்குப்பின் இலக்கியப் பத்திரிகைகள், தற்கால இலக்கியத்துக்குச் சிற்றிதழ்களின் பங்கு, இலங்கைஇதழ்கள் ஆகியவை இதழியல் வரலாற்றுப் பதிவுகள் ஆகும். இக்கட்டுரைகள் 1980களில் எழுதப்பட்டதால், அக்காலக்கட்டத்துக்குப் பிந்திய சிற்றிதழ்கள் கவனிப்புப் பெறவில்லை.

சரித்திர நாவல் பற்றிய கட்டுரையும், பிரேம்சந்த், கற்பனைச் சுழலில் கதாபாத்திரம் ஆகியவும் இலக்கியச் சிந்தனைகளாகும். "தொடர்கதைகள்" அங்கதம் கலந்த சிந்தனைக் கட்டுரை.

'உயிர்ப்பின் மகாசக்தி' தனிரகமான கட்டுரை. வர்ணனைப் பாங்கில் எழுதப்பட்டது. வியக்கும் மனம் வேண்டும், மாற வேண்டிய விஷயம் ஆகியவை காலஓட்டத்தில் மனிதர்களிடம் ஏற்பட்டுள்ள குறைபாடுகளைச் சிந்திக்கின்றன.

எனது இலங்கைச்சுற்றுலாவும், நடைப்பயணமும் தன் வரலாற்றுப்பதிவுகள். உண்மையான பெரியமனிதர் சிந்திக்கச் செய்யும் வரலாற்றுச் சித்திரம்.

வாழ்வின் ரசிகன் சுவாரசியமான ஒரு குணச்சித்திர விவரிப்பு. இன்றைய லட்சியவாதிகள் சுவைநிறைந்த சமூக விமர்சனக் கட்டுரை.

இப்படியான பல்சுவை விருந்தைக்கொண்ட இக்கட்டுரைத் தொகுப்பு மித்ர பதிப்பகத்தின் வெளியீடாகப் பிரசுரம் பெறுவது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி தரும் நிகழ்வு ஆகும்.

திரு. எஸ்.பொ. அவர்களும், மித்ரபதிப்பகமும் தமிழ் மொழிக்கும் இலக்கியத்துக்கும் அரும்பெரும் பணிகள் ஆற்றிக் கொண்டிருக்கிறார்கள். "தமிழ் இலக்கியம் 2004" என்ற வரலாற்றுச் சிறப்புபெற்ற இலக்கியவிழாவை, சென்னையில் நிகழ்த்தியது அவர் களின் சாதனைகளில் ஒன்று ஆகும். அவ்விழாவின்போது மூத்த தமிழ் எழுத்தாளர்களை அழைத்து, கவுரவித்துச் சிறப்புச்செய்தது விசேஷ நிகழ்வு. அந்நிகழ்வில் என்னையும் பாராட்டிப் பெருமைப்படுத்திய எஸ்.பொ. அவர்களும், மித்ர பதிப்பகமும் இப்போது என் கட்டுரை களின் தொகுப்பை வெளியிட்டு என்னைப் பெருமைப்படுத்துவது எனக்குக் கிட்டிய நற்பேறு ஆகும். அவர்களுக்கு என் நன்றி உரியது.

**- வல்லிக்கண்ணன்**

# உள்ளுறை

# சரித்திர நாவல் பற்றி சில சிந்தனைகள்

சமீப நாட்களில், என் நண்பர் ஒருவர் தனது இளமைக் காலத்தில் தான் படித்திருந்த வடுவூரார், ஆரணி குப்புசாமி முதலியார் நாவல் களை நினைவுகூர்ந்து ரசமாகக் கடிதங்கள் எழுதினார். 1930கள் 40களில் படித்த வடுவூர் துரைசாமி அய்யங்கார் நாவல்களின் நயங் களை இப்பவும் மறக்க முடியவில்லை என்று அவர் வியந்திருந்தார். இப்போது அவருக்கு வயது 76க்கு மேல் இருக்கலாம்.

இந்த நூற்றாண்டின் முப்பதுகள் நாற்பது களில், படிப்பதில் ஈடுபாடு கொண்ட வாசகர்கள் பலரும் கட்டாயமாக வடுவூரார், ஆரணி குப்புசாமி, ஜே.ஆர். ரங்கராஜு, வை.மு. கோதைநாயகி நாவல்களைப் படித்து மகிழ்ந்திருப்பார்கள். எல்லாம் பெரிசு பெரிசாக — சில இரண்டு பாகங்கள் கொண்டதாக— இருந்தன.

இருப்பினும். வடுவூராரின் திகம்பர சாமியார், கும்பகோணம் வக்கீல், தாசி துரைக் கண்ணம்மாள், திவான் லொடபடசிங் பகதூர் போன்ற நாவல்கள் பெரிதும் விரும்பிப் படிக்கப் பட்டன. வயது வித்தியாசம் இல்லாமல் வாச கர்கள் அவற்றை விழுந்து விழுந்து வாசித்து மகிழ்ந்தார்கள். நகரங்களில் மட்டுமல்லாது கிராமங்களிலும் கூடத்தான்.

விறுவிறுப்பான கதை. சுவாரஸ்யமான சம்பவ விவரிப்புகள். அடுத்து என்ன நடக்கும் என்று ஆர்வத்தைத் தூண்டும் வகையில் வளர்க்கப்படும் கதைப்பின்னல். கிளுகிளுப்பூட்டும் காதல் நிகழ்ச்சிகள் அங்கங்கே ரசமாகச் சிதறிவைக்கப்படுகிற சிருங்கார (செக்ஸ்) வர்ணிப்புகளும் விவரிப்புகளும் மற்றும் மர்மங்கள். திடுக்கிட வைக்கும் திகில் விஷயங்கள். இவ்விதமான உள்ளடக்கம் வாசகர்களை கிறுகிறுக்கச் செய்தன.

இத்தகைய நாவல்களை விரும்பிப்படித்த பெரியவர்கள் கண்டிப்பாக ஒரு விதி செய்வது வழக்கம். சின்னவர்கள் (பள்ளியில் படிக்கிற பையன்கள்) இந்த நாவல்களை எல்லாம் படிக்கவே கூடாது என்று. ஆனாலும் பையன்கள் புத்தகங்களை மறைத்து வைத்துப் படித்து ரசித்து அவை பற்றிப் பேசி மகிழ்ந்து கொண்டு தான் இருந்தார்கள்.

வடுவூரார், ஆரணி, ஜே. ஆர். ரங்கராஜு முதலியவர்கள் எழுதியவை சமூக நாவல்களா, சரித்திர நாவல்களா, துப்பறியும் மர்ம நாவல்களா என்று யாரும் கவலைப்பட்டதில்லை. படிப்ப தற்கு சுவையான — பொழுது போக்குவதற்கு ஏற்ற — விறுவிறுப்பு நிறைந்த கதைப்புத்தகங்கள் என்றுதான் அவை விரும்பிப்படிக்கப் பட்டன. அவற்றை ரொமான்டிக் நாவல்கள் என்று சொல்லலாம். மிகுகற்பனை கொண்ட கற்பனாலங்காரக் கதைகள். சகல விதமான சமாச்சாரங்களும் அவற்றில் சுவாரஸ்யமாகக் கலக்கப்பட்டிருந்தன.

அவை சொந்தச் சரக்குகளாக இருந்ததும் இல்லை. ஆங்கிலத்தில் கிடைத்த பல்வேறு மேல்நாட்டுக் கற்பனைகளையும் சொந்த அளப்புகளுடன், சுவையோடு கலந்து தந்தார்கள்.

அந்நாட்களில் பிரபலமாகயிருந்த ஜி. டபிள்யு. எம். ரெயினால்ட்ஸ் நாவல்களின் வெற்றிகரமான தழுவல்களாக இருந்தன. மிஸ்டரீஸ் ஒவ் தி கோர்ட் ஆஃப் லண்டன் என்பது காளிங்க ராயன் கோட்டை ரகசியங்கள் என்றும் பிரான்ஸ் ஸ்டேச்சுயூ ஆர் தி விர்ஜின் கிஸ் என்பது வெண்கலச்சிலை அல்லது கன்னியின் முத்தம் என்றும் தமிழில் வந்தன. அப்புறம் வடுவூரார் தேர்ந்துவிட்டார். இப்படி வெளிப்படையாகத் தழுவுவதில்லை. தமிழ்நாட்டு வாசகர்களின் டேஸ்டுக்குத் தக்கபடி கலப்பட சங்கதிகளைத் தயாரித்துக் கொடுப்பதில் மன்னரானார். கிளுகிளுப் பூட்டும் செக்ஸ் சமாச்சாரங்களைத் தாராளமாகச் சேர்க்கவும் தயங்கவில்லை.

வடுவூரார் சரித்திரநாவல் என்று எதுவும் எழுதவில்லை. காளிங்கராயன் கோட்டை ரகசியங்கள் என்பதை வேண்டுமானால் நாவல் அபிமானிகள் சரித்திர நாவல் என்று கருதியிருக்கலாம்.

ஆரணி குப்புசாமி முதலியார் நாவல்களில் கற்கோட்டைகள்,

அபாயத்தீவுகள், கப்பற்படைகள், பாதாளச்சிறைகள் என்றெல்லாம் வரும் உக்கிரசேனர், வீரசிம்மன் போன்ற பெயர்கள் காணப்படும். அந்தக் காலத்தில் சரித்திர நாயகர்களுக்கு இப்படி எல்லாம் தான் பெயர் இருக்கவேண்டும் என்று எழுத்தாளர்கள் எண்ணியதாகத் தெரிகிறது. சிறுகதைகள், நாடகங்கள் முதலியவற்றில் இவ்விதமான பெயர்கள் அதிகம் இடம் பெற்றன.

சரித்திரக்கதை என்றாலே ராஜாராணிக் கதைதான். ராஜாராணிகளின் வேலைத்தனங்கள் பற்றிக் கேட்பதிலும் படிப்ப திலும் ஜனங்களுக்கு எப்பவுமே தனிமோகம் உண்டு.

தமிழின் முதல் நாவல் என்று ஏற்றுக்கொள்ளப்பட்டி ருக்கிற பிரதாபமுதலியார் சரித்திரம் எழுதிய மாயூரம் வேதநாயகம் பிள்ளை நம் மக்களின் ரசனையைச் சரியாக அறிந்து நற்சான்று கூறியிருக்கிறார்.

ராஜா ராணிக் கதைகளைக் கேட்பதிலும் படித்தறிவதிலும் நம் நாட்டினருக்கு விசேஷமான ஈடுபாடு உண்டு. விசாலமான மாளிகைகளின் உப்பரிகைகளிலும், அழகான நந்தவனங்களிலும் ராஜாக்களும் ராணிகளும், இளவரசர்களும் இளவரசிகளும் நடப் பதையும் இருப்பதையும் படுத்து மகிழ்வதையும் அறிந்து கொள் வதில் ஜனங்கள் எப்போதும் ஆர்வம் காட்டுவது வழக்கம். அவர் களின் ரசனையைத் திருப்திப்படுத்தும் விதத்திலும் இந்த நாவலின் கதைப்போக்கு அமைக்கப்பட்டுள்ளது.

இந்த ரீதியில் (இது நேரடி மேற்கோள் இல்லை) வேத நாயகர் தனது நாவலின் முன்னுரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

நம் நாட்டு மக்களின் சுவையைக் கவனத்தில் கொண்டு, அவர்களுக்குத் தக்கபடி சுவை மிகுந்த நாவல்களை உருவாக்கு வதில் மிகுந்த வெற்றிகண்டவர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி.

கள்வனின்காதலி என்கிற ரொமான்டிக் நாவ'லையும் தியாகபூமி, மகுடபதி போன்ற சமூக - தேசிய - நாவல்களையும் தொடர்கதைகளாக எழுதிய பிறகு, கல்கி தன் கவனத்தைச் சரித்திரநாவல் மீது திருப்பினார்.

கல்கி தனது திறமையினால் தமிழ்நாட்டில் வாசகர்கள் எண்ணிக்கையை அதிகப்படுத்தி, பத்திரிகையின் சர்குலேஷனை வளர்ப்பதில் கருத்தாக இருந்தார். அதற்குத் தொடர்கதையை வெற்றிகரமான ஒரு சாதனம் ஆக்கினார். சாதாரண சமூக அல்லது அதீதக் கற்பனாலங்காரக் கதைகளைவிட சரித்திரப் போலிகளான தொடர்கதைகள் நன்கு பயன்படும் என்று அவர் உணர்ந்தார்.

சரித்திரநாவல் என்ற வடிவம் நல்ல வரவேற்பைப் பெறு வதற்கான சூழ்நிலை தமிழ்நாட்டில் ஏற்பட்டிருந்தது.

கல்கி சரித்திர நாவலைப் பிரபலப்படுத்தவதற்கு முன்னரே தமிழில் சரித்திர நாவலும் சரித்திரக் கதைகளும் காலூன்றி மெது மெதுவாக வளர்ந்து கொண்டுதான் இருந்தது.

இந்திய விடுதலைப்போராட்டத்தில் ஈடுபட்டிருந்தவர்கள் நாட்டு மக்களிடையே தேசபக்தி, வீர உணர்வு, எதிர்த்துப் போராடும் பண்பு முதலியவைகளை வளர்க்கவும் முயன்றார்கள். அதற்காக எழுத்தின் பல வடிவங்களையும் பயன்படுத்துவதில் ஆர்வம் காட்டினார்கள். கதை, நாவல், நாடகம் முதலியன இந்த நோக்கத்துக்கு நன்கு உதவக்கூடும் என்று கருதினார்கள்.

சிறுகதைக்கு இலக்கிய வடிவம் கொடுத்தவர் என்று போற்றப்படுகிற வ.வே.சு. ஐயர் கதைகளின் மூலம் மக்களுக்கு வீர உணர்வைப் புகட்ட வேண்டும், அதற்காக வரலாற்றுப் புகழ் பெற்ற வீரர்களின் கதைகளை ரசமான முறையில் எடுத்தெழுத வேண்டும் என்று விருப்பம் தெரிவித்துள்ளார். அவ்வகையில் அவர் சில கதைகளும் எழுதினார்.

பிரஞ்சு நாட்டுக்கு விடுதலை பெற்றுத் தருவதற்காகத் தன் உயிரை ஈந்த வீரன் அழேன் மூக்கே கதை வ.வே.சு.ஐயர் கதை களில் குறிப்பிடத்தகுந்த ஒன்று ஆகும். இந்திய வரலாற்றில் கீர்த்தி பெற்றுள்ள சந்திரகுப்தனை ஆதாரமாக்கியும் அவர் கதைகள் புனைந்தார்.

விடுதலைப்போராட்டம் விறுவிறுப்பு பெற்றிருந்த 1930களில் மொழி மறுமலர்ச்சியும் கவனத்தில் கொள்ளப்பட்டிருந்தது. அக் காலகட்டத்தில் இந்தியமொழிகள் பலவும் மறுமலர்ச்சி வேகம் பெற்று வளர்ச்சிப்பாதையில் சென்றன. தமிழிலும் மறுமலர்ச்சி போற்றத்தகுந்த விதத்தில் மணம் பரப்பலாயிற்று.

அந்தக் காலகட்டத்தில்தான் தமிழ்ச் சிறுகதை, இலக்கிய கனத்துடனும் பல்வேறு பரிமாணங்களுடனும் வளரத் தொடங் கியது. அப்போது சரித்திரக்கதைகளும் உரிய கவனிப்பைப் பெற்றிருந்தன.

வீரம், தன்மான உணர்வு, போராட்ட குணம், சுதந்திரப் போக்கு, தியாகம் முதலியவற்றைப் பிரதிபலிக்கும் சரித்திரக் கதைகள் பலரால் எழுதப்பட்டு, பத்திரிகைகளில் பிரசுரம் பெற்றன. எம்.எஸ். சுப்பிரமணியஐயர் எழுதிய இத்தகைய கதைகள் வாசகர் களால் அதிகம் ரசிக்கப்பட்டு வந்தன.

இத்தகைய சரித்திரக் கதைகளில், வரலாற்று அடிப்படை களைவிட உணர்ச்சி வேகமும் மிகுகற்பனையும் நடை அழகுமே மிகுதியாக இடம் பெற்றிருந்தன.

அவற்றைக் குறைகளாகக் கருதிய சிலர் சரித்திர உண்மை களை ஆதாரமாகக் கொண்டு கதைகள் எழுதினார்கள். அவர்

களில் தி.நா.சுப்பிரமணியன் குறிப்பிடத்தகுந்தவர் ஆவார். இவர் எழுதிய கதைகள் பின்னர் தோட்டியை மணந்த அரசுகுமாரி என்ற தொகுப்பாகவும், வேறு சில புத்தகங்களாவும் வெளிவந்தன. இவர் கட்டபொம்மு வரலாறு எழுதினார். நவயுகப் பிரசுரம் ஆக 1940களில் வெளிவந்த இந்த நூலில் வரலாற்று உண்மைகள் ஒரு வறண்ட தன்மையில் சொல்லப்பட்டிருந்தன. இதை, 'காயடித்த கட்டபொம்மு' என்று புதுமைப்பித்தன் குறிப்பிட்டார்.

மணிக்கொடி எழுத்தாளர் கு. ப. ராஜகோபாலனும் சரித்திரச் சிறுகதைகள் எழுதினார். அழகியமுறையில் படைக்கப் பட்ட அவை 'காணாமலே காதல்' என்ற தொகுதியாக பின்னர் பிரசுரம் பெற்றன.

அந்நாட்களில் வீரம், போர்புரிதல், தியாகம், காதல் முதலிய வற்றைச் சித்திரித்த சரித்திரக்கதைகள் பெரும்பாலும் ராஜபுத்திர மன்னர்களையும் அரசிகளையும் பற்றியே அமைந்திருந்தன. சிவாஜி, புத்தர், விஜயநகர சாம்ராஜ்ய விஷயங்களும் அபூர்வமாகக் கதைப் பொருள்களாக ஆக்கப்பட்டது உண்டு.

அந்நாட்களில் வேறு இந்தியமொழிகளில் சரித்திர நாவல்கள் மிகுதியாக எழுதப்பட்டுள்ளன. அவற்றில் பல நல்ல வெற்றியும் மிகுந்த கவனிப்பும் பெற்றதுமுண்டு. அவை தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, புத்தகங்களாக வாசகர்கள் மத்தியில் வரவேற்பு பெற்றன. தேவி சௌது ராணி, துர்கேச நந்தினி பிருதிவி வல்லபன், ராஜபுத்திர ஆதிக்கத்தின் அஸ்தமனம் போன்ற நாவல் மொழிபெயர்ப்புகள் 1940களில் தமிழ் வாசகர்களின் பாராட்டுக் களைப் பெற்றிருந்தன.

ஆங்கிலம் படித்தவர்கள் சர் வால்டர் ஸ்காட் எழுதிய வரலாற்று நாவல்களையும், அலெக்சாண்டர் டூமாஸ் பிரஞ்சு மொழியில் எழுதி ஆங்கிலமொழி மூலம் உலகப் பிரசித்தி பெற்றுள்ள சரித்திர ரொமான்ஸ் படைப்புகளையும் விரும்பிப் படித்து மகிழ்ந் தார்கள்.

வால்டர்ஸ்காட் நாவல்களில் சரித்திர ஆதாரங்கள் அதிகம். அவர் எழுத்து நடை காம்பவுண்ட் சென்டன்ஸ்களையும் காம்ப் ளெக்ஸ் சென்டன்ஸ்களையும் மிகுதியாகக் கொண்ட சிக்கல் நிறைந்த நீளமான வாக்கியங்களும் நீண்ட பாராக்களும் கொண்ட தாக இருக்கும். எனினும் சுவாரஸ்யமான கதைப்பின்னல்களும் ஈர்க்கும் சம்பவ அடுக்குகளும் வீரதீரப் போராட்டக் கட்டங் களும் வாசகருக்குத் தனி லயிப்பு ஏற்படுத்திவிடும். (தமிழில் சரித்திர நாவல்கள் எழுதத் தொடங்கிய சாண்டில்யன் இப்படிப்பட்ட ஒரு நடையைக் கையாண்டதை நினைவு கூரலாம்.)

டூமாஸ் நாவல்கள் அதீத கற்பனாலங்காரத்தோடு, மர்மங்கள், சூழ்ச்சிகள், வீரக்கதாபாத்திரங்களின் சாமர்த்தியங்கள், தந்திரங்கள்

முதலியவற்றைக் கொண்ட ஜிலுஜிலு சிருஷ்டிகளாக இருக்கும். (கல்கி டுமாஸ் வழியைப் பின்பற்றினார் என்று கூறலாம்)

காலப்போக்கில் தமிழ்நாட்டில் திராவிட இயக்கம் வலுப் பெற்று வந்தது. அது வடவர் எதிர்ப்பை வளர்த்தது. ராஜபுத்திர வீரத்தையும் மராட்டியவீரர் பெருமையையும் போற்றிப் புகழ் வதை விடுத்து, தமிழ்மன்னர்களின் — முக்கியமாக சோழப் பேரரசர்களின் — கீர்த்திகளை எடுத்துரைப்பதில் திராவிடத் தலைவர்கள் ஆர்வம்கொண்டார்கள். சோழ மன்னரின் வட நாட்டுப்படையெடுப்பும், இமயத்தில் தமிழ்க்கொடி பொறிக்கப் பட்டதும், திமிர்பிடித்த வடநாட்டு மன்னர்களான கனகவிசயர் தலைமீது கல் ஏற்றிக்கொண்டு வந்ததும் மேடைகளிலும் ஏடு களிலும் முழக்கமிடப்பட்டன. தமிழ் மாமன்னரின் பொற்காலப் பெருமைகள் எடுத்துச் சொல்லப்பட்டன.

தமிழர்கள் தமிழ் மன்னர்களின் கீர்த்திகளை உணரலா னார்கள்.

அந்நியர் ஆட்சியை எதிர்ப்பதற்கும், தமிழரின் தமிழ் உணர் வையும் தமிழர்மாண்பையும் வலியுறுத்துவதற்கும் சோழ சக்கர வர்த்திகளின் வரலாற்றுப்புகழையும் சரித்திர சாதனைகளையும் சாகசங்களையும் சுவையான நாவல்களாகப் புனைவது பொருத்த மாக இருக்கும், மக்களிடையே அவை நல்ல வரவேற்பைப் பெறும் என்ற எண்ணம் கல்கிக்கு ஏற்பட்டது. ஆகவே அவர் பார்த்திபன் கனவு படைத்தார். தொடர்ந்து சிவகாமியின்சபதம், பொன்னியின் செல்வன் ஆகிய பெரிய பெரிய நாவல்களை எழுதினார்.

அவை வாசகர்களைக் கவர்ந்தன. வாசகர்களின் எண்ணிக் கையை அதிகப்படுத்தி, பத்திரிகையின் விற்பனையைப் பெருக்கு வதற்கும் உதவின.

சரித்திரம் என்பது மன்னர்கள் பற்றியும் அவர்கள் நடத்திய போர்களைப் பற்றியும விவரிப்பது என்றே வெகுகாலம் வரை நம்பப்பட்டு வந்திருக்கிறது.

அரண்மனை ரகசியங்களையும், மன்னர்கள் மற்றும் அரண்மனை சார்ந்த முக்கியஸ்தர்களின் போட்டி - பொறாமைகள், சூழ்ச்சிகள், சதித்திட்டங்கள், அந்தப்புர மகளிரின் காதல் அல்லது காமஈடுபாடுகளை வர்ணிப்பதும் வரலாற்றின் வேலையாகும் என்ற எண்ணமும் வளர்க்கப்பட்டு வந்துள்ளது.

இந்த அடிப்படையில்தான் சரித்திரக் கற்பனைகள் புனை வோரும் செயல்பட்டு வந்திருக்கிறார்கள் - வருகிறார்கள்.

இவை மட்டுமே சரித்திரம் ஆகா. நாட்டுமக்களின் வாழ்க்கை யையும், மன்னர்களின் போக்குகள் மற்றும் ஆட்சி முறைகளினால் மக்களுக்கு ஏற்பட்ட பாதிப்புகளையும், அந்தந்த காலகட்டத்திய

முக்கிய நிகழ்ச்சிகளையும், சமூக மாற்றங்களையும் பதிவு செய்வதும் சரித்திரத்தின் பணி ஆகும் என்ற கருத்து தோன்றி வலுப்பெற லாயிற்று.

மன்னர்கள் காலம் முடிந்துபோன பிறகு, நாட்டையும் மக்களையும் ஆளவந்தவர்களின் போக்குகளையும் தன்மை களையும், அவற்றால் பாதிக்கப்பட்ட மக்களின் நிலைமைகளையும் பதிவு செய்யவேண்டியது சரித்திரத்தின் கடமை ஆயிற்று.

அவற்றை ஆதாரமாகக்கொண்டு, கற்பனையையும் கலந்து வரலாற்றுநாவல்கள் புனையும் முயற்சிகள் தோன்றி வளர்வதும் காலவகை ஆயிற்று.

இந்த ரீதியில் தமிழிலும் படைப்புகள் தோன்றியுள்ளன. வரலாற்றுநிகழ்வுகளையும், அவற்றினால் சமூகத்தி'ப ஏற்பட்ட தாக்கங்களையும், மக்களின் வாழ்க்கை பாதிக்கப்பட்ட விதங் களையும் நாவலாக எழுதும் முயற்சிகள் அவ்வப்போது மேற் கொள்ளப்பட்டிருப்பது மகிழ்ச்சிக்கு உரியதாகும்.

இந்திய விடுதலைப்போராட்ட காலத்தையும், விடுதலைக்குப் பிந்திய காலகட்ட பாதிப்புகளையும் வைத்து அதிகமான நாவல்கள் — சமூகவரலாற்று நாவல்கள் எழுதப்பட்டிருக்கவேண்டும். ஆனால் தமிழ் எழுத்தாளர்களின் கவனம் வெகுகாலம்வரை இத் திக்கில் செலுத்தப்படவில்லை என்பது ஒரு குறைதான். ஆயினும், குறிப்பிடத்தகுந்த சில முயற்சிகள் இவ்வகையிலும் பிறந்துள்ளன என்று சொல்லலாம்.

கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தியின் ‘அலை ஓசை’ நாவல் இவ்வகையில் எழுதப்பட்ட முதல் முயற்சி ஆகும். சுதந்திரப் போராட்ட காலம், விடுதலை இயக்கத்தில் ஈடுபட்ட இலக்கிய வாதிகளின் செயல்கள், அவர்களும் அவர்களது குடும்பங்களும் பாதிக்கப்பட்ட தன்மைகள், அவர்களின் உறவுகள், உணர்வுச் சிக்கல்கள் முதலியன இந்நாவலில் சித்திரிக்கப்பட்டுள்ளன.

ம.சீ. கல்யாணசுந்தரம் எழுதிய இருபது வருடங்கள். இதில் முதல் பகுதி விடுதலைப் போராட்ட கால அனுபவங்களை நன்கு விவரிக்கிறது. பிற்பகுதி, போராட்டத்தில் ஈடுபட்டிருந்த ஒரு டாக்டர் எங்கோ ஒரு தீவுக்குப் போய் வாழ்ந்து பெற்ற அனுபவங் களையும், அவர் தாய்நாட்டுக்குத் திரும்பிவந்ததும், தான் கற்ற புதிய சிகிச்சைமுறையைப் பிரபலப்படுத்துவதில் காட்டுகிற உற்சாகத்தையும் விவரிக்கிறது.

வல்லிக்கண்ணன் எழுதிய வீடும் வெளியும் சுதந்திரப் போராட்ட கால நிகழ்வுகளையும் உணர்ச்சி வேகத்தால் அவற்றில் ஈடுபட்ட மாணவர்களின் இயல்புகள், வீட்டுச் சூழ்நிலைகள், இவற்றால் அவர்கள் பாதிக்கப்பட்ட விதங்களையும் உணர்ச்சி கரமாகச் சித்திரித்துள்ளது. அப்படி உணர்ச்சி வேகத்தோடு

போராட்டத்தில் குதித்தவர்களின் பிற்கால நிலையையும் இந்த நாவல் விவரித்துள்ளது.

ந. சிதம்பரசுப்ரமணியன் எழுதிய ‘மண்ணில் தெரியுது வானம்’ விடுதலைப்போராட்ட காலத்திய நிகழ்ச்சிகளைக் கூறினாலும், அது சமூக வரலாற்று நாவலாக எழுதப்படவில்லை என்றே சொல்லவேண்டும். அரசு உத்தியோகம் பார்க்கிற ஒரு தந்தை தன் மகனைப்பற்றிக் கண்ட கனவுகளையும், மகன் அவற்றுக்கு மாறாகத் தேசியஉணர்வோடு விடுதலை இயக்கத்தில் ஈடுபட்டுவிடுவதையும், அதனால் ஏற்பட்ட பாதிப்புகளையும் இந்த நாவல் வர்ணித்துள்ளது.

நா. பார்த்தசாரதியின் ‘ஆத்மாவின் ராகங்கள்’ விடுதலைப் போராட்ட காலச் சூழ்நிலையையும், நிகழ்வுகளையும் அடிப்படை யாக்கி ஒரு நாவல் எழுதப்பட வேண்டும் என்ற ஆர்வத்தின் மலர்ச்சியாக இருந்தபோதிலும் ஒரு காந்தீயவாதியையும் அவர்மீது காதல் கொள்ளும் ஒரு தாசி குலப்பெண்ணின் உணர்வுகளையும் ரசமாக விவரிக்கும், ரொமான்டிக் நாவலாகவே அமைந்துள்ளது.

சமீபகாலத்தில் வெளிவந்துள்ள சமூக வரலாற்று நாவல்கள் சில பாராட்டப்பட வேண்டிய படைப்புகள் ஆகும்.

பொன்னீலன் எழுதியுள்ள ‘புதிய தரிசனங்கள்’ இவற்றில் முதலாவதாகக் குறிப்பிடத்தக்கது. இது அரசியல் நாவலின் தன்மையையும் கொண்டிருக்கிறது. இந்தியாவில் அமுலுக்கு வந்த அவசர காலச்சட்டம், அதனால் அரசியல் கட்சிகளிடத்தும், மக்கள் மத்தியிலும் ஏற்பட்ட பாதிப்புகள் முதலியன இந்த நாவலில் விரிவாகவும் உணர்ச்சியோடும் சித்திரிக்கப்பட்டுள்ளன.

அடுத்தது, செ. யோகநாதன் மிக விரிவாக எழுதத் திட்ட மிட்டுள்ள ‘அசுரவித்து’ எனும் பெரிய நாவலின் முதல் பகுதியாக வெளியிட்டிருக்கும், ‘நேற்றிருந்தோம் அந்த வீட்டினிலே’ என்பது யாழ்ப்பாணத்தில் நிகழ்ந்த சம்பவங்களையும், கிராமப்புற மக்களின் உணர்வுகளையும் அவர்களது வாழ்க்கை முறைகளையும் கலைத் தன்மையுடன் விவரிக்கிறது இது.

கவிஞர் தமிழ்நாடன் எழுதியுள்ள சாரா நாவல் வரலாற்றுப் பார்வையும், சமூக நோக்கும், உலகம் தழுவிய விசாலமான சிந்தனையும் கொண்ட புதியதோர் முயற்சியாகும். பண்பாட்டுப் பெருமையும் இனஉணர்வும் பேசுகிற மக்களின் வெறித்தன இயல்பு களையும், அவை விளைவிக்கிற பாதிப்புகளையும் எடுத்துச் சொல்கிற இந்த நாவல், ஆரம்பத்தில் சிந்தனைக்கனமும், வளர வளர காதல் சுவாரஸ்யமும், பிற்பகுதியில் மர்மநாவலின் விறு விறுப்பும் பெற்றுள்ள படைப்பாக இருக்கிறது. தமிழ் நாவலில் புதிய களம், புதிய கரு, புதிய போக்கும் நோக்கும் சேர்த்திருப் பதற்காக, கவிஞர் தமிழ் நாடனை பாராட்ட வேண்டும்.

# தமிழ் இலக்கியத்தில் காந்தியத் தாக்கம்

இருபதாம் நூற்றாண்டில் இந்திய நாட்டின் அரசியல், சமூகம், பொருளாதாரம், தனிமனித வாழ்க்கை, கலை, இலக்கியம், ஆன்மீகம், முதலிய சகல துறைகளையும் பாதித்த ஒரு வலிய தத்துவமாக விளங்கியது காந்தியம்.

இந்திய விடுதலைப்போராட்டத்திற்குத் தலைமை தாங்கி மக்களுக்கு வழிகாட்ட வந்த காந்திஜி வெறும் அரசியல் தலைவராக மட்டும் செயல் புரியவில்லை. தனிமனித வாழ்க்கை முறைகளை மேம்படுத்தி, சமூக வாழ்வை சீருறச் செய்து, நாட்டில் வாழ்வும் வளமும் நலமும் பெறுவதற்காக மக்களுக்கு விடுதலை உணர்வைப் புகட்டி, அவர்களைச் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபடத்தூண்டிய காந்தி அறவழி போதிக்கும் ஆன்மீகத் தலைவராகவும் திகழ்ந்தார்.

விடுதலை உணர்வு, சத்தியம், அகிம்சை, சத்தியாக்கிரகம், சர்வோதயம், தீண்டாமை ஒழிப்பு, கள்உண்ணாமை, கிராமசீர்திருத்தம், கைத்தொழில் வளர்ச்சி முதலியவற்றை வலியுறுத்தும் தத்துவமாக காந்தியம் அமைந்து காணப்பட்டது. இவற்றுடன் மொழிகளின் வளர்ச்சியிலும் காந்திஜி அக்கறை காட்டினார்.

விடுதலை உணர்வை வளர்க்கவும், விடுதலைப் போராட்டச் செய்திகளை மக்களி

டையே எடுத்துச் செல்லவும் நாடு நெடுகிலும் புதிய பத்திரிகைகள் தோன்றி வளரக் காந்தியம் துணைபுரிந்தது. இலக்கிய மறுமலர்ச்சிக்கு இந்த வேகம் வித்திட்டது.

நாட்டு மக்களின் வாழ்க்கையை வெகுவாகப் பாதித்துக் கொண்டிருந்த காந்தியத் தத்துவம் இலக்கியத்திலும் தனது தாக்கத்தைப் பரவச் செய்தது. கவிதை, கட்டுரை, சிறுகதை, நாடகம், நாவல் முதலிய பல்வேறு இலக்கியவடிவங்களிலும் 1920கள் முதல் காந்தியத் தாக்கம் நன்கு புலனாயிற்று.

அக்காலகட்டத்தில் பத்திரிகைகளில் எழுதப்பட்ட சிறுகதை களும் நாவல்களும் காந்தியக் கொள்கைகளைப் பிரதிபலித்தன. விடுதலைப்போரில் ஈடுபடும் கதை மாந்தர்கள், சுதந்திரத்தின் சிறப்பைப் பேசுகிறவர்கள். உண்மை பேசுவதும் உண்மையைக் கடைப்பிடிப்பதும் வாழ்க்கையின் உயர்ந்தநெறியாகும் என்று தேர்ந்து செயலாற்றியவர்கள். அகிம்சை போற்றியவர்கள் பற்றி, கதைகளும் நாவல்களும் தோன்றின. கள்ளுக்கடை மறியல், தீண்டாமை ஒழிப்பு, கதர் அணிதல், அந்நியத் துணி மறுப்பு, சத்தியாக்கிரகம் முதலிய காந்தியக்கொள்கைகளை அவை வலியுறுத்தின.

கா. சீ. வேங்கடரமணி எழுதிய 'முருகன் ஓர் உழவன்' 'தேசபக்தன் கந்தன்' கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தியின் 'தியாகபூமி', வை. மு. கோதைநாயகி எழுதிய பல நாவல்கள் காந்தியத் தாக்கம் பெற்ற படைப்புகள் ஆகும்.

இவ்ஆசிரியர்கள் அளவு பெயரும், அவர்களது எழுத்துக்கள் பெற்ற வரவேற்பும் பெற்றிராத எழுத்தாளர்கள் அநேகர் காந்தியத் தாக்கம் பெற்று நாவல்கள் எழுதியுள்ளனர் என்பதை வரலாறு உணர்த்தும்.

1926ல் வெளிவந்த 'காந்திமதி' என்ற நாவல்தான் காந்தியத் தாக்கம் பெற்ற முதல் நாவல் என்றொரு தகவல் தெரிவிக்கிறது. இல்லை. 1922 - ல் வெளிவந்த 'சபேசன் அல்லது சுதந்திர ரக்ஷகன்' என்ற நாவலிலேயே காந்தியத்தாக்கம் வெளிப்பட்டிருப்பதை அறிய முடிகிறது எனக் கூறுவோரும் உளர்.

வை. மு. கோதைநாயகி அம்மாள், மகாத்மா காந்தியின் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டு புதுமை இலட்சியங்களையும் உரிமைப்போராட்டங்கள் இயக்கங்களையும் கலந்து நாவல்கள் படைப்பதில் ஆர்வம் காட்டியுள்ளார் என்பதை நாவல் வாசகர்கள் அறிவர். சூதாட்டம், குடி போன்ற சமூகத் தீமைகளால் குடும்பங்கள் கெட்டுச் சீரழிவது, பெண்கள் படுகிற துன்பதுயரங்கள் முதலியவற்றை அவர் நாவல்களில் சித்திரித்தார். காந்திய வழிமுறைகளைப் பின்பற்றும் பெண்கள் தங்கள் கணவன்மாரைத்

திருத்துவதாகக் கதை சொல்லும். பெண்கள் கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டதையும், அந்நியத் துணிக்கடை முன்நின்று கதர்ப்பிரசாரம் செய்ததையும் வை.மு.கோ. நாவல்களில் கையாண்டுள்ளார். ஸார மதி, தியாகக்கொடி போன்ற அவரது நாவல்கள் அந்நாட்களில் நல்ல வரவேற்பைப் பெற்றிருந்தன.

கள்குடியினால் ஏற்படும் தீமைகளை விளக்கிப் பல நாவல்கள் எழுதப்பட்டன. ஒரு விவசாயியின் தீவிரமான மண் ஆசையை விவரிக்கும் சங்கர்ராமின் மண்ணாசைகூட கிராமத்தில் கள்ளுக் கடையால் ஏற்படும் தீமையையும், குடிவெறியினால் விவசாயிகள் கெட்டுத்தீயவர்களாகிக் கொடுஞ்செயல்கள் புரிவதையும் எடுத்துச் சொல்கிறது. மக்கள் தம் வாழ்வில் காந்தியக் கொள்கையைக் கையாள வேண்டிய அவசியத்தை இந்நாவல் வலியுறுத்துகிறது.

யோகி 'சுத்தானந்த பாரதியார்' எழுதிய அன்பு நிலையம் அல்லது வாழும்வகை என்ற நாவலும் குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியது ஆகும். கலப்புத் திருமணம், தேசிய நோக்கு, உண்மை மீது பற்றுதல், அன்புவழி நடத்தல் முதலியவற்றை வலியுறுத்தி, அரசியல் வளர்ச்சி ஆன்மீக வளர்ச்சியாதல் வேண்டும் எனும் காந்தியக் கொள்கையை எடுத்துச் சொல்லும் தன்மையில் இந்த நாவல் அமைந்துள்ளது.

எஸ். சீதாராமையா, காந்திஜியின் அன்பு அகிம்சை, ஆசிரம வாழ்க்கைமுறை ஆகியவற்றைச் சிறப்பிக்கும் விதத்தில் காட்டூர் ராமு என்ற நாவலை எழுதியுள்ளார். கதாநாயகன் ராமு காந்திய வழியில் ஒரு புதிய சமூகத்தை அமைப்பதை இலட்சியமாகக் கொண்டு செயல்புரிவதாக நாவல் பின்னப்பட்டிருக்கிறது.

அகிம்சைக்கொள்கைக்கும் பலாத்காரக் கொள்கைக்கும் உள்ள மாறுபாட்டை அடிப்படையாகக் கொண்டும், முதல் சத்தியாக் கிரக இயக்கத்தைப் பின்னணியாக வைத்தும் எழுதப்பட்ட நாவல் 'பலாத்காரம்' என்று சாண்டில்யன் குறிப்பிட்டுள்ளார். 1934ல் சாண்டில்யனால் எழுதப்பட்ட இந்த நாவல் பிற்காலத்தில் புரட்சிப்பெண் என்ற பெயருடன் மறுபிரசுரம் பெற்றது.

காந்தி, காந்தியம் என்று குறிப்பிடாமலேயே, காந்தியத் தாக்கத்தோடு அநேக நாவல்கள் எழுதப்பட்டன. 1940களில் கடமை உணர்வு, பொதுநலத்தொண்டு, உண்மை மீது பற்றுதல், விதவை மறுமணம், கிராம சீர்திருத்தம் முதலிய விஷயங்களை இந்நாவல்கள் பேசின.

இந்தியா விடுதலை பெற்று, மகாத்மாகாந்தி சுட்டுக் கொல்லப் பட்ட பிறகு, காந்தியத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட இலக்கியமுயற்சிகள் குறைந்து போயின என்றே சொல்ல வேண்டும்.

1930களிலும் 40களிலும் காந்தியக் கொள்கைகளை வலியுறுத்தும்

சிறுகதைகள் மிகுதியாகவே எழுதப்பட்டன. பத்திரிகைகளிலும் வெளிவந்தன. காலஓட்டத்தில் இவை குறைந்துபோயின. வேறு நோக்குகளும் போக்குகளும் சிறுகதையில் இடம் பிடிக்கலாயின.

1960களில், ஏற்கனவே தமிழில் வெளிவந்த சிறந்த காந்தியச் சிறுகதைகளை (பல்வேறு எழுத்தாளர்களால் எழுதப்பட்டவை) தொகுத்து காந்திவழிக்கதைகள் என்ற பெயரில் ஒரு பெரிய புத்தகமாக சர்வோதயப்பண்ணை வெளியிட்டது. இது ஒரு சிறப்பான தயாரிப்பு.

காந்திய வழிகளை எடுத்துச்சொல்லும் நாவல்கள் பின்னரும், அவ்வப்போது தமிழில் வெளிவந்துள்ளன. ந. சிதம்பரசுப்ரமண்யம் எழுதிய 'மண்ணில் தெரியுது வானம்', நா. பார்த்தசாரதியின் 'ஆத்மாவின் ராகங்கள்' எம்.எஸ். கல்யாணசுந்தரம் எழுதிய 'இருபது வருடங்கள்' விசேஷமாகக் குறிப்பிடப்பட வேண்டியவை.

கவிதையில் சுப்பிரமணிய பாரதியார் காந்தியைப் போற்றிப் பாராட்டி வாழ்த்தினார். அவருக்குப்பின் வந்த கவிஞர்கள் காந்தியக் கொள்கைகளைச் சிறப்பித்துக் கவிதைகள் இயற்றியுள்ளனர். நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளையின் கவிதைகள் விசேஷமானவை.

காந்தியக்கொள்கைகளை வலியுறுத்தும் நாடகங்கள் பல எழுதப்பெற்று மேடைகளில் நடிக்கப்பட்டது உண்டு. காலத்தில் தாக்குப்பிடித்து நிற்கும் இலக்கியப்படைப்புகளாக அவை அமையவில்லை.

மணிக்கொடி எழுத்தாளர் சி.சு.செல்லப்பா காந்தியக் கொள்கைகளில் அழுத்தமான பற்றுதல் கொண்டவர். அத்தாக்கத்தில் அவர் பல சிறுகதைகள் படைத்திருக்கிறார். அவை சத்யாகிரகி என்ற தொகுப்பாகப் பிரசுரம் பெற்றன.

அண்மையில் அவர் சுதந்திர தாகம் என்ற பெரிய நாவலை எழுதி வெளியிட்டிருக்கிறார். மூன்று பாகங்கள் கொண்ட இந்த நாவல் இந்திய விடுதலைப் போராட்டம் பற்றிய ஒரு ஆவணமாக அமைந்திருப்பதுடன், காந்திஜியின் உயர்தன்மைகளையும், காந்திய வழிமுறைகளின் மேன்மையையும், அம்மாபெரும் தலைவர் காட்டுகிற வழியில் செயலாற்றிய தொண்டர்களின் பெருமைகளையும் நன்கு எடுத்துச் சொல்லும் வரலாறாகவும் விளங்குகிறது.

தாமரை — மே 1980



# பிரேம் சந்த்

இந்தியநாட்டில் காலகாலமாக நிலவி வரும் சமூகம் மற்றும் சனாதனக்கொடுமை களையும், வறுமையையும் பிற்போக்குத் தனங் களையும் எதிர்த்து இலக்கியப்போர் தொடுத்த பேனாவீரர் பிரேம்சந்த். உருதுமொழியிலும், இந்தியிலும் நாவல்களும் சிறுகதைகளும் எழுதிப் புகழ்பெற்ற பிரேம்சந்த் இந்திய முற்போக்கு இலக்கியத்தின் முதல்வராகவும் முன்னோடி யாகவும் கருதப்படுகிறார்.

கற்பனை அலங்காரம, மர்மம், சரித்திர மோகம் முதலிய அம்சங்களே நிறைந்து கிடந்த உருது, இந்திமொழிகளின் படைப்பிலக்கியத்தில் புதிய ஒளியைப் புகுத்திய பெருமை பிரேம் சந்தையே சேரும். அவரது காலத்தில் சமூக நிலைமைகளையும், காலவேகத்தில் நாட்டிலும் சமுதாயத்திலும் குடும்பங்களிலும் ஏற்பட்டு வளர்ந்த மாறுதல்களையும் அவர் தமது நாவல் களில் நன்கு எடுத்துக்காட்டினார். கிராமங் களின் அவல நிலைமைகளையும் நகரவாழ்வின் பொய்மையையும் போலித்தனங்களையும் பிரேம்சந்த் தமது எழுத்துக்களில் படம்பிடித்து இலக்கியத்தில் எதார்த்தத் தன்மையைக் கலந்தார்.

பிரேம்சந்த் சிறந்த மனிதாபிமானி.

மக்களின் வாழ்க்கை நிலை உயரவேண்டும் என்று விரும்பினார். நாடு முழுவதும் வளம் செழிக்கவேண்டும் என்று ஆசைப்பட்ட அவர். அந்நியர் ஆதிக்கத்திலிருந்து இந்தியா விடுதலை பெற வேண்டும் என்று கருதினார். கிராமமக்கள் நிலப்பிரபுக்களின் கோரப்பிடியிலிருந்தும் நகரமக்கள் தொழிலதிபர்களின் நச்சுப் பிடியிலிருந்தும் விடுபட்டாக வேண்டும் என்று நம்பினார். இம் மாறுதல்களை உண்டாக்குவதற்குத் துணைபுரியக்கூடிய சாதனங் களில் இலக்கியமும் ஒன்று என்பது அவரது நம்பிக்கை.

பிரேம்சந்தின் போர்க்குணம் அவருடைய முதலாவது நாவலி லேயே வெளிப்பட்டுவிட்டது. 'கோயில் மர்மம்' என்ற அந்நாவலில் பூசாரிகள், புரோகிதர்கள், மக்களைச் சுரண்டிக் கொழுத்த மகந்துகள் ஆகியோரின் உண்மைத் தன்மைகளை அம்பலப் படுத்தினார்.

இரண்டாவது நாவலான பிரேமாவில் விதவையின் துயரங் களை, சமூகம் விதவைகளுக்கு இழைக்கின்ற கொடுமைகளைச் சித்திரித்தார். அந்நாவலின் கதாநாயகன், தனக்குப் பெரியோர் களால் நிச்சயம் செய்யப்பட்ட பணக்காரப் பெண்ணை மணக்காமல், இளம் விதவை ஒருத்தியைக் கல்யாணம் செய்து கொண்டு சமூக எதிர்ப்புகளைத் துணிச்சலாகச் சமாளித்து வெற்றி பெறுகிறான்.

பிரேம்சந்த் வெறும் பேச்சு வீரராக இராமல், முற்போக்குக் கொள்கைளைத் தமது செயல்கள் மூலமும் காட்டினார். சிவராணி தேவி என்ற பாலியவிதவையை அவர் திருமணம் புரிந்து, வாழ்க்கை நடத்தினார். அந்நாட்களில் அப்படிச் செய்வதற்கு எவருக்குமே மிகுந்த துணிச்சல் தேவை. அத்தகைய துணிச்சலுடன் தீவிர லட்சியப் பிடிப்பும் உயரிய நோக்கும் பிரேம் சந்திடம் இருந்தன.

பிரேம்சந்த் என்பது புனைப்பெயர்தான். அவரது இயல் பெயர் தன்பத்ராய். 1880 ஜூலை மாதம் பிறந்தார். அவருடைய தந்தை அஜைப் லால் தபால் ஆபீசில் குமாஸ்தா வேலை பார்த்தார். வாழ்க்கைவசதிகள் இல்லாத சூழ்நிலையில் வளர்ந்து படித்துத் தேறிய பிரேம்சந்த பிரிட்டிஷ் சர்க்கார் ஊழியராகப் பணிபுரிய வேண்டிய அவசியம் நேரிட்டது.

சர்க்கார் பள்ளிக்கூடத்தில் ஆசிரியராக வேலை பார்த்த வாறே பிரேம்சந்த் உருதுமொழியில் கதை எழுதினார். அக்காலத்தில் நவாப்ராய் என்ற பெயரிலேயே அவருடைய எழுத்துக்கள் பிரசுரமாயின. 1901 முதல் அவர் எழுதத் தொடங்கினார்.

நவாப்ராய் என்ற பெயரில் புரட்சிகரமான கதைகளை எழுதிக் கொண்டிருப்பது, அரசாங்க இலாகாவுக்கு உட்பட்ட ஒரு பள்ளிக்கூட ஆசிரியர்தான் என்ற உண்மையைக் கண்டுபிடித்து

விட்ட கல்வி அதிகாரி ஒருவர் அவரைக் கூப்பிட்டு விசாரித்தார். எச்சரிக்கை விடுத்தார். எனவே, அவர் புதிய பெயர் ஒன்றைத் தேர்ந்துகொள்ளத் துணிந்தார்.

அவருடைய நண்பர் ஒருவர் கூறியபடி பிரேம்சந்த் என்ற பெயரை அவர் சூடிக்கொண்டார். 1909 முதல் இந்தப் பெயரிலேயே அவர் எழுதி வந்தார். முதலில் உருதுவிலும், பிறகு இந்தியிலும் எழுதிப் பிரசுரிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்த அவர் இந்தியில் எழுதுவதையே முக்கியப் பணியாகவும் கொண்டார்.

அந்நாட்களில் ஆங்கிலேயர் ஆட்சியிலிருந்து விடுதலை பெற வேண்டும் என்ற வேட்கை நாட்டுமக்களின் உள்ளத்தில் பொங்கி எழுந்து செயல்களில் பரிணமித்துக் கொண்டிருந்தது. தலைவர்கள் அந்த உணர்ச்சியைத் தூண்டி, செயல்திட்டங்கள் கண்டு, போராட்டங்களை நடத்தி வந்தார்கள். பிரேம்சந்தின் உள்ளத்திலும் சுதந்திரக்கனல் ஒளிர்ந்தது.

அவர் எழுதிய முதலாவது சிறுகதையில், பூமியில் மிகவும் மதிப்பு வாய்ந்தது எது என்ற பிரச்சினையை எழுப்பி, விடை அளித்துள்ளார். மரணதண்டனை பெற்ற மகளுக்காக அழுது அரற்றும் ஒரு தந்தையின் கண்ணீருக்கு அந்த மதிப்பு உண்டா? கணவனின் உடலைச் சுட்டெரிக்கிற தீயில் விழுந்து தன்னையும் எரித்துக் கொள்கிற மனைவியின் சாம்பலுக்கு அத்தகைய மதிப்பு உண்டா? இல்லவே இல்லை. நாட்டின் விடுதலைக்காகப் போராடி உயிர் துறக்கும் வீரனின் கடைசித்துளி ரத்தமே மிக மிக மதிப்பு வாய்ந்தது என்றார் பிரேம்சந்த்.

சுதந்திர தாகம் கொண்டிருந்த இந்தப் பேனா வீரர் தனது வாழ்க்கையின் பெரும்பகுதியை அடிமை உத்தியோகத்தில்தான் கழித்தார். வாழ்க்கை முரண்களில் இதுவும் ஒன்று.

சர்க்கார் பள்ளிக்கூட ஆசிரியர் வேலையை விட்டுவிட வேண்டும் என்று அவர் அநேக சந்தர்ப்பங்களில் எண்ணியது உண்டு. ஆனால் குடும்பநிலைமையும் பொருளாதாரத் தேவைகளும் அதற்கு இடம் அளிக்கவில்லை.

ஆனாலும், தேசிய விடுதலை எழுச்சி நாட்டில் மேலோங்கி வளர்ந்த காலக்கட்டத்தில், பிரிட்டிஷ் சில்லரை தேவதைகளின் அதிகாரக்கெடுபிடிகள் பிடிக்காமல் போனநிலையில் பிரேம்சந்த் அரசாங்க வேலையை உதறி எறியத்தான் செய்தார். பிறகு, தனியார் பள்ளியில் பணிபுரிந்து வந்தார்.

அக்காலகட்டத்தில் அவர் எழுதிய கதைகளும், நாவல்களும் கிராமங்களில் நீடித்த பரிதாபகரமான வாழ்க்கை நிலைகளைச் சித்திரித்தன. நாட்டுமக்களின் சோகங்களை, வறுமையை, வெறுமையை வீறுகொண்டெழுந்த நாட்டினரின் போராட்ட

உணர்வை, மக்கள் சக்தியின் இயக்க வேகத்தை உள்ளது உள்ளபடி விளக்கும் எதார்த்தச் சித்திரங்கள் அவை.

பிரேம்சந்த் தன் எழுத்துக்கள் மூலம் வலியுறுத்த விரும்பிய உண்மைகளில் மிக முக்கியமானது:- மனிதன் பரிபூரண நல்ல குணம் கொண்டவனுமல்ல, முழுக்க முழுக்கத் தீயபண்புகள் பெற்ற வனுமல்ல. நற்குணங்களும் தீயபண்புகளும் கொண்டிருப்பவன் அவன். வாழ்க்கையில் மனிதன் தவறுகள் செய்கிறான். வீழ்ச்சி அடைகிறான். ஆனாலும் இறுதியில் அவன் விழித்துக் கொள் கிறான். எழுந்து நிற்கிறான். தரும நியாயங்கள் பழிபகைமைகளை ஒதுக்கிவிட்டு, செயல் புரியக்கூடிய இயல்பு மனிதனின் உள்ளத்தில் ஆழ்ந்து உறைகிறது".

இந்த விதமான லட்சியநோக்கு பெற்றிருந்ததனால், பிரேம் சந்தின் எழுத்துக்கள் வாசகரின் உள்ளத்தை மேம்படுத்தும் ஒரு நல்ல சக்தியாக விளங்கின. நேர்மைக்காகவும் நீதிக்காகவும் குரல் கொடுத்த அவர் அநியாயத்தை, அக்கிரமங்களை அயோக்கியத் தனங்களைக் கண்டித்தார். வாழ்க்கையின் எதார்த்தங்களைத் தெளிவாக விவரித்த அவர், மனிதர் வாழ்வில் உள்ளார்ந்து கிடக்கிற தீயசக்தியின் போராட்டங்களை, நல்ல பண்புகளை, தீமைக்குணங்கள் அடக்கி ஒடுக்குவதைக் கண்டு கொள்ளவும், எடுத்துக்கூறவும் தவறவில்லை. எனினும், இறுதி வெற்றி நற்பண்புகளுக்கே என்று அவர் திடமாக நம்பினார்.

பிரேம்சந்தின் பெரும் சமூகநாவல்களில் முதலாவதாக எழுதப்பட்டது சேவாசதனம். இதுதான் உருது. இந்தி மொழி களில் தோன்றிய முதலாவது சமூகநாவல் என்ற பெருமையையும் கொண்டுள்ளது. இதற்கு முந்திய நாவல்கள் எல்லாம் கற்பனா சாகசங்கள் மிகுந்த அற்புத அளப்புகள் ஆகவே இருந்தன.

சேவாசதனம் வாழ்க்கையின் கசப்பான உண்மைகளை உள்ளது உள்ளவாறே காட்டியது. ஆசிரியர் எதையும் குறைத்துச் சொல்லவுமில்லை. கண்டிக்கவும் இல்லை. அதே வேளையில், வீழ்ச்சியுற்ற மனிதன் தலைநிமிர்ந்து தனது வாழ்வைப் புதுப்பித்துக் கொள்ளமுடியும். அழிவு என்பது மனிதருக்கில்லை என்று வலியுறுத்தவும் அவர் தயங்கவில்லை.

இந்நாவலின் கதாநாயகி பெண்களுக்குரிய இயல்பான ஆசைகள் அதிகம் பெற்றவள். நல்ல நல்ல புடவைகள் அணிந்து அழகாகத்திகழவேண்டும், சுகமாக வாழவேண்டும் என்றும் ஆசைப்படுகிறாள். அவளுடைய தந்தை நேர்மைமிக்கவர். போலீஸ் அதிகாரியான அவர் ஊழல்களைக் கண்டிப்பவர் லஞ்சம் வாங் காதவர். அதனால் இதர உத்தியோகஸ்தர்களால் வெறுக்கப் படுகிறார். ஓர் ஏழைக்கு மனைவியாக நேர்ந்த அவர் மகள்

திருப்தியின்றி வாழ்கிறாள். மகளின் கல்யாணத்துக்காக, தந்தை தவறு செய்கிறார். கைதாகி, சிறைத் தண்டனை அடைகிறார்.

கதாநாயகி, ஒரு சிறு தவறுக்காக, புருஷனால் வீட்டை விட்டு வெளியே தள்ளப்படுகிறாள். சிநேகிதி வீட்டில் இரவு நேரத்தைக் கழிக்க அவள் முயற்சிக்கிறாள். அங்கும் இடம் கிடைக்க வில்லை. தாசி ஒருத்தி அவளுக்குப் புகலிடம் தருகிறாள். இதன் விளைவாக அவள் தனது சமூகமதிப்பை இழக்கிறாள். தவறுகள் செய்கிறாள்.

அவள் திருந்தி தனது மதிப்பைப் பெறுவதற்கு எவ்வளவு முயற்சிகள் செய்தும் பலனில்லாது போகிறது. தாசிக்குப் பணமும் மதிப்பும் அளிக்கிற சமூகப்பெரியவர்களும் சனாதனிகளும் அவளை வெறுத்து அவமதிக்கிறார்கள். முடிவில் அவள், ஏற்றத் தாழ்வு இல்லாத ஒரு சமுதாயத்தில் உண்மையாக உழைத்து உயர்வாக வாழ வகைசெய்யும் ஒரு அமைப்பு முறையில் — தனது துயரங்களுக்கு மாற்று கண்டு சுகம் அடைகிறாள்.

இந்நாவலில், சமூகநிலைமைகளைத் தெளிவாக விவரிக்கும் பிரேம்சந்த் தமது கதைமாந்தரை அனுதாபத்துடன் கவனித்து, அவர்களுடைய வீழ்ச்சிகளை அக்கறையோடு சித்திரிப்பதை வாசகர் உணரமுடியும்.

ஆயினும், பிரேம்சந்தின் நாவல்கள் சரத்சந்திரர் படைப்பு களைப் போல் படிப்பவரின் உள்ளத்தைத் தொடக் கூடியவை அல்ல, தாகூரின் நாவல்கள் போல் தனிஅழகும் இனிமையும் கொண்டன அல்ல என்ற குறையும் வாசகர்களிடையே எழுவது உண்டு.

சரத்சந்திரர் உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து எழுதினார். மென்மையான உறவுகளுக்கும், அவ்உறவுத் தொடர்பு களினாலும் சிக்கல்களினாலும் பாதிக்கப்படும் நுண் உணர்வு களுக்கும் தனது நாவல்களில் பெரும் இடம் அளித்தார். கவிஞரான தாகூர் அழகியலுக்கும் கற்பனை நயத்துக்கும் ஆன்மீக உணர்வு களுக்கும் பிரதானம் கொடுத்து நாவல்கள் எழுதினார். ஆனால் பிரேம்சந்த், மண்ணின் மக்களைப் பற்றி, அவர்களுக்கே உரித்தான குணநலன்கள் குறைபாடுகளைப் பற்றி எழுதியதோடு, சமூகத் தையும் வாழ்க்கை அவலங்களையும் எதிர்த்து எழும் மனிதரின் போராட்டங்களையும், போராடும் சக்திகளைக் குறித்தும் எழுதினார்.

பிரேம்சந்தே குறிப்பிட்டிருக்கிறார்: நான் மென்மையான உணர்வுகளைப் பெரிதுபடுத்தவில்லை. போராட்டங்களையே சித்திரிக்கிறேன். மனிதர் எதிர்த்துப் போராடவேண்டும் என்பதற் காகவேதான் எழுதுகிறேன். ஆகவே என் எழுத்துக்கள் கடுமையாகத் தான் இருக்கும்.

மகாத்மாகாந்தியின் போராட்ட இயக்கங்களும், இந்திய மக்களின் தேசிய விடுதலை எழுச்சியும், அவரை வெகுவாக பாதித்தன. இவற்றை ஆதாரமாகக்கொண்டு பிரேமாசிரமம் என்ற நாவலை அவர் எழுதினார்.

லட்சியமனிதனைப் பற்றிய அவருடைய உருவகம் இந்த நாவலில் இடம் பெற்றுள்ளது. இதன் கதாநாயகனான பிரேம் சங்கர் பொறுமைசாலி. வாழ்வு நெடுகத் துயருறுகிறவன். ஆனால், அநியாயத்தை எதிர்கொள்கையில் எஃகு போல் உறுதியாக நின்று சமரிடுபவன். மிராசுதார் வர்க்கத்தைச் சேர்ந்தவன். எனினும், விவசாயிகளிடம் ஆழ்ந்த அனுதாபம் கொண்டவன். உயர்ந்த மனிதாபிமானி. நல்லமனிதன். அவன் நிறுவுகிற பிரேமாசிரமம் ஒரு லட்சிய அமைப்பு. அங்கே மண்ணை உழுது உழுது உழைக் கிறவர்கள் அதிலிருந்து வருவதைக்கொண்டு வளமான வாழ்வு வாழமுடிகிறது.

பிரேம்சந்தின் மற்றொரு பெரிய நாவலான ரங்கபூமி தனி ரகமான கதாநாயகனை அறிமுகப்படுத்துகிறது. ஒரு குருட்டுப் பிச்சைக்காரன். ஓடும்வண்டிகளின் பின்னே ஓடிஓடிப் பிச்சை ஏற்றுப்பிழைப்பவன். அசாதாரமான தன்மானம், தாராளமனம். உரிமைகளுக்காகப் போராடும் குணம் ஆகியவைவையும் பெற்றி ருக்கிறான். வாழ்க்கையில் அறிந்திருந்த குருட்டுப் பிச்சைக்காரன் ஒருவனையும் இந்தியாவின் மகத்தான பக்கிரியாக விளங்கிய மகாத்மாகாந்தியையும் இணைத்து இந்தக் கதாபாத்திரத்தை, பிரேம்சந்த் உருவாக்கியுள்ளார் என்று கருதப்படுகிறது.

கிராம சமுதாயவாழ்வை, கிராமவாசிகளின் நீங்காத வறுமை யையும் துன்பங்களையும் பொறுமையையும் ரங்கபூமி நாவல் வர்ணிக்கிறது. மக்களின் வறுமைக்கும் சோகமயமான வாழ்வுக்கும் நிலஉடைமைக்காரர்களைப் போலவே, புதிதாகத் தொழிற் சாலைகள் அமைக்கும் பணஅதிபர்களும் காரணஸ்தர்களாகி றார்கள். தொழில்துறையை விரிவுபடுத்தி இயந்திரமயப்படுத்துவதன் வாயிலாக உழைப்போரின் உழைப்புச் சுமை குறையும் என்பதை, பிரேம்சந்த் ஏற்றுக் கொண்டதாகத் தெரியவில்லை.

அவர் தமது நாவல்களின் மூலம், மக்களுக்கு எதிராக இழைக்கப்படுகிற சமூக அநியாயங்களை எடுத்துச்சொல்வதை விரும்பினார். அவ்வாறு சுட்டிக்காட்டுவதன் வாயிலாக அநியாயங் களை எதிர்க்கும் விழிப்புஉணர்வை மக்கள் உள்ளத்தில் தூண்டி விட பிரேம்சந்த் ஆசைப்பட்டார் என்றே தோன்றுகிறது.

மண்ணகத்தில் நியாயம் நிலைநிறுத்தப்படவேண்டும். இதுவே பிரேம்சந்தின் இதய ஒலியாக இருந்தது.

இவ்வளவு அதிகமான சுயநலமும், பொறாமையும்,

அநியாயமும் நிலவுகிற ஒரு உலகத்தைக் கடவுள் ஏன் படைத்தார்? எல்லா மனிதர்களும், அனைத்து சமூகங்களும், அமைதியோடும் ஆனந்தமாகவும் வாழக்கூடிய ஒரு உலகத்தை உண்டாக்குவது சாத்தியமில்லையா? இது என்ன நியாயம்? ஒருவன் சுகபோகங் களில் புரளுவது, இன்னொருவன் திண்டாடித் திரிய நேர்வது! ஒரு தேசீய இனம் மற்றொரு இனத்தை அடக்கி ஆண்டு அதன் ரத்தத்தை உறிஞ்சிக்கொழுப்பது, அதேசமயம் அந்த மற்றைய இனம் அடிமைப்பட்டு அவதியுற்றுப் பஞ்சமும் பட்டினியுமான நிலையில் உழல்வது! இத்தகைய அநியாயமான உலகம் கடவுளால் படைக்கப் பட்டிருக்க முடியாது.

இந்த விதமான சிந்தனைகள் பிரேம்சந்த் நாவல்களில் கிடக்கக் காணலாம். அவருக்குப் பிடித்தமான கதைப் பொருள் களாய் சில விஷயங்கள் அவரது நாவல்களிலும் கதைகளிலும் பலமுறை கையாளப்பட்டிருப்பதையும் வாசகர் உணரமுடியும். பெண்கள், நகைகள். பகட்டான ஆடைகள் மீது கொண்டுள்ள மோகம் இது காரணமாகக் கணவனுக்கு ஏற்படும் கவலைகளும் துயரங்களும்.

விவசாயிகளின் துயரவாழ்வு. அவர்கள் அனுபவிக்கும் கஷ்டங்கள்.

சமூகத்தில் உள்ள கல்யாணமுறைகள், வரதட்சணை, இதனால் பெண்கள் அனுபவிக்கும் துயரங்கள், விதவையின் அவலம். மாற்றாந்தாயின் போக்குகள்.

சமூகச் சண்டைகள், சமுதாய இயக்கங்கள், தேசிய விடுதலைக் கிளர்ச்சிகள், மக்களின் ஒருங்கிணைந்த எழுச்சிப் போராட்டம்.

சமூக அநியாயங்கள், எத்தர்கள், போலிகளின் பம்மாத்துக்கள்.

இந்தவிதமான பொருள்களைச் சித்திரிக்கும் நாவல்களை, சிறுகதைகளை பிரேம்சந்த் வாழ்க்கையின் இறுதிவரை எழுதிக் கொண்டேயிருந்தார்.

கர்மபூமி என்ற நாவல் புரட்சித் துடிப்பு நிறைந்தது. பொங்கி எழுந்த இந்தியமக்களின் போராட்ட உணர்வை அக்காலத்திய நிகழ்ச்சிகளை வீறுகொண்ட தலைவர்களின் முழக்கங்களை எல்லாம் எதிரொலிக்கும் இலக்கியப்படைப்பு இது.

பிரேம்சந்தின் மகத்தான படைப்பு என மதிக்கப்படுவது கோதான் நாவல். இந்தியாவின் நெடுநாளையத் துன்பத் துயரங் களை ஒரு பாத்திரத்தின்மூலம் உருவகப்படுத்தினார் அவர். இதன் கதாபாத்திரமான ஹோரி துயருறும் இந்தியாவின் உருவகம். அடக்கி ஒடுக்கப்பட்டு, சுரண்டப் பெற்று காலம் காலமாக

அவமதிப்புகளுக்கு உள்ளாகி வந்தபோதிலும் தனது சுயத் தன்மையை இழக்காத தன்னுடைய விசால இதயத்தையும், பரந்த நோக்கையும் இழந்துவிடாத மாண்பு நிறைந்த உருவம். இந்நாவலில் பலவிதமான பாத்திரங்கள் — கிராமங்களிலிருந்தும், நகரங்களிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். எங்கெங்கும் வேகமாகப் பரவுகிற சுரண்டல், சுயநலம், பேராசை இவற்றை எதிர்க்கிற மனிதர்கள். தீமைகளை, கோளாறுகளை எதிர்த்துச் சமரிட்டுப் புதியஉலகம் படைக்கப் போராடுகிறவர்கள். இச்செயல் முறையில் தாங்களே மாறிவிடுகிறவர்கள் — மேன்மையாளர் களாகவும் புரட்சி வீரர்களாகவும் வளர்கிறவர்கள். ஆசிரியரின் லட்சிய வேகம் இந்நாவலில் நன்கு செயல்பட்டுள்ளது.

பிரேம்சந்த் பொருளாதார நிலையை உயர்த்திக் கொள்வ தற்காக, சில முயற்சிகளில் ஈடுபட்டதும் உண்டு. சொந்த அச்சகம் வைத்து நடத்தினார். பத்திரிகைகள் ஆரம்பித்தார். புத்தகப்பிரசுரம் செய்து பார்த்தார். கடைசியாக, சினிமாவுக்கு கதை வசனம் எழுதவும் போனார். ஆனால், எதுவும் சரிப்பட்டு வரவில்லை. நஷ்டங்களும் கஷ்டங்களும் அதிகரித்தன.

அவர் வாழ்நாள் முழுவதும் ஆரோக்கியக் குறைவினாலும் அவதிப்பட்டார். பொருளாதாரத் தொல்லைகளினாலும் நீடித்த வயிற்றுநோய்களினாலும் மிகுந்த சிரமங்களை அனுபவித்த பிரேம் சந்த் 1936 அக்டோபரில் தமது 65வது வயதில் மரணமடைந்தார்.

கடைசிக்காலத்தில் அவர் எழுதிக்கொண்டிருந்த மங்கள சூத்திரம் என்ற நாவல் அரைகுறையாக நின்றுவிட்டது.

இந்தி நாவல், சிறுகதை இலக்கியத்தில் — அதன் மூலம் இந்தியஇலக்கியத்தில் — தனிப்பெரும் சுடராக ஒளிர்ந்த, ஒளிர்கிற போராட்ட வீரர் பிரேம்சந்தின் நூறாவது ஆண்டு எனும் சிறப்பை 1980 பெறுகிறது. இந்தியா மாண்புறுவதற்கு வகைசெய்த பெரி யோர்களில் பேனாவீரர் பிரேம்சந்தும் ஒருவர் ஆவார். சக்தி மிகுந்த அவருடைய எழுத்துக்கள் இளைய தலைமுறையினருக்கு வழிகாட்டட்டும்.



# புதுமைப்பித்தனின் விமர்சனப் பார்வை

புதுமைப்பித்தன் முதன்மையாக ஒரு படைப்பாளி. அவர் இலக்கியவிமர்சகர் அல்லர். அவர் தீவிரமாகவும் சிரத்தையோடும் இலக்கிய விமர்சனத்தில் ஈடுபட்டதுமில்லை.

புதுமைப்பித்தனும் அவரது சமகால எழுத்தாளர்களும் முக்கியமாக சிறுகதைகள் எழுதுவதிலேயே ஆர்வம் உடையவர்களாக இருந்தார்கள். வாழ்க்கை உண்மைகளைப் பிரதி பலிக்காத மேம்போக்கான பொழுதுபோக்குக் கதைகளே தமிழில் எழுதப்பட்டுக் கொண்டிருந்த காலத்தில் தமிழ்ச் சிறுகதைக்கு ஆழமும் கனமும் புதுமையும் இலக்கியத்தரமும் சேர்க்க வேண்டும் என்பதில் கருத்தாக இருந்தார்கள் அவர்கள். அம்முயற்சியில் அவர்கள் வெற்றியும் பெற்றார்கள்.

புதுமைப்பித்தனுக்கும் அவர் காலத்திய படைப்பாளிகளுக்கும் மணிக்கொடி என்ற பத்திரிகை தகுந்த எழுத்துத்தளமாகப் பயன் பட்டது. அந்த மாதம் இருமுறை இதழ் ஒரு காலகட்டத்தில் சிறுகதைப் பத்திரிகையாக மட்டுமே வெளிவந்தது. அது விமர்சனத்தை வளர்க்கவில்லை.

பொதுவாக, தமிழில் இலக்கிய விமர்சனம் ஒரு ஒதுக்கப்பட்ட துறையாகவே இருந்து

வருகிறது. 1920களில் வ.வே.சு. ஐயர் ரசனாபூர்வமான விமர்சனத்தில் அக்கறை காட்டி, புதுமுறை விமர்சனத்தின் முன்னோடியாய், சில முயற்சிகளைச் செய்துள்ளார்.

அதன்பிறகு கூட விமர்சனத்தில் கவனம் செலுத்த வேண்டியது அவசியம் என்ற உணர்வு எழுத்துலகில் ஏற்படவில்லை. பண்டிதர்களும் பேராசிரியர்களும், திருக்குறள் பற்றியும், கம்பராமாயணம் பற்றியும், எப்பவாவது சங்ககாலப் பாடல்கள் பற்றியும், எழுதுவதிலும் பேசுவதிலும்தான் உற்சாகம் காட்டி வந்தார்கள்.

எனவே, அன்றையப்படைப்பாளிகள் தமிழில் புதுமை இலக்கியம் படைப்பதுதான் முக்கியத் தேவையாகும் என்று கருதினார்கள். அவர்கள்கூட சிறுகதைகள் மட்டுமே எழுதிக் கொண்டிருந்தார்கள். எப்பவாவது ஓரங்கநாடகம் எழுதினார்கள். விமர்சனம் எழுதுவதற்குப் போதுமான நவீன படைப்பிலக்கிய முயற்சிகள் உருவாகவில்லை இன்னும் என்றே அவர்கள் கருதினார்கள். இருப்பினும், தங்கள் பார்வைக்கு வந்த புத்தகங்கள் குறித்து, அவர்களில் சிலர் மதிப்புரை எழுதியதும் உண்டு.

மணிக்கொடி பத்திரிகை புத்தகமதிப்புரைக்குப் பல பக்கங்களை ஒதுக்கி வந்தது. புதுமைப்பித்தனும் புத்தக மதிப்புரை எழுதியிருக்கிறார். மதிப்புரை பற்றிய தனது கருத்தை விரிவான ஒரு கட்டுரையாகவும் அவர் எழுதியுள்ளார்.

மதிப்புரை என்றால் என்ன? என்று கேட்டுக்கொண்டு அவரே இவ்வாறு விளக்கம் தருகிறார்.

மதிப்புரை பொதுவாக இலக்கிய விசாரமான ஆராய்ச்சி அல்ல. ஒரு புதுப்புத்தகம் வந்திருக்கிறது. இது இன்ன மாதிரி எழுதப்பட்டிருக்கிறது என்று கண்டிருந்தால் போதும். ஆனால் இன்று வெளிவரும் புத்தகங்கள் எல்லாம் தம்மை ஒரு இலக்கிய மைல்கல் என மார்தட்டிக்கொண்டு வருகின்றன. இப்படிப்பட்ட தொரு மயக்கநிலையைப் போக்கச் சற்றுக் காரமான கருத்துக்கள் வெளியிடப்படுவது குற்றமல்ல. மதிப்புரை எழுதுகிறவனிடம் எதிர்பார்க்க வேண்டியது ஒன்றுதான். நல்ல இலக்கியத்தைக் காணும்பொழுது அதைத் தெரிந்துகொள்ளவும், பரிச்சயம் செய்து வைக்கவும், அவனிடம் திராணி வேண்டும். அப்படியே போலியைக் காணும்போது யார் வந்து நெற்றிக்கண்ணைத் திறந்தாலும், அது போலி என்று சொல்லுவதற்கு நெஞ்சு அழுத்தம் வேண்டும்.

புதுமைப்பித்தன் கூறுகிற இந்தக் குணம் நேர்மையான விமர்சகனுக்குத் தேவையான ஒன்றுதான்.

புதுமைப்பித்தன், விமர்சனம் என்று முறையாக எதுவும் எழுதவில்லை என்றாலும், பொதுவாகக் கருத்துக்களை எடுத்துச் சொல்கிறபோது துணிச்சலோடு தனது அபிப்பிராயத்தை ஓங்கி அடிக்கத் தவறியதில்லை.

பொதுவாக, ஒரு மொழியில் வெளிவந்துள்ள சிறப்பான எழுத்தை மேல்நாட்டு இலக்கியத்துடன் ஒப்பிடுவது எழுத்தாளர் களின் வழக்கமாக இருக்கிறது. அது படைப்பாளிக்கும், படைப்பைப் பற்றிப் பேசுகிறவருக்கும் பெருமையும் மகிழ்ச்சியும் தருகிறது என்று சொல்லலாம்.

ஆனால், புதுமைப்பித்தன் இதுபற்றி மாறுபட்ட ஒரு நோக்கு கொண்டிருந்தார். அவர் எழுதுகிறார்:

எழுதுகிறவர்களைக் கேட்டால், நம்முடைய இன்றைய சாதனையை மேல்நாட்டு இலக்கியங்களுடன் தைரியமாக ஒப்பிட வேண்டும் என்பார்கள். இது எதற்காகச் செய்ய வேண்டிய காரியமோ தெரியவில்லை. நம்மூர் நாயர் ஓட்டல் இட்லியையும் பரமசிவம்பிள்ளை ஓட்டல் தோசையையும் ஹன்ட்லி பாமர்ஸ் பிஸ்கோத்துடன் வெற்றிகரமாக ஒப்பிட்டு வெளிவரும் கருத்துக் களைக் காணப்பெறும் பாக்கியம் எனக்கு இதுவரை சித்திக்க வில்லை. இலக்கியத்துக்குள் தான் இக்கோளாறு.

புதுமைப்பித்தன், ஆரம்பகால நாவல்கள், சிறுகதைகள் குறித்து விமர்சன நோக்குடன் சில கருத்துக்கள் தெரிவித்திருக் கிறார். அவை அவருடைய ரசனையையும் இலக்கிய மதிப்பீட்டுத் திறனையும் புலப்படுத்துகின்றன.

தமிழ் நாவல்கள் பற்றி அவர் எழுதியுள்ள பகுதி:

தமிழுக்குச் சிறுகதையும் புதிது. இதனால் அவ்வளவு உயர்ந்த இலக்கியங்கள் இருக்காது என்று எதிர்பார்ப்பது சகஜம். ஓரளவு உண்மை. தமிழ்நாட்டு நாவல்களை, இலக்கியத்தில் ஸ்தானம் பெறக்கூடிய நாவல்களை, விரல்விட்டு எண்ணிவிடலாம். வேத நாயகம்பிள்ளைதான் தமது பிரதாப முதலியார் சரித்திரத்தில் நாவல் என்ற மேல்நாட்டுச் சரக்கைத் தமிழருக்கு அறிமுகப்படுத்து கிறார். இவரைத் தமிழ் நாவலின் தந்தை என்றே கூறிவிடலாம். அது, நாவலின் குறைகளை எல்லாம் தன்னுள் அடக்கியும். சுவை குன்றாமல் இருப்பதுதான் அதன் அழகு. அது உண்மையில் நம் நாட்டில் வழங்கிவரும் மரியாதைராமன், தெனாலிராமன் கதை களை ஒரே கதையில் திரட்டி வைக்கப்பட்டதுதான்.

இதே போல, இதர ஆரம்பகாலத் தமிழ் நாவல்கள் பற்றியும் அவர் தனது கருத்தை வெளிப்படையாகக் கூறுகிறார். கமலாம்பாள் சரித்திரம் பற்றிய அவர் விமர்சனம் பின்வருமாறு உள்ளது.

ராஜமையரின் கமலாம்பாள் சரித்திரம் இதன் முற்பகுதி நாவல். பிற்பகுதி கனவு. ஹிந்து சமுதாயத்தில் எந்த அற்புதமும் சர்வசாதாரணம் என்று கருதப்படுவதினால்தான். நமக்கு அதன் சுவை கடைசிவரை குறையாமல் இருப்பதுபோல் தோன்றுகிறது. உண்மையில் அந்த ஜீவப்பிரம்ம ஐக்கியம். வேதாந்தத்தில் அற்புத

மாக இருக்கலாம். அது கதையின் ரசனைச்சுவையைக் குறைக்கிறது என்பதில் தடையில்லை.

பத்மாவதி சரித்திரம் பற்றிய புதுமைப்பித்தன் கருத்தும் நேர்மையான விமர்சனமேயாகும். அவர் சொல்வது:

மாதவையாவின் பத்மாவதி சரித்திரத்திற்கும் தமிழ்நாவலில் இரண்டாவது ஸ்தானம்தான் கிடைக்கும். மாதவையா தமது கதையில் தமிழ்நாட்டில் இருபது முப்பது வருடங்களுக்குமுன் இருந்த கிராம, பட்டின வாழ்க்கையை மிகவும் திறமையாகச் சித்திரித்திருக்கிறார். இருந்தாலும் அவருடைய இலக்கியங்கள் யாவும் பிரசார மனப்பான்மையில் எழுந்தவையாதலின், அதிலும் பிரசாரத்தின் அமுலின் கீழ்தான் கதையின் போக்கு இருந்து வருவதாலும், கதாபாத்திரங்கள் அவ்வளவு திறமையுடன் சித்திரிக்கப் படவில்லையாதலினாலும், அந்த நாவலை அவ்வளவு உயர்வாகச் சொல்லமுடியாது. இந்த வகுப்பில் மைதிலி, திக்கற்ற இருகுழந்தைகள், பொற்றொடி என்பவைகள் எல்லாம் இடம் பெறும். இவையாவும் தமிழ்நாவல்களின் வளர்ச்சியின் மைல் களாகக் கொள்ளலாமேயன்றி பூரணவளர்ச்சியைப் பெற்ற தமிழ் நாவலின் இலக்கியமாக ஒன்றையும் கூற முடியாது.

ஆரம்பகாலத் தமிழ்நாவல்கள் குறித்த புதுமைப்பித்தனின் கருத்துக்கள் இலக்கியரசிகர்களால் ஏற்றுக்கொள்ளத் தக்கன வாகவே இருக்கின்றன.

தமிழ்ச் சிறுகதைகள் குறித்து, புதுமைப்பித்தன் உயர்ந்த அபிப்பிராயம் கொண்டிருந்தார். அவருடைய கருத்துக்கள் கவனத்தில் கொள்ளப்படவேண்டியவை. அவர் எழுதியிருப்பது:

சிறுகதைகள் தமிழில் அற்புதமாக அமைந்திருக்கின்றன. நான் படித்த பழைய கதைகளில் கண்ணன் பெருந்தூது என்ற கதை தமிழ்ச் சிறுகதைகளின் இலட்சியம் என்றே கூறலாம். அதன் அமைப்பு வெகுஅற்புதமாக விழுந்திருக்கிறது. குசிகர் குட்டிக் கதைகள் என்பவைகளைச் சிறுகதை என்ற ஹோதாவில் நாம் கவனித்தால் அதற்கு அவ்வளவாக ஒரு பெரிய ஸ்தானம் கொடுக்கமுடியாது.

வ.வே.சு. அய்யரின் கதைகள் தமிழிலேயே எந்த நாட்டு நாகரீகத்தையும் உணர்ச்சியையும் சித்தரிக்கலாம். தற்காலத்து நாவலாசிரியர்கள் என்று சம்பிரதாயமாகக் கூறப்படும் மொழி பெயர்ப்பாசிரியர்களுடைய தமிழுடையணிந்த வெள்ளைக்காரக் கதாபாத்திரங்கள் சித்தரிப்பது அனாவசியம் என்று எடுத்துக் காட்டும் ஒரு அளவுகோலாக இருக்கிறது. அவருடைய லைலா மஜ்னு, எதிரொலியாள், அழேன் ழுக்கே முதலிய கதைகளில் அன்னிய நாட்டுக் கதாபாத்திரங்கள் மிகவும் திறமையாகச்

சித்தரிக்கப்பட்டிருக்கின்றன. அய்யரவர்களின் சிறுகதைகள் மிகவும் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவைகள். அவர் தமது சிருஷ்டி களில் மனிதனின் மேதையை, தெய்வீகத் துயரத்தை வீரத்தைக் காண்பிப்பதில் களித்தார். இலட்சியத்தை சிருஷ்டிப்பதில் லயித்தது அவர் உள்ளம்.

வ.வே.சு.அய்யரின் கதைகள் பற்றிய புதுமைப்பித்தன் அபிப்பிராயம் இன்றைய விமர்சகர்களுக்கு உடன்பாடானது அல்ல. அய்யரின் கதைகள் அனைத்தும் சிறந்த கதைகள் என்று இலக்கிய ரசிகர்கள் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். தமிழ்ச் சிறு கதைக்கு இலக்கியவடிவம் கொடுத்தவர். புதிய சோதனை ரீதியான கதைகள் எழுதியவர் என்ற பெருமை அய்யரைச் சேரும்.

புதுமைப்பித்தன் தனது காலத்தில் சிறுகதைப்படைப்பில் ஏற்பட்ட மாற்றத்தையும், அவரது சமகாலப் படைப்பாளிகளின் திறமையையும் மதிப்பிட்டுக் கருத்து தெரிவித்திருக்கிறார். அது வரலாற்றுரீதியில் சிறுகதையின் வளர்ச்சிப் பாதையைச் சுட்டிக் காட்டுகிறது.

மனிதனின் சிறுமைகளை, தப்பிதங்களை, அதில் அவன் நாடும் வெற்றியை, இலக்கியமாக சிருஷ்டிப்பதற்கு, நல்லகலைத் திறமையுடன் சிருஷ்டிப்பதற்கு வெகுகாலம் சென்றது. தமிழுக்கு விமோசனம் கிடையாது என்று நினைத்துக் கொண்டிருக்கும் சமயத்தில், வெள்ளி முளைத்தாற்போல் சிறுகதை எழுதுகிறவர்கள் தோன்றி இருக்கிறார்கள். அவர்களுடைய எழுத்துக்கள், கற்பனைகள் எல்லாம் தமிழுக்குப் புதியவை. இந்த எழுத்தாளர்களின் கற்பனை களில் யாவும் இடம் பெறுகின்றன. இவர்களுடைய எழுத்துத் திறமையின் நிரந்தர வாழ்வைப் பற்றி வருங்காலந்தான் கூற வேண்டும்.

ஆனால் இவர்களுக்குள் இரண்டு மூன்று பேர்களின் எழுத்துக்கள் சாகாத எழுத்துக்கள் என்று கூறலாம். நட்சத்திரக் குழந்தையின் ஆசிரியரும் விஜயதசமி என்ற கதையின் ஆசிரியரும் தமிழ்நாட்டின் கற்பனைப் பொக்கிஷங்கள் என்று கூறவேண்டும். இருவருடைய கலையுணர்ச்சியும் சிருஷ்டித்திறனும் இவர்களை எழுத்தாளர்களின் விதிவிலக்காக்குகிறது.

புதுமைப்பித்தன் குறிப்பிட்டுள்ள நட்சத்திரக் குழந்தை என்ற கதையின் ஆசிரியர் பி.எஸ்.ராமையா. விஜயதசமி எனும் கதையின் ஆசிரியர் ந. பிச்சமூர்த்தி.

மற்றொரு இடத்தில், தமிழிலே நட்சத்திரக் குழந்தைகள், சிவசைலம், எங்கிருந்தோ வந்தான், கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும் என்ற தலைப்பில் வெளிவந்துள்ள கதைகள் ஒப்புயர்வற்றவை என்று புதுமைப்பித்தன் குறிப்பிட்டிருக்கிறார். இக்கதைகளை

எழுதியவர்கள் முறையே பி.எஸ். ராமையா. த.நா. குமாரஸ்வாமி, மௌனி, புதுமைப்பித்தன் ஆகியோர்.

மௌனியின் திறமையையும், அவரது எழுத்தின் தனித் தன்மையையும் முதன்முதலில் எடுத்துக்காட்டியவர் புதுமைப் பித்தனேயாவார்.

தமிழ்மரபுக்கும் போக்குக்கும் புதிதாகவும் சிறப்பாகவும் வழிவகுத்தவர் ஒருவரைச் சொல்ல வேண்டும் என்றால், மௌனி என்ற புனைபெயரில் எழுதி வருபவரைத் தான் குறிப்பிட வேண்டும். அவரைத் தமிழ்ச்சிறுகதையின் திருமூலர் என்று சொல்லவேண்டும். கற்பனையின் எல்லைக் கோட்டில் நின்று வார்த்தைக்குள் அடைபட மறுக்கும் கருத்துக்களையும் மடக்கிக் கொண்டு வரக்கூடியவர் அவர் ஒருவரே என்பது புதுமைப் பித்தனின் மதிப்பீடு.

புதுமைப்பித்தன் நல்ல கவிதைப்படைப்புகளை வெகுவாக ரசித்திருக்கிறார். அவர் படித்து ரசித்த தனிப்பாடல்கள், கம்பன் கவிதை, பாரதியார் — பாரதிதாசன் கவிதைகள் பற்றி எல்லாம் கட்டுரைகள் எழுதியுள்ளார். கவிதையின் தன்மை குறித்தும் அங்கங்கே தனது கருத்துக்களை அவர் அழுத்தமாகக் கூறியிருக் கிறார்.

கவிதையைப் பற்றிய ஆராய்ச்சி தமிழில் கிடையாது. தமிழில் செய்யுளியலைப் பற்றிய ஆராய்ச்சி இருந்திருக்கிறது. அதாவது கவிதையின் வடிவத்தைப் பற்றி நன்றாக ஆராய்ந்திருக்கிறார்கள். ஆனால் கவிதை என்றால் என்ன என்பதைப் பற்றித் தமிழர் ஆராயவே இல்லை.

உடற்கூறுநூல் படியாவிட்டால் உயிர்வாழமுடியாதென்று சொல்லமுடியாது. அதைப்போல இலக்கணம் இல்லாவிட்டால் கவிதை இருக்க முடியாதென்று கூறமுடியாது. ஆனால் கவிதையை ரசிப்பதற்குக் கவிதை என்றால் என்னவென்று தெரிந்திருக்க வேண்டும். தற்காலத்தில் பண்டிதர்கள் இலக்கியம் எது என்று கவனிக்கமுடியாமல், எல்லாவற்றையும் புகழ்ந்து கொண்டு இடர்ப் படுவதற்குக் காரணம், அவர்கள் இலக்கியம் என்றால் என்ன வென்று அறியாததுதான் என்று அவர் கூறுகிறார்.

கவிதை நீதிகளை, தர்மங்களை, உயர்கொள்கைகளைப் போதிக்கவேண்டும் எனும் இலக்கிய நோக்கை, புதுமைப்பித்தன் ஆதரிக்கவில்லை. அக்கொள்கைளை அவர் கடுமையாக எதிர்த் துள்ளார்.

கவிதையைப் போதனைக்குரிய கருவியாக உபயோகப் படுத்தும்வரை அது கவிதையாக இருக்காது. அதன் ரசனை கெட்டு விடுகிறது. ஒழுக்கமோ தர்மமோ அல்லது மோட்சமோ இவற்றிற்காக

எழுதப்படும் கவிதை கவிதையாகாது. ஒழுக்கமும் தர்மமும் மோட்சமும் கவிஞனது உள்ளத்தில் ஊறி இருதயத்தின் கனிவாக வெளிப்படும் இசைதான் கவிதையாகும். ஒழுக்கம் அற்றிருப்பது தான் கவிதையின் இலட்சணம் என்பதல்ல நமது கட்சி. கவிதையும் அமைப்பும் உணர்ச்சியும்தான் கவிதையின் உரைகல் என்பது புதுமைப்பித்தனின் கருத்து.

இலக்கியம் சம்பந்தமாக இருவித நோக்குகள் நிலவுகின்றன. இலக்கியம், படித்து ரசித்து மகிழ்வதற்கு உரிய இனிய கனவு. மகத்தான கற்பனைப்படைப்பு என்பது ஒரு நோக்கு. அது சரியல்ல. உள்ளத்தின் உயர்வுக்காகவும், மனிதகுல முன்னேற்றத் திற்காகவும் சமூகமேம்பாட்டுக்காகவும் பயன்படுவதுதான் நல்ல இலக்கியம் என்பது மற்றொரு நோக்கு.

இவ்விஷயத்தில் புதுமைப்பித்தனின் கருத்து என்ன? இரண்டும் பாதி உண்மைகள் என்கிறார் அவர்.

இலக்கியம் மனிதனது மோகனமான கனவு. ஆனால் பயனற்ற கனவு என்று கொண்டுவிடுவது சரித்திரத்திற்குப் பொருந்தாத கூற்று. இலக்கியம் பிறக்கிறது. புதியவிழிப்பும் மக்களிடையே பிறக்கிறது. பிரஞ்சுப் புரட்சியே இதற்கு ஆதாரம். புதிய உதய கன்னியை முதல்முதலாக வரவேற்பவன் கவிஞன் தான். அவனது தரிசனம், மக்களிடையே ஓர் புதிய சமுதாயத்தை சிருஷ்டித்து விடுகிறது.

இதைச் சொல்லும் அவரே தொடர்ந்து தெரிவிக்கிறார்: ஆனால் இதைத் தர்க்கத்தின் அந்தம்வரை சென்று ஆராய்ந்தால், வெறும் பரிகசிப்பிற்குரிய கேலிக்கூத்தாகிறது. ஏனெனில், இந்தக் கொள்கைக்குப் புறம்பான உன்னதஇலக்கியங்கள் இருந்து, அந்தத் தர்க்கவாதத்தைச் சிதறடிக்கிறது. தர்மத்தின் உயர்ச்சிக்காகத்தான் இலக்கியம் என்றால், ரோஜாப் புஷ்பத்தின் அழகு, அதிலிருந்து அத்தர் எடுக்கும் தொழிலில் இருக்கும் லாபத்தைப் பொருத்திருக் கிறது என்று கொள்ளவேண்டும்.

கீட்ஸின் எண்டிமியன் என்ற காவியம் எந்தத் தர்மத்தைத் தூக்கி வைக்க இருக்கிறது? அதன் ஒரு வரியின் முன்பு, உலகத்தைத் தூக்கி நிறுத்தவதற்காகப் பாடுபடும் ஷாவின் நாடகங்கள் பூராவும் நிற்கமுடியுமா? என்று கேட்கிறார் புதுமைப்பித்தன்.

அவர் சொல்கிறார்: இலக்கியம் என்பது நாடிய பொருளைக் கூட்டுவிக்கும் சாதனம் என்று நினைத்திருப்பதைப் போன்ற தவறான அபிப்பிராயம் வேறு கிடையாது. இலக்கியம் உள்ளத்தின் விரிவு. உள்ளத்தின் எழுச்சி, மலர்ச்சி.

இலக்கியகர்த்தா வாழ்க்கையை அதன் பல்வேறு சிக்கல் களுடன் நுணுக்கத்துடன், பின்னல்களுடன் காண்கிறான். அதன்

சார்பாக அவன் உள்ளத்திலே ஒரு உணர்ச்சி பிறக்கிறது. அந்த உணர்ச்சியின் நாதந்தான் இலக்கியம்.

அவன் நோக்கில் பட்டது, பெயர் தெரியாத புஷ்பமாக இருக்கலாம். வெறுக்கத்தக்க ராஜீய சூழ்ச்சியாக இருக்கலாம். அல்லது மனித வர்க்கத்துக் கொடுமையின் கோரமாக இருக்கலாம். அதைப் பற்றிக் கவலையில்லை. அந்த அம்சத்தை நோக்கியவுடன் அவனது மனமும் இருதயமும் சலிக்கின்றன. அந்த சலனத்தின் பிரதிமையே இலக்கியம். இலக்கியத்தின் ஆதாரமே உணர்ச்சி தான் என்று புதுமைப்பித்தன் வலியுறுத்துகிறார்.

இலக்கியத்தின் உயிர்நாடி உணர்ச்சி. உணர்ச்சியில் எழாத தர்மசாஸ்திரங்கள், வாழ்க்கையைக்கீழே இழுக்கும் பாறாங் கல்லுகள். காரணம், உண்மையே இலக்கியத்தின் இரகசியம் என்று அவர் அறுதியிட்டுக் கூறுகிறார்.

விமர்சனம் என்ற தன்மையில் இல்லாவிட்டாலும் சில உண்மைகளைத் துணிச்சலுடன் வெளிப்படுத்துவதற்காக அவர் விமர்சனம் போன்ற கட்டுரைகள் சில எழுதியுள்ளார். கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி எழுதிய கதைகள் சுயமான படைப்புகள் அல்ல, பிறமொழிக்கதைகளின் தழுவல்தான் என்று காட்டுவதற்காக, புதுமைப்பித்தன் எழுதிய கட்டுரைகளும், தமிழில் எழுதி வெளியிடப்பட்ட பில்கணன் நாடகம் (ஏ.எஸ். ஏ.சாமி எழுதியது) சொந்தப்படைப்பு இல்லை. போலிப்பெருமை பெற உதவும் இரவல் சரக்குதான் என்று சுட்டுவதற்காக அவர் எழுதிய இரவல் விசிறிமடிப்பு என்ற கட்டுரையும் நல்ல உதாரணங்கள் ஆகும்.

தனக்கு உண்மை என்று தோன்றுகிற கருத்துக்களைத் துணிச்சலுடன், உரத்தகுரலில் எடுத்துச் சொல்லவேண்டும். மற்றவர்கள் ஏற்றுக் கொள்வார்களோ, இல்லையோ, தனக்குச் சரியென்றுபட்டதை ஓங்கி அடித்து (முரட்டடியாக) சொல்லிவிட வேண்டும். இதுதான் புதுமைப்பித்தனின் விமர்சனக் கொள்கை.



# புதுமைப்பித்தனின் புதுமைகள்

தமிழ்ச்சிறுகதை 1920-களில் நவீனத் தன்மையை அடையத் தொடங்கியது. வ.வே.சு. ஐயர்தான் தமிழ்ச் சிறுகதைக்குத் தற்காலத் தன்மையும் இலக்கிய வடிவமும் தந்தவர் ஆவார். அவர் ரீதிபுதிது என்ற இலக்கிய உணர்வோடு புதுத்தன்மை கொண்ட சிறுகதை களை எழுதினார்.

1930-களில் தமிழ்ச்சிறுகதை வேகமும் வனப்பும் பல்வேறு தனித்தன்மைகளும் பெற லாயிற்று. மணிக்கொடி எழுத்தாளர்கள் எனப் பின்னர் அறியப்பட்டவர்கள் அக்கால கட்டத்தில், வாழ்க்கையை அதன் சகல தன்மைகளிலும் இலக்கியத்தில் பதிவு செய்ய முனைந்தார்கள். அவர்களில் முக்கியமானவர் புதுமைப்பித்தன்.

1930 - களில் தலைகாட்டிய மறுமலர்ச்சிப் போக்கு குறித்து புதுமைப்பித்தன் இவ்வாறு எழுதியிருக்கிறார்: “ஒரு பேரலை எழுந்தது. அதில்தான் சிறுகதை தமிழில் பூரணவடிவம் பெற்றது. இதைச் சிறப்பாக மணிக்கொடியுகம் என்று சொல்லவேண்டும். இக்காலத்தில்தான் சிறுகதைக்கு இலக்கிய அந்தஸ்து ஏற்பட்டது. வாழ்வுக்குப்பொருள் கொடுப்பதுதான் கலை. சிறுகதை, வாழ்வின் பல சூட்சமங்களையும்

எழுத்தில் நிர்மாணித்துக் காண்பித்தது. சிறுகதைகள் வாழ்வை, உண்மையை நேர்நின்று நோக்க ஆரம்பித்தன".

மனிதனின் மேன்மைகளையும் உயர்ந்த பண்புகளையும் இலட்சியங்களையும் மட்டுமின்றி, அவனது குறைபாடுகளை, வக்கிரங்களை எல்லாம் மற்றும் மனிதசமூகத்தின் அவலங்களையும் அக்கிரமப்போக்குகளையும் கதைகளில் சித்திரிக்க வேண்டும் என்ற உணர்வு எழுத்தாளர்களுக்கு ஏற்பட்டது. உலக இலக்கியத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்த சிலர் தமிழ்ச் சிறுகதையையும் உலகஇலக்கியத்தின் தரத்துக்கு உயர்த்தவேண்டும் என்ற ஆர்வத்துடன் எழுதினார்கள். அவர்களில் முதன்மையானவர் புதுமைப்பித்தன்.

புதுமைப்பித்தன் குறிப்பிட்டிருக்கிறார்: "மனிதனின் சிறுமைகளை, தப்பிதங்களை, அதில் அவன் நாடும் வெற்றியை, இலக்கியமாக சிருஷ்டிப்பதற்கு வெகுகாலம் சென்றது. வெள்ளி முளைத்தாற் போன்று சிறுகதை எழுதுகிறவர்கள் தோன்றி இருக்கிறார்கள். அவர்களுடைய எழுத்துக்கள், கற்பனைகள் எல்லாம் தமிழுக்குப் புதியவை. இந்த எழுத்தாளர்களின் கற்பனைகளில் யாவும் இடம் பெறுகின்றன."

நடைமுறை விவகாரங்களைப் பற்றி எழுதுவதில் கௌரவக் குறைச்சல் எதுவும் இல்லை என்று தேர்ந்து துணிந்து புதிய போக்கில் கதைகள் எழுதினார் புதுமைப்பித்தன். புதுமை வேகம், வாழ்க்கை பற்றிக் கூர்மையான பார்வை, தனித்தன்மை கொண்ட சிந்தனை நுட்பம், பாத்திரப் படைப்பு, கதைமாந்தரின் துணிச்சல், அபாரமான தன்னம்பிக்கை, கதைகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பொருள்கள், அவற்றுக்குக்கலைவடிவம் கொடுத்த நேர்த்தி, ஈடு இணையில்லாத எழுத்தாற்றல், கையாண்ட நடை இவை காரணமாக புதுமைப்பித்தன்கதைகள், காலஓட்டத்திலும் புதுமைத் தன்மை குன்றாத தனிரகப்படைப்புகளாக விளங்குகின்றன.

மரபுரீதியான நிகழ்ச்சி அடுக்குகள் கொண்ட கதைகளைப் படித்துப் பழகிய வாசகர்களுக்கு, புதுமைப்பித்தன் கதைகள் புரட்சிகரமானவையாகவும் அதிர்ச்சி தரக்கூடியனவாகவும் இருந்தன. அநேகர் அவை புரியவில்லை என்றார்கள். அவர் கையாண்ட நடையும் சாதாரண வாசகர்களைச் சிரமப்படுத்துவதாகவே அமைந்திருந்தது.

"கருத்தின் வேகத்தையே பிரதானமாகக்கொண்டு, வார்த்தைகளை வெறும் தொடர்பு சாதனமாக மட்டும் கொண்டு, தாவித் தாவிச் செல்லும் நடை ஒன்றை நான் அமைத்தேன். அது நானாக எனக்கு வகுத்துக்கொண்ட ஒரு பாதை. அது தமிழ்ப் பண்புக்கு முற்றிலும் புதிது. அதைக் கையாண்ட நானும் கல்வி கற்றதனால்

தமிழ்ப்பண்புக்கு புதியவன். இதனால் பலர் நான் என்ன எழுது கிறேன் என்பது பற்றிக் குழம்பினார்கள். அந்தமுறையை நானும் சிறிது காலத்திற்குப் பிறகு கைவிட்டு விட்டேன். காரணம், அது சௌகரியக் குறைவுள்ள சாதனம் என்பதற்காக அல்ல. எனக்குப் பலமுறைகளில் கதைகளைப் பின்னிப் பார்க்கவேண்டும் என்ற ஆசையினால் அதைக் கைவிட்டு வேறு வழிகளைப் பின்பற்றினேன்" என்று புதுமைப்பித்தன் தனது எழுத்து பற்றி விவரித்திருக்கிறார்.

புதுமைப்பித்தன் விதம்விதமான முறைகளில் சோதனைகள் செய்து வெற்றிகண்டவர். கதைக்கான விஷயத்தைத் தேர்ந்து எடுத்து அதைக் கதையாகச் சொல்லும் முறையிலும் எழுதிச் செல்லும் விதத்திலும், நடையிலும், அவர் இறுதிவரை புதுமை செய்து கொண்டே இருந்தார் என்று சொல்லலாம். அவரது கடைசிக் கதையான கயிற்றரவு இதற்குச் சான்று கூறும்.

உலக இலக்கியவளர்ச்சியை நன்கு கவனித்து, சிறுகதைப் போக்குகள் பற்றிச் சிந்தித்து, அவ்வழிகளில் தமிழ்நாட்டின் மக்கள் வாழ்க்கை, அவர்களுடைய மனநிலைகள் சம்பந்தமான புதுமைக் கதைகளை அவர் எழுதினார். அவருடைய கதைகளில் அநேகம் கதைகளே இல்லை, வெறும் ஸ்கெச்சஸ்; வாழ்க்கை பற்றிய சொற் சித்திரங்கள்தான், என்று விமர்சகர்கள் கூறுவது சகஜமாக இருக்கிறது. உலக இலக்கியப் போக்கின்படி அவ்விதமான எழுத்துக் களும் சிறுகதைகளே ஆகும்.

புதுமைப்பித்தன் நன்கு உணர்ந்து வேண்டுமென்றே கையாண்ட உத்திகளில் இந்தப் போக்கும் அடங்கும். இதற்கு அவருடைய வார்த்தைகளே சான்று.

"அவற்றில் கதைக்கு உரிய கதைப்பின்னல் கிடையா. அவற்றிற்கு ஆரம்பம் முடிவு என்ற நிலைகளும் பெரும்பான்மை யாகக் கிடையா. மனஅவசத்தின் உருவகம் கதைகள் என்பதை ஒப்புக்கொள்வதானால் அவை கதைகள் ஆகும். இம்மாதிரியான முறையை அனுஷ்டித்து மேல்நாட்டில் கதைகள் பிரசுரமாவது சகஜம். அந்த முறையை முதல்முதலாகத் தமிழில் இறக்குமதி செய்த பொறுப்பு அல்லது பொறுப்பின்மை என்னுடையதாகும்" என்பது அவர் கூற்று.

"பேரளவு துன்பத்தின் சாயை படியாது வெறும் உயிர்ப் பிண்டமாக வாழ்ந்த ஒரு வாலிபன் திடீர் என்று உலகத்தில் இயல்பாக இருந்துவரும் கொடுமைகளையும் அநீதிகளையும் சமூகத்தின் வக்கிரவிசித்திரங்களையும் கண்டு, ஆவேசமாக, கண்டதைத் தனது மனஇருட்டில் தோய்த்துச் சொல்லிய பேய்க் கனவுகளாகும்" என்றும் அவர் தனது கதைகள் பற்றிக் குறிப் பிட்டிருக்கிறார்.

ஆயினும், அவரது அனைத்துக் கதைகளும் பேய்க்கனவுகள் என்ற தன்மையில் இல்லை. மனித சமூகத்தின் அவலங்களையும் சிறுமைகளையும் கண்ட ஒரு கலைஉள்ளத்தின் வேதனைகளாகவும், சோக உயிர்ப்புகளாகவும் அவருடைய பல கதைகள் அமைந்திருக்கின்றன. மனிதரின் சிறுமைகளையும் பலவீனங்களையும், வாழ்க்கை முரண்பாடுகளையும் கண்டு பரிகசிக்கிற, கிண்டல் பண்ணுகிற, மனசின் குரல்களாக அநேகக் கதைகள் காணப்படுகின்றன.

ஒரு தனிச்சம்பவம் அல்லது உணர்ச்சி அல்லது குண விஸ்தாரம் அல்லது வர்ணனை எடுத்தாளப்படும் லிரிக் என்ற கவிதைப்பகுதி போல் சிறுகதை எழுதுவதிலும் புதுமைப்பித்தன் ஆர்வம் காட்டினார். அவற்றுக்கென்று சிறுசிறு வாக்கியங்களைக் கொண்ட தனிநடையையும் அவர் கையாண்டார். தெருவிளக்கு, மிஷின்யுகம், பொன்னகரம், கவந்தனும் காமனும் போன்ற பல கதைகள் இத்தன்மை கொண்டவை.

இப்படிப்பட்ட கதைகளிலும் வாழ்க்கையின் யதார்த்தங்களைச் சுட்டிக்காட்டி, போகிறபோக்கில் தனது சிந்தனைகளையும் உரக்கச்சொல்லி, வாசகரையும் சிந்திக்கத் தூண்டுகிறார் புதுமைப்பித்தன். "பசி ஐயா பசி; பத்தும் பசி வந்திடப்பறந்துபோம் என்று வெகு ஒய்யாரமாக உடம்பில் பிடிக்காமல் பாடுகிறீரே அங்கு நீர் ஒருநாள் இருந்தால் உமக்கு அடிவயிற்றிலிருந்து வரும் அதன் அர்த்தம்." இது ஒரு கதையில் வருவது.

இருட்டில் விபசாரம் நடப்பதைச் சுட்டிக்காட்டி, நாசூக்காகக் கண்ணை மூடவேண்டாம். நீங்கள் போட்டிருக்கிறீர்களே பாப்ளின் ஷர்ட்டு, உங்கள் ஷெல்பிரேம் கண்ணாடி, எல்லாம் அவர்கள் வயிற்றில் இருக்க வேண்டியதைத் திருடியதுதான். இப்படிக் குத்தலாக உண்மைகளை அங்கங்கே சிதறிச் செல்வது அவருடைய பாணி. கண்கள் இருப்பது எதையும் பார்ப்பதற்குத் தான் என்ற இரும்புத்தத்துவம் பெற்றிருக்கவேண்டும் என்று குறிப்பிடும் புதுமைப்பித்தன் கண்களால் கண்டவற்றை எல்லாம் கதைகளில் எடுத்துச் சொல்லவேண்டியதுதான் என்ற கொள்கையைக் கொண்டிருந்தார்.

அதனால்தான், நோயாலும் பசியாலும் கஷ்டப்படுகிற புருஷனுக்குப் பால்கஞ்சி வார்ப்பதற்காக இருட்டின் ஓர சந்தில் ஒரு அந்நியனுடன் மறைந்து சோரம்போய் முக்கால்ரூபாய் சம்பாதிக்கிற மில்கூலி அம்மாளுவையும், (பொன்னகரம்) இருட்டுப் பாதையில் நின்று, வழியோடு போகிறவனை என்னய்யா சும்மா போறே? வாரியா? என்று கூப்பிடும் தெருவிபசாரியையும் (கவந்தனும் காமனும்) அவர் தனது கதைகளில் எடுத்துக் காட்டினார்.

அவர் கதை எழுதிய காலத்தில் இந்தப்போக்கு வெகு துணிச்சலானது. புரட்சிகரமானதும்கூட. இக்கதைகள் மிகுந்த எதிர்ப்பையும் கண்டனத்தையும் வெறுப்பையும் பெற்றன. எனவே தான் மனிதனின் சிறுமைகளையும் தப்பிதங்களையும், வக்கிர விசித்திரங்களையும் கதைகளில் சித்திரிப்பது குற்றமோ பாபமோ ஆகாது என்று புதுமைப்பித்தன் வாதாட வேண்டியாதாயிற்று.

அந்நாட்களில் இதர எழுத்தாளர்கள் தொடத் தயங்கிய விஷயங்கள் பலவற்றையும் புதுமைப்பித்தன் தனது கதைகளுக்குப் பொருளாக்கினார். தனது நோக்கில் அனுதாபத்தோடு அல்லது கேலியும் நையாண்டியுமாக, அல்லது நம்பிக்கை வறட்சியோடு அவற்றைச் சித்திரித்தார்.

விதவைகளுக்கு மறுமணம், கலப்புத் திருமணம் ஆகியவை சமூக சீர்திருத்த நோக்குடன் தீவிரமாகப் பிரசாரம் செய்யப்பட்டு வந்த காலம் அது. அந்தச் சமயத்தில், கலப்புத் திருமணத்தைப் பரிகசிப்பதுபோல் அவர் கோபாலய்யங்காரின் மனைவி என்ற கதையை எழுதினார். கண்டதும் காதல். கலப்புமணம் என்ப தெல்லாம் கல்வித்தரமும் உணவுப் பழக்கவழக்கங்களும், வாழ்க்கைப் பண்புகளும் மிகவும் முரண்பட்டனவாக இருக்கிற ஜோடிகளி டையே எப்படிப் பொருந்தா மணம் ஆகிப்போகிறது என்பதை அவர் கிண்டலாக விவரிக்கிறார் இந்தக் கதையில்.

புதுமைப்பித்தன் கலப்புத்திருமணத்தின் எதிரி அல்ல. வாழ்க்கையில் இப்படிப்பட்ட முரண்பாடுகளும் உண்டு என்று சுட்டிக்காட்டிக் கேலி பண்ணுவதில் அவருக்கு விருப்பம் அதிகம் இருந்தது என்பதையே இக்கதை சுட்டுகிறது.

மதமாற்றம், அதனால் பாதிக்கப்பட்ட இந்துக் குடும்பத்தின் நிலைமை, அதைச் சேர்ந்த தனிநபர்களின் போக்குகள் இவற்றை விவரிக்கும் ‘புதிய கூண்டு’ புதுமைப்பித்தனின் சிறந்த கதைகளில் ஒன்று. அந்தக்கதையிலும் கலப்புமணம் நிகழ்கிறது. அதில் வருகிற பெண் உயர்ந்தவள், படித்தவள், பண்புமிக்கவள். நெருக்கடியான நேரங்களில் அவள் எவ்வாறு நடந்து கொள்கிறாள் என்பதை இயல்பாகப் படம்பிடித்துள்ளது புதிய கூண்டு.

மதத்தின் தெய்வத்தின் தத்துவங்களின் பெருமைகளைப் பேசிப்பொழுது போக்குகிற பெரிய மனிதர்களின் வேஷங் களையும் செயல்முரண்பாடுகளையும் புதுமைப்பித்தன் தனது கதைகளின் மூலம் எடுத்துக்காட்டத் தயங்கவில்லை. கொடுக்காப் புளிமரம், நியாயம், வாழ்க்கை போன்றவை இந்த ரகமானவை.

வறுமைநிலை மனிதனைப் பாடாய்ப்படுத்துகிறது. இல்லாமை யினால் பாதிக்கப்பட்ட பலரக மனிதர்களும் அவர்களுடைய மனநிலைகளும், வாழ்க்கைமுறைகளும் புதுமைப்பித்தனால் யதார்த்தமாகவும் உருக்கமாகவும் சித்திரிக்கப் பட்டுள்ளன.

ஒவ்வொரு நாளையும் ஓட்டுவதற்காக என்னென்னவோ செய்தும் பேசியும், தேடி வருகிறவர்களிடம் கடன் வாங்கியும் வாழ்கிற ஒருநாள்கழிந்தது எழுத்தாளர்; வாழ்நாள் பூராவும் உழைத்தும் உயர்வடைய முடியாமல் அவதிப்பட்டு அல்லலுறும் தியாகமூர்த்தி ராமசாமிப்பத்தர், வாழ்க்கை முழுவதும் இல்லாமை யோடும் நோயாளி மனைவியோடும் உழன்று, மனைவிக்குத் தேவைப்படுகிற உதவிகளை எல்லாம் செய்து சிரமப்படும் செல்லம்மாள் பிரமநாயகம்பிள்ளை போன்றோர் வாழ்க்கையின் உண்மைத்தன்மையைப் பிரதிபலிக்கும் உயிர்ச் சித்திரங்கள்.

செல்லம்மாள் புதுமைப்பித்தனின் சிறந்த சிறுகதைகளில் முக்கியமான ஒன்று. திறமையாக எழுதப்பட்டுள்ள வாழ்க்கைச் சித்திரம். சோகரசம் ததும்புவது. மத்தியதர வர்க்கத்தின் உழைப் பாளி மனிதனின் ஆசைகளையும் கனவுகளையும் ஏக்கங்களையும், வறுமைநிலையையும் உள்ளது உள்ளபடி கூறுகிற கதை அது.

ஆண், பெண் உறவுகளையும் உணர்வுகளையும் அடிப்படை யாக்கிப் புதுமைப்பித்தன் எழுதியுள்ள கதைகள் மரபு மீறலை அடிநாதமாகக் கொண்டிருக்கின்றன. விதவையை வைத்து அவரும் கதைகள் எழுதியிருக்கிறார். ஆனால் அவர் பார்க்கிற கோணம் வேறு. வாடாமல்லிகை, வழி என்பன தனி ரகமானவை.

பொருந்தாத்திருமணம் விஷயத்திலும் பெண் பிறர் எதிர்ப் பார்க்கிறபடி நடந்துகொள்ள வேண்டும், என்கிற கட்டாயம் எதுவும் இல்லை. அவள் நினைப்பும் போக்கும் தனித்தன்மை உடையதாக இருக்கவும்கூடும் என்று புதுமைப்பித்தன் உணர்த்து கிறார். கல்யாணி இதற்கு உதாரணமாகும்.

உலகஇலக்கியத்தில் பேய் பிசாசுகளைக் கதைப் பொரு ளாகக் கொண்டு நாவல்களும் சிறுகதைகளும் ஏராளமாகப் படைக்கப்பட்டுள்ளன. அந்தப் போக்கைப் பின்பற்றிப் புதுமைப் பித்தன் பயங்கரக்கதைகள் பலவற்றை எழுதியிருக்கிறார். பிரம்ம ராஷஸ், செவ்வாய் தோஷம், வேதாளம் சொன்ன கதை, காளி கோயில், காஞ்சனை முதலியன இப்படிப்பட்டவை. 'காஞ்சனை' புதுமைப்பித்தனின் எழுத்தாற்றலை நன்கு வெளிப்படுத்துகிறது.

புராண, இதிகாச, காவியங்களில் இடம் பெற்றுள்ள கதா பாத்திரங்களையும் நிகழ்ச்சிகளையும் எடுத்துக்கொண்டு, கால நிலைமைக்கும், எழுதுகிறவரின் மனோதர்மத்துக்கும் புதிய நோக் கிற்கும் ஏற்ப மாற்றியும் திருத்தியும் அழகுபடுத்தியும் எழுதுவது இலக்கியநியதியாக இருந்துவருகிறது. புதுமைப்பித்தனும் இவ்வழியில் பழைய கதைகள் சிலவற்றுக்கு அவருடைய மனோதர்மத்தின்படி புதுவடிவமும் புதுமெருகும் தந்து அற்புதமான கதைகளைப் புனைந்திருக்கிறார். அகல்யை, சாபவிமோசனம், அன்று இரவில்

ஆகியவை இந்த வகையைச் சேர்ந்தவை. அவருடைய படைப்புத் திறனையும் எழுத்தாற்றலையும் காட்டுகிற நல்ல கதைகள் இவை.

புதுமைப்பித்தனின் சிந்தனை வேகத்தை, மனோதர்மத்தை, புதியநோக்கை நன்கு வெளிப்படுத்தும் சிறுகதைகள் பல உள்ளன. அவற்றுள் 'கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும்' விசேஷமானது. அவருடைய கற்பனைவிசாலம், கேலியும் நையாண்டியும்; வாழ்க்கை நோக்கு, மனிதஇயல்புகள், குழந்தைகளின் உளஇயல்புகள் முதலியன அழகாகவும், ரசித்து மகிழத்தக்க விதத்திலும் இக்கதையில் கலந்து காணப்படுகின்றன.

மகாமசானம் என்பதும் குறிப்பிடப்பட வேண்டிய சிறுகதை ஆகும்.

புதுமைப்பித்தன் கதைகளில் பாத்திர வர்ணனை, சூழ்நிலை விவரிப்பு, உவமைகள் முதலியவற்றிலும் புதுமையை நயமாகக் கையாண்டிருக்கிறார்.

தமிழ்ச்சிறுகதை இலக்கியத்தில் புதுமைப்பித்தன் பெரும் சிறப்புடன் விளங்குவதற்கு அவருடைய சாதனைகள் ஆதார மாகின்றன.

(ஜோதி விநாயகம் நினைவு. சிறுகதைப் பரிசுத் திட்டத்தின் சார்பில் நடந்த புதுமைப்பித்தன் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டது)



# மணிக்கொடிக்குப் பின் இலக்கியப் பத்திரிகைகள்

தமிழ் மறுமலர்ச்சி இலக்கியத்தின் வெள்ளி முளைப்பு என்று கூறிக்கொண்ட மணிக்கொடி தனிமனிதனுடைய மனசாட்சியை உழக்கி, அறிவுச்சுடரைக் கொளுத்தி சிந்தனா சக்தியை வளர்த்து, போலிக்கருத்துக்களையும் போலி ஆசாரங்களையும் அழித்து, சமூகத்தைச் சீர்திருத்துவது, பாரதி வகுத்த வழியில் தமிழை வளப்படுத்தி இளைஞர்களை இலக்கியத் தொண்டில் ஈடுபடச் செய்வது என்ற நெறி களைக் கடைப்பிடித்தது.

நாடு நெடுகிலும் கனன்று கொண்டிருந்த தேசீய உணர்வும் சுதந்திர வேட்கையும் மணிக் கொடியையும் அதன் எழுத்தாளர்களையும் ஆட்கொண்டிருந்தன. பத்திரிகைகளின் போக்கில் அந்நாட்களில் காணப்பட்ட அடிப் படைத் தன்மைகளிலிருந்து மாறுபட்ட தீவிர மான, இலக்கிய நோக்கை மணிக்கொடி வளர்த்தது.

அக்காலகட்டத்தில் பத்திரிகைகள் மேற் கொண்டிருந்த இலக்கிய நோக்கை, பொதுவாக மூன்று பிரிவுகளில் அடக்கலாம் என்று கு.ப. ராஜகோபாலன் ஒரு கட்டுரையில் குறிப் பிட்டிருக்கிறார்.

வாழ்வின் மேலோட்டமான தன்மைகளை இன்பகரமாகவும் நகைச்சுவையோடும், பொழுதுபோக்கு உத்தேசத்துடனும் சித்திரிக்கும் போக்கு ஒன்று. கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தியின் வழி காட்டலில் வளர்ந்த இந்தப் போக்கு விகட மனோபாவம் ஆகும். இதை நுனிப்புல் மேயும் மனப்பான்மை என்று கு.ப.ரா. கூறுகிறார்.

இன்னொரு போக்கு நடுநிலையானது. பெருவாழ்வின் மிதப்பைப் போற்றும் கலைமகள் மனப்பான்மை என்று கு.ப.ரா குறிப்பிட்டுள்ளார்.

இவ்விரண்டிலிருந்தும் மாறுபட்டது மணிக்கொடி மனோ பாவம். வாழ்க்கையின் சகலதன்மைகளையும் ஆழ்ந்து கவனித்து, உணர்ச்சியோடு அழுத்தமாகச் சித்திரிக்கும் முயற்சிகளை அது வரவேற்றது. சிந்தனைக்கு வேலை கொடுத்தது. மணிக்கொடி புரட்சி மனப்பான்மை கொண்டது. தீவிரப் போக்கு உடையது என்று கு.ப. ராஜகோபாலன் கூறுகிறார்.

மணிக்கொடி தமிழ்ச் சிறுகதைக்கு கனமும் ஆழமும் சேர்த்து, இலக்கியத்தரம் உண்டாக்கியது. அருமையான மொழிபெயர்ப்புகள் மூலம் உலகத்துச் சிறுகதைகளைத் தமிழில் அறிமுகப்படுத்தியது. புதிய பரிசோதனைகளை ஆதரித்தது. தமிழ் வாசகர்களில் ஒரு பகுதியினரிடம் இலக்கியஉணர்வை ஏற்படுத்தி, ரசனையைப் பண்படுத்தி வளர்த்தது.

இப்படிப் பலவிதத்தில் மணிக்கொடி அழுத்தமான பாதிப்பை உண்டாக்கியது. பின்னர் எழுதத் தொடங்கிய இளை ஞர்கள் பலர் மணிக்கொடி எழுத்தாளர்களைத் தங்கள் முன்னோடி களாக மதித்தார்கள். அதேபோல, லட்சிய வேகத்தோடும் இலக்கிய மோகத்தோடும் பத்திரிகை தொடங்க முற்பட்டவர்கள் மணிக் கொடியை முன்மாதிரியாகக்கொண்டு செயல்பட்டார்கள்.

ஆனால், சிறுகதை இலக்கியத்துக்காக மட்டுமே ஒரு தனிப் பத்திரிகை என்ற நிலை போய்விட்டது. நாட்டில் ஏற்பட்டிருந்த அரசியல்விழிப்பும், புதியபுதிய விஷயங்களைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற அவாவும், விசாலப்பார்வையில் உலகை, மக்களைக் கவனித்துத் தாங்கள் உணர்ந்தவற்றை எழுத்தில் பிரதி பலிக்க வேண்டும் என்கிற எழுத்தாளர் உந்துதலும், வாசகர்களது ரசனையின் பன்முகஈடுபாடும் எதிர்பார்ப்பும் இந்த மாறுதலுக்கும் வளர்ச்சிக்கும் காரணம் ஆகும்.

மணிக்கொடிக்குப்பிறகு, 1930களின் கடைசியில், க.நா. சுப்ர மண்யம் தொடங்கி, மணிக்கொடி எழுத்தாளர்களின் ஒத்துழைப் போடு, நடத்திய சூறாவளி இந்த நிலைமையை நன்கு பிரதி பலித்தது.

மணிக்கொடி மாதிரி ஆழ்ந்த இலக்கியவிஷயங்களை

மட்டுமே சூறாவளி கொண்டிருக்கவில்லை. வியாபார வெற்றியாக வளர்ந்து கொண்டிருந்த ஆனந்த விகடன் போல ஜனரஞ்சகமான முறையிலும் ஒரு இலக்கியப்பத்திரிகையை நடத்திப் பார்க்க லாமே என்ற எண்ணத்தோடு போட்டி மனப்பான்மை யோடும் பலப்பரிட்சை செய்த ஒரு சோதனை முயற்சியாக சூறாவளி வெளிவந்தது.

சூறாவளி வாரம்தோறும் வெளிவந்த இலக்கியப் பத்திரிகை. கதைகள், கவிதைகள் போக வேறு பல அம்சங்கள் அதில் இடம் பெற்றன. சூறாவளி எனும் தலைப்பில் பட்டணத்துச் செய்தி களும் தமிழ்நாட்டு சமாச்சாரங்களும் நகைச்சுவையோடும் பரிகாசத்தொனியோடும் அலசப்பட்டன. ஆயகலைகள் என்ற தலைப்பில் சங்கீதம், சினிமா விமர்சனம், அகல்விளக்கு என்று அரசியல் விவகாரவிளக்கம், ராஜீய விஷயமாகத் தலையங்கம் அங்கே என்று அயல்நாட்டுச் செய்திகள், பெரிய மனுஷாள் எனும் தலைப்பில் அக்காலத்தில் உலகப்பிரமுகர்களான ஸ்டாலின், ரூஸ்வெல்ட், ஹிட்லர், முசோலினி, சியாங்கே ஷேக் போன்றவர் களின் வரலாற்று அறிமுகம், ராமபாணம் என்று புத்தக மதிப்புரை, சிங்காரி என்று பெண்கள் பகுதி, அவ்வப்போது விஞ்ஞானக் கட்டுரை, பொருளாதாரக் கட்டுரைகளும் வந்தன.

மணிக்கொடி காலத்திலேயே சினிமா புறக்கணிக்கமுடியாத ஒரு சக்தியாக வே வளர்ச்சி பெற்றுக் கொண்டிருந்தது. கடைசிக் கட்ட மணிக்கொடி இதழ்களில் சினிமாக் காட்சிப் படங்களும் விஷயங்களும் இடம் பெற்றன. சூறாவளியில் இவை விசேஷமான கவனிப்புடன் இணைக்கப்பட்டன.

மணிக்கொடிக்கு வளம் சேர்த்த பி.எஸ் ராமையா, புதுமைப் பித்தன், ந. சிதம்பரசுப்பிரமண்யன், கு.ப. ராஜகோபாலன், சூறா வளியில் எழுதினார்கள். பாரதிதாசன், ச.து.சு. யோகியார் கவிதைகள் பிரசுரமாயின. மணிக்கொடியில் பி.எஸ். ராமையா வுக்குத் துணைபுரிந்த கி.ரா (கி. ராமச்சந்திரன்) தான் சூறாவளி யிலும் துணைஆசிரியராகப் பணிபுரிந்தார்.

'சூறாவளி' வசனகவிதைக்குத் தனிகவனிப்பு தந்தது. வசன கவிதை சம்பந்தமாகச் சுவையாக சர்ச்சை ஒன்றை வளர்த்தது.

சூறாவளி வந்த வேகத்திலேயே மறைந்தும் போயிற்று. அது 20 இதழ்கள்தான் பிரசுரம் பெற்றது. இலக்கியவாதிகள் மத்தி யிலோ, எழுத்துத்துறையிலோ சூறாவளி தீவிரமான தாக்கம் எதையும் ஏற்படுத்திவிட்டதாகச் சொல்வதற்கில்லை.

சூறாவளி வாரப்பத்திரிகையாக நடத்தப்படாமல், ஒரு மாசிகை ஆக அல்லது மாதம் இருமுறை இதழாக நடத்தப்பட்டி ருந்தால், அது உருப்படியாக ஏதேனும் செய்ய முடிந்தாலும் முடிந்திருக்கலாம்.

சூறாவளி 1930களின் இறுதிக்கட்டத்தில் வெளிவந்தது. அதே காலகட்டத்தில், குறிப்பிடத்தகுந்த ஒரு இலக்கியப் பத்திரிகையாக பாரததேவி வாரஇதழ் பிரசுமாயிற்று என்பதையும் நினைவுகூர வேண்டும். விகடன் அளவில் வெளிவந்த அந்தப் பத்திரிகைக்கு வ.ரா. ஆசிரியராக இருந்தார். கு.ப.ராஜகோபாலன், சி.சு.செல்லப்பா, பாரத தேவி வார இதழின் வளர்ச்சியில் பங்கு கொண்டிருந்தர்கள். சிறுகதைகளோடு, சிந்தனைக்கட்டுரைகள் மற்றும் பல சோதனைமுயற்சிகளும் அதில் அச்சாயின. வ.ரா. எழுதி வந்த ஆளுக்குள்ளே ஆளு எத்தனை ஆளு என்ற கட்டுரை வரிசை ரசனைக்குரிய சமூகச் சித்திரமாகவும் உளவியல் பிரதி பலிப்பாகவும் விளங்கியது.

மணிக்கொடி வாரப்பத்திரிகை போன்று, களிராட்டை என்றொரு பத்திரிகையும் வெளிவந்து கொண்டிருந்தது. சாமிநாத சாஸ்திரி என்ற தேசபக்தர் நடத்திய அந்தப் பத்திரிகையில் சிட்டி - பெ.கோ. சுந்தரராஜன் அதிகமாகவே எழுதினார். கதைகள் மட்டுமின்றி, சமூக சீர்திருத்தம், பண்பாட்டு உயர்வு சம்பந்தமான கட்டுரைகளும் களிராட்டையில் இடம் பெற்றன.

பாரதிதாசன் - கவி சுப்பிரமணிய பாரதியின் கவிதா மண்டலம். தேசபக்தர் கா.சீ. வேங்கடரமணி - முருகன் ஓர் உழவன், தேசபக்தன் கந்தன் ஆகிய நாவல்களைப் படைத்த சிந்தனை யாளர் - பாரதமணி என்ற பத்திரிகையை நடத்தினார். கிராம முன்னேற்றமும் கைத்தொழில் அபிவிருத்தியுமே அதன் லட்சியக் கொள்கைகளாக இருந்தபோதிலும், இலக்கியத்துக்கும் அது கணிச மான பங்கை செலுத்தியுள்ளது. கா. சீ. வேங்கடரமணி கட்டுரைகள் குறிப்பிடத்தகுந்தவை. விக்னேஸ்வரா என்ற பெயரில் ஆங்கிலத்தில் அரியகட்டுரைகள் எழுதிச் சிறப்புற்ற என். ரகுநாத அய்யர் (ஹிந்து உதவி ஆசியராகப் பணியாற்றிய அறிஞர்) ரசிகன் என்ற புனை பெயரில் தனித்தன்மை கொண்ட கதைகளையும் நாடகங்களையும் பாரதமணியில் எழுதிவந்தார்.

சூறாவளி ஓய்ந்து ஒடுங்கிய பிறகு மறுமலர்ச்சி இலக்கியத் துக்கு என்று ஒரு தனிப்பத்திரிகை இல்லாதகுறை இலக்கியவாதி களால் உணரப்பட்டது. அந்த உந்துதலினால் விரா. ராஜகோபாலன், திருச்சியில், 1942ல் கலாமோகினி என்ற மாதம் இருமுறைப் பத்திரிகையை ஆரம்பித்தார்.

எதையும் புதுமையாகச் சொல்வதோடு, எடுத்துச் சொல்ல வேண்டிய உண்மைகளை நேரடியாக மெய்த்துணிவோடு சொல்லியே தீரவேண்டும் என்ற உறுதியும் கொண்டிருந்தார் வி.ரா.ரா. சாலி வாஹனன், விக்ரமாதித்தன் என்ற பெயர்களிலும் அவர் எழுதினார்.

மணிக்கொடி எழுத்தாளர்களில் ந. பிச்சமூர்த்தி. கு.ப. ராஜ கோபாலன், பெ.கோ. சுந்தரராஜன் (சிட்டி) ஆகியோரின் பூரண ஆதரவும் ஒத்துழைப்பும் அவருக்குக் கிட்டியிருந்தன. மணிக்கொடி யினாலும் மணிக்கொடி எழுத்தாளர்களின் படைப்புகளாலும் எழுத்துஊக்கம், பெற்றிருந்த, லட்சியக் கனவுகள் கண்ட இளைய தமிழர்கள் பலரது உற்சாகமான ஒத்துழைப்பும் கலாமோகினிக்கு என்றும் கிடைத்துக் கொண்டிருந்தது.

முதல் இதழிலிருந்து கடைசியாக வெளியான இதழ் முடிய, எழுத்தாளர் படத்தையே அட்டைச் சித்திரமாக வெளியிட்டு, அவர்களைப் பற்றி இவர் நம் அதிதி என்று உள்ளே அறிமுகம் செய்து, தனியானதொரு இலக்கியப் பத்திரிகை எனப் பெருமை பெற்றது கலாமோகினி.

க.நா. சுப்ரமண்யம், எம்.வி.வெங்கட்ராம் ஆகிய மணிக்கொடி எழுத்தாளர்கள் கலாமோகினிக்கு நிறையவே எழுதி உதவினார்கள். கரிச்சான்குஞ்சு (ரா.நாராயணஸ்வாமி), ஸ்வாமிநாத ஆத்ரேயன், வல்லிக்கண்ணன் போன்ற அக்காலத்திய இளைய எழுத்தாளர் களின் படைப்புகள் கலாமோகினி மூலம் ரசிகர்களை அடைந்தன.

கலைவாணன் (க.அப்புலிங்கம்), சாலிவாஹனன் கவிதை களும், ந. பிச்சமூர்த்தி, கு.ப.ராஜகோபாலன் வசனகவிதைகளும் பத்திரிகைக்கு வளம் சேர்த்தன. வசனகவிதை பற்றிய விளக்கக் கட்டுரைகள் பிரசுரமாயின.

வி.ரா.ராஜகோபாலன் நல்ல கவிஞர். கதைகளும் நாடகமும் எழுதும் ஆற்றல் உடையவர். பழந்தமிழ் இலக்கிய ஞானம் பெற்றவர். அவரது இச்சிறப்புகள் பத்திரிகைக்கு உயிர்ப்பு ஊட்டி வந்தன.

லட்சியத் துடிப்பு கொண்டிருந்த வி.ரா.ரா. தனக்குக் குற்றம் எனத் தோன்றியதை — அது எவர் செய்ததாக இருந்தாலும்— அஞ்சாது கண்டிக்கும் துணிவு பெற்றிருந்தார். அவருடைய இந்தப் பண்பு கலாமோகினிக்குத் தனிவேகம் சேர்த்துக்கொண்டிருந்தது. அவர் எழுத்துக்களில் உண்மையின் வேகத்தோடு, குத்துகிற பரிகாசமும் நளினமான நகைச்சுவையும் கலந்து மிளிரும்.

கலாமோகினி தீவிரமான இலக்கியப்பணிபுரியும் கடமையை மேற்கொண்டிருந்தது. அதனால் மறுமலர்ச்சி இலக்கிய முன்னணி என்று பெருமையோடு தன்னைக் குறிப்பிட்டு வந்தது. எனினும், பல சோதனைகளையே அது அனுபவித்துச் சிரமப்பட்டது. 1946 மத்தியில் கலாமோகினியின் இலக்கியப்பணி ஓய்ந்தது.

மணிக்கொடிக்குப் பிறகு மறுமலர்ச்சி இலக்கியப் பணியில் தீவிரமாக ஈடுபட்டிருந்த மற்றொரு பத்திரிகை 'கிராம ஊழியன்' என்ற பத்திரிகை (மாதம் இருமுறை) ஆகும்.

மறுமலர்ச்சி இலக்கியப் பத்திரிகைக்கு கிராம ஊழியன் என்ற பொருத்தமில்லாத பெயர் வாய்த்தது காலம் செய்த கோலம்தான். 1940களில் புதிய பத்திரிகை ஆரம்பிக்க அன்றைய அரசு அனுமதி மறுத்தது. எனவே, பழைய பத்திரிகை ஒன்றை புதிய வடிவத்தில் இலக்கியப்பத்திரிகையாக மாற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

திருச்சி நகருக்கு அருகில் உள்ள துறையூர் என்ற சிற்றூரில் வளர்ந்தது கிராமஊழியன். கவிஞர் திருலோகசீதாராம் ஆசிரியர். அ.வெ.ர.கிருஷ்ணசாமி ரெட்டியார் நிர்வாகப் பொறுப்பைக் கவனித்து வந்தார். இவ் இருவரது கவிதைக் காதலும் இலக்கிய ஆர்வமும், கிராமஊழியன் என்ற அரசியல் பத்திரிகையை மறுமலர்ச்சி இலக்கிய இதழாக மாற்றுவதற்கு அடிப்படை ஆயின. திருச்சியில் வி.ரா.ரா. நடத்தி வந்த கலாமோகினியின் வளர்ச்சியும் விறுவிறுப்பும் அவர்கள் ஆசையைத் தூண்டிவிட்டன. திருச்சி இலக்கிய நண்பர்களின் நட்பு அதற்குப் பலம் சேர்த்தது.

ஆகவே, கு.ப. ராஜகோபாலனைக் கௌரவ ஆசிரியராகக் கொண்டு, கிராமஊழியன் 1943 ஆகஸ்டில் மாதம் இருமுறையாகப் பரிணாமம் பெற்றது. பாரதி காட்டிய வழியைப் பணிவுடன் பின்பற்றித் தொண்டு செய்வதைச் சபதமாகக் கொண்டுவிட்டான் என்று அறிவித்து, அது தனது இலக்கியப் பணியில் ஈடுபட்டது. 9வது இதழில், கு.ப.ராஜகோபாலன் ஆசிரியர் என்றும், திருலோக சீதாராம் நிர்வாக ஆசிரியர் என்றும் அறிவிக்கப்பட்டது.

கு.ப.ரா. கும்பகோணத்திலிருந்து ஒவ்வொரு இதழுக்கும் விஷயங்கள் அனுப்பினார். கட்டுரை, கதை, நாடகம், சிவாஜி மன்னன் வரலாறு (தொடர்) என்று அவர் நிறையவே எழுதினார். பாமதி போன்ற அருமையான ஓரங்கநாடகங்களும், வேறு உரை நடைச்சோதனை முயற்சிகளும் கிராமஊழியனில் வந்த கு.ப.ரா. படைப்புகள் ஆகும்.

கு.ப.ரா. ஊழியன் மூலம் எழுத்தாற்றல் மிகுந்த இளைஞர் களையும், ஓவியத்திறமை பெற்ற இளைய கலைஞர்களையும் அறிமுகப்படுத்தினார். எழுத்தாளர்களில் தி.ஜானகிராமன், கி.ரா, கோபாலன் முக்கியமானவர்கள். கோபுலு, ஸாரதி ஓவியர்களில் குறிப்பிடப்பட வேண்டியவர்கள்.

ந. பிச்சமூர்த்தி மனநிழல் கட்டுரைகளையும், யாப்பில்லாக் கவிதைகளையும் கிராமஊழியனில் எழுதிவந்தார்.

கு.ப.ரா. இப்பத்திரிகையின் துணையோடு அதிகமான சாதனைகள் புரிந்திருக்கக்கூடும். ஆனால், காலம் வஞ்சித்து விட்டது. 1944 ஏப்ரல் இறுதியில் அவர் மரணம் அடைந்தார்.

1944 மார்ச் மாதக் கடைசியில் காலம் வல்லிக்கண்ணனை

கிராமஊழியனில் கொண்டு சேர்த்திருந்தது. ஒரு வருடம் வ.க. ஊழியன் துணைஆசிரியர் பொறுப்பிலும், பின்னர் திருலோக சீதாராம் ஆசிரியர் பதவியிலிருந்து விலகி திருச்சி சிவாஜி பத்திரி கையின் பொறுப்பை ஏற்கப்போய்விட்டதால் ஆசிரியர் ஆகவும் பணிபுரிவதற்காகக் காலம் துணைசெய்தது.

நமக்குத் தொழில் கவிதை. நாட்டிற்கு உழைத்தல். இமைப் பொழுதும் சோராதிருத்தல் என்ற பாரதி வாக்கை மூலவாக்கிய மாகக் கொண்டிருந்த கிராமஊழியன் எப்போதும் கவிதைக்கு முக்கியத்துவம் அளித்தது.

புதுமைப்பித்தன் வேளூர் வெ.கந்தசாமிப்பிள்ளை என அவதாரம் பூண்டு கவிதை எழுதத் தொடங்கியது. இந்தக் கால கட்டத்திலேதான். அவருடைய கவிதைகள் ஊழியனில் வெளியாயின.

ந. பிச்சமூர்த்தி, யாப்பில்லாக்கவிதைகளோடு, மரபுக் கவிதைகளும் எழுதலானார். அவையும் கிராமஊழியனில் பிரசுரம் ஆயின.

கவிஞர் கலைவாணன், ஈழத்துக்கவிஞர்களான நாவற் குழியூர் நடராஜன், மகாகவி, சோ. தியாகராஜன், க. இ. சரவணமுத்து ஆகியோரின் கவிதைகளையும் ஊழியன் பிரசுரித்தது. இலங்கைத் தமிழ் எழுத்தாளர்களின் படைப்புகளை இதழ்தோறும் வெளி யிட்டது. இலங்கையர்கோன் ஊழியனின் இறுதி இதழ்வரை நாடகங்களும் கதைகளும் எழுதிக் கொண்டிருந்தார்.

தி.க. சிவசங்கரன் கவிதை, நாடகம், கட்டுரைகள், சூடும் சுவையும் நிறைந்த விமர்சனங்கள் எல்லாம் எழுதினார்.உலகத்துச் சிறுகதைகள் அசோகன் (ரா.சு.கோமதிநாயகம்) மொழிபெயர்ப்பாக இடம் பெற்றன. இளைய எழுத்தாளர்கள் பலரது எழுத்துக்களை ஊழியன் வெளியிட்டது.

எம்.வி. வெங்கட்ராம் அருமையான சிறுகதைகள் எழுதிய தோடு, எம். விக்ரகவிநாசன் என்ற பெயரில் கவிதைகளும் எழுதினார். சரத்சந்திரர் பெண்கள் பற்றி எழுதியிருந்த கட்டுரைத் தொடர் ஒன்றையும் எம்.வி.வி. மொழிபெயர்த்து வந்தார்.

வல்லிக்கண்ணன் பல அவதாரங்களில் வேகமும் விறு விறுப்பும் புதுமையும் நையாண்டியும், சூடும் சுவாரஸ்யமும், நிறைந்த எழுத்துக்கள் மூலம் கிராமஊழியனை இலக்கியவாதிகளின் கவனிப்புக்கும் பேச்சுக்கும், பாராட்டுதலுக்கும் கண்டனங் களுக்கும் இலக்காக்க முடிந்தது.

புத்தக மதிப்புரை, நாடோடிக் கதைகள், வசனகவிதைகள் இப்படிப் பலவற்றாலும் தனது இருப்பை உணர்த்திக் கொண்டி ருந்த கிராமஊழியன் லாபகரமாக நடைபெறவில்லை என்பதால், 1947 மே மாதம் அதன் நிர்வாகிகளால் நிறுத்தப்பட்டு விட்டது.

பழைய பத்திரிகை புதிய பரிணாமம் பெற்று மறுமலர்ச்சி இலக்கியப்பத்திரிகையாக உருவெடுத்த வரலாற்றில் சந்திரோதயம் என்பதும் சேரும். க. நா. சுப்ரமண்யம், தொழில் அதிபர் ஒருவர் துணையோடு சந்திரோதயம் என்ற பழைய பத்திரிகைக்குப் புதிய வடிவமும் புதிய வேகமும் கொடுத்தார். சி.சு. செல்லப்பா துணை ஆசிரியர்.

இதன் போக்கும், இதில் வந்த சில பகுதிகளும் சூறாவளியை நினைவுபடுத்திய போதிலும், இந்த மாதம் இருமுறைப்பத்திரிகை அதிக இலக்கியத்தரம் பெற்றிருந்தது. புதுமைப்பித்தனின் கபாட புரம் இதில் தொடர்பிரசுரம் பெற்றது. ந. பிச்சமூர்த்தி, ந. சிதம்பர சுப்ரமண்யன், ரகுநாதன், தி. ஜானகிராமன், ஸ்வாமிநாத ஆத்ரேயன் முதலியவர்கள் அடிக்கடி கதைகள் எழுதினார்கள். லா.ச. ராமாமிர்தம் கதைகள் விசேஷமாகக்குறிப்பிடும்படி வந்தன. சி.சு. செல்லப்பாவின் கதைகளும் மொழிபெயர்ப்புகளும், க.நா.சு.நாவல் களும் இப்பத்திரிகையின் இலக்கியத்தரத்துக்கு கனம் சேர்த்தன.

பொருளாதாரப் பலம் பெற்றிருந்த போதிலும், வியாபார வெற்றியாக வளராததனால் சந்திரோதயமும் நிறுத்தப்பட்டது.

1940களில் நம்பிக்கைக்குரல் கொடுத்தபடி தோன்றிய மற்று மொரு மறுமலர்ச்சி இலக்கியப்பத்திரிகை தேனீ. கும்பகோணத்தில் 1948 மார்ச்சில் எம்.வி. வெங்கட்ராம் தேனீ மாசிகையை ஆரம்பித்தார். கரிச்சான்குஞ்சு துணைஆசிரியர்.

தேனீயின் க்ஷேத்திரம் விரிவானது. விலங்கு இல்லாத சஞ்சாரி அது. யாராலும் அதற்கு விலங்கிடவும் இயலாது என்று கூறிக் கொண்டு தேனீ தன் உலாவைத் தொடங்கியது. கதைகளையே அதிகம் பிரசுரித்தது. க.நா. சுப்ரமண்யத்தின் ஜாதிமுத்து நாவலைத் தொடர்கதையாக வெளியிட்டது.

உரையாடல் வடிவத்தில் கலை, இலக்கியம், தத்துவம், சமூகம் பற்றிய கருத்துக்களை க.நா.சு. எழுதினார். மௌனி, லா.ச.ராமா மிர்தம் கதைகள் தேனீயில் வந்தன. கலாமோகினி கிராமஊழியன் எழுத்தாளர்கள் பலரும் தங்கள் ஆற்றலைக் காட்டிவந்தனர்.

தேனீ, தரமான பத்திரிகையாக வளர்ந்தது. ஆயினும் ஒன்றரை வருடங்களுக்கு மேலாக வாழமுடியவில்லை அதனால். இதே காலகட்டத்தில் 1940களின் பிற்பகுதியில் தோன்றி லட்சியப் பணிபுரிந்த தரமான இலக்கியப் பத்திரிகைகளில் ‘சிந்தனை’யும் ஒன்று ஆகும். அதன் ஆசிரியர் அ. சீனிவாச ராகவன்.

சிந்தனை இல்லாவிட்டால் ஞானமில்லை. முன்னேற்றம் இல்லை. நாகரிகம் இல்லை. மனிதனுடைய சாதனை எல்லாம் சிந்தனையின் ஆற்றலைக்கொண்டுதான். எங்கு சிந்தனை தெளி வடைந்து பரந்து ஓங்குகிறதோ அங்கே வாழ்க்கையின் வளம்

பெருகும். மனிதனுடைய பெருமை இடையீடின்றி ஓங்கி இலட்சிய சாகரமாகிவிடும். சிந்தனை வளருவதற்குப் பல பொருள்களைப் பற்றிய அறிவு இன்றியமையாதது. இதை உணர்ந்து இந்தத் தேவையை நிறைவாக்கவே சிந்தனை மலர்கிறது. தெளிவு, ஆழம், புதுமை — இவையே சிந்தனையில் வெளியாகும். கட்டுரை வன்மையும், சிந்தனை நேர்மையும் ஒருங்கே பெற்ற நிபுணர் பலர் சிந்தனையின் மூலமாக உங்களோடு உறவாடுவார்கள். இப்படி அறிவித்தது சிந்தனை.

எஸ். வையாபுரிப்பிள்ளை ஒவ்வொரு நாட்டின் இலக்கிய உதயம் பற்றியும் சிந்தனையில் விரிவாக எழுதினார். இந்திய இலக்கியங்கள் (காளிதாஸன், தாகூர் முதலியோர்) குறித்து கி. சந்திர சேகரன், டாக்டர் வே. ராகவன், ரா. ஸ்ரீ தேசிகன் முதலானோர் எழுதிவந்தார்கள். ப. கோதண்டராமன் ஐரோப்பிய, ரஷ்ய இலக்கியங்கள் பற்றி எழுதினார். எஸ். மகராஜன் தனித்தன்மை கொண்ட சிந்தனைக்கட்டுரைகள் எழுதிவந்தார். கலாசாரமும், வருக்கமும், மொழியும் மரபும், இலக்கிய விமர்சனம் என்ற தன்மைகளில் அ. சீ. ரா. சிந்தனைகள் வழங்கினார். தன்ஒளி என்ற தலைப்பில் ஆக இயல், ஆன்மீக ஆய்வு, தத்துவ ஆராய்ச்சி முதலியன அடங்கிய பெரிய விஷயம் ஒன்று தொடராகப் பிரசுரம் பெற்றது. அ.சீ.ரா. எழுதிய அருமையான நாடகங்கள் அவ்வப் போது வந்தன. இதழ்தோறும் ஒன்று அல்லது இரண்டு சிறுகதை களே இடம் பெற்றன. ப. ஸ்ரீனிவாசன், கரிச்சான்குஞ்சு, வல்லிக் கண்ணன், அசோகன், ஸ்வாமிநாத ஆத்ரேயன், துறைவன் போன் றோரின் படைப்புகள் அவை.

சிந்தனை சிறப்பாக ஒரு ஆண்டுமலர் தயாரித்தபிறகு ஓய்ந்துவிட்டது.

1939 வாக்கில் தோன்றி, 1940களில் நன்கு வளர்ந்து, 1950 களின் ஆரம்ப வருடங்களில் சிறிது காலம்வரை வாழ்ந்த ஒரு நல்ல பத்திரிகையை இங்கே குறிப்பிட வேண்டும். ஆனால், அது இலக்கியப்பத்திரிகை அல்ல. வை. கோவிந்தன் நடத்திய 'சக்தி' தான் அது.

முதலில் நாலைந்து வருடகாலம் 'சக்தி' டைம் பத்திரிகை அளவில், அதே அட்டை அமைப்போடு, அகலமாய், பெரிதாய் வந்தது. சுவாமி சுத்தானந்த பாரதியின் எழுத்துக்களே வெகு அதிகமாக அதில் இடம் பெற்றுக்கொண்டிருந்தன. மூன்றாம் ஆண்டில் தி.ஜ.ர. (தி.ஜ.ரங்கநாதன்) அதன் துணைஆசிரியர் ஆனார். பத்திரிகை புதுவனப்பும் புத்துயிரும் பெற்றது. அன்றிலிருந்து சக்தி ஒரு டைஜஸ்ட் ஆகவே வளரலாயிற்று. உலகத்துப் பத்திரிகைகளி லிருந்து எடுத்து, தமிழில் தரப்பெற்ற பல்வேறு விஷயங்கள்

சம்பந்தமான கட்டுரைகளே அதிகம் வெளிவரும். இவை தவிர, தமிழ் எழுத்தாளர்கள் எழுதிய ஒரு சில கதைகளும் வந்துள்ளன. மஞ்சேரி எஸ். ஈஸ்வரன் ஆங்கிலத்தில் எழுதி தி.ஜ.ர. தமிழாக்கி வெளியிட்ட கதைகள் குறிப்பிடத் தகுந்தவை.

தி.ஜ.ர. மஞ்சரியின் ஆசிரியராகப் பொறுப்பேற்ற பிறகு, சுப. நாராயணன் சக்தியின் துணைஆசிரியரானார். தி.ஜ.ர. மிதவாதப் போக்கு உடையவர். மைல்டாக இருக்க வேண்டும் எழுத்தில் ரெஸ்ட்ரெய்ன்டாக இருக்கவேணும் என அறிவுறுத்தும் இயல்பினர். அவருடைய நோக்கிற்கு ஏற்பவே கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்துப் பிரசுரித்துக்கொண்டிருந்தார். சு.ப. நாராயணன் சக்தியின் உள்ளடக்கத்தில் தீவிரத்தன்மை புகுத்தினார். சிறிது காலத்துக்குப் பிறகு, சு.ப.நா. விலகிவிடவும், கு. அழகிரிசாமியும் தொ.மு.சி. ரகுநாதனும், சக்தியின் பொறுப்பை ஏற்று நடத்தினர். சக்தி டைஜஸ்ட் பாணிப் பத்திரிகையாகத் தான் இருந்தது.

1950 வாக்கில் வை. கோவிந்தன் சக்தி மாதப் பத்திரிகையைத் தற்காலிகமாக நிறுத்தி வைத்தார். சக்தி மலர் என்ற பெயரில் மாதம் ஒரு புத்தகம் வெளியிட்டார். கு. அழகிரிசாமி, ரகுநாதன் பொறுப்பில் உருவான இத்தொகுப்புகள் அருமையான இலக்கியக் களஞ்சியங்கள் ஆகும். அவைகூட ஒன்பது மலர்களே வந்தன.

சிறிது இடைவேளைக்குப் பிறகு சக்தி மீண்டும் உயிர் பெற்றது. அதற்கு வி. விஜயபாஸ்கரன் துணைஆசிரியர் ஆனார். இப்போதும் சக்தி நீடித்து நிற்கவில்லை.

1955 மே மாதம் விஜயபாஸ்கரன் சொந்தமாக சரஸ்வதி பத்திரிகையை ஆரம்பித்தார். சரஸ்வதி முற்போக்கு இலக்கியப் பத்திரிகை ஆகும்.

சரஸ்வதிக்கு முன்னர் தமிழில் தோன்றிய முற்போக்கு இலக்கியப்பத்திரிகை சாந்தி. அதை தொ.மு.சி.ரகுநாதன் திருநெல் வேலியில் ஆரம்பித்து நடத்தினார். சாந்தி 1954 டிசம்பரில் துவக்கப்பட்டது. சொத்தைக்கருத்துகளும் சொற்சிலம்பங்களும் மிகுந்த இலக்கியப் போலிகளை இனம் காட்டவும், வெற்றிக் காசுக்கும் சுதேசியச் சிறுமைக்கும் இருதயத்தையே எடைபோட்டு விற்றுவிட்ட எழுத்துலகத் துரோகிகளை அம்பலப்படுத்தவும், நமது பண்பாட்டையும் நாகரிகத்தையும் பாஷைவளத்தையும் இழிவுபடுத்தும் நாசக்கற்பனைகளை வேரறுக்கவும், தெம்பும் திராணியும் இனிமையும் புதுமையும் நிறைந்த இலக்கிய சிருஷ்டி களை வரவேற்கவும் வளர்க்கவும் புனித சங்கல்பம் பூண்டு தோன்றிய சாந்தி 1956 ஏப்ரல்வரை நடந்தது. சுந்தர ராமசாமி, ப.சீனிவாசன், டி.செல்வராஜ் ஆகியோரின் சிறுகதைகள் சாந்தியில் வந்தன. மலையாளச் சிறுகதைகளை சுந்தரராமசாமி தமிழாக்

கினார். அப்பாஸ், கிருஷ்ணசந்தர், யஷ்பால், முல்க்ராஜ் ஆனந்த் முதலியவர்களின் சிறுகதைகள் சாந்தியில் பிரசுரமாயின. கட்ட பொம்மு, மருதுபாண்டியர்வரலாறு பற்றிய நாட்டுப் பாடல்கள் குறித்து ரகுநாதன் விரிவான கட்டுரைகள எழுதினார். நா. வான மாமலை சாமி. சிதம்பரனார் கட்டுரைகளும் பிரசுரமாயின.

சாந்தி நடைபெற்றுக் கொண்டிருந்த போது தான் வ. விஜய பாஸ்கரன் சரஸ்வதியை ஆரம்பித்தார்.

தமிழ்ப் பத்திரிகைத் துறையில் காலஓட்டத்தில் ஏற்பட்டி ருந்த சில தாக்கங்கள் பற்றி இங்கே குறிப்பிட வேண்டும்.

கவி பாரதியை லட்சிய வழிகாட்டியாகக் கொண்டு தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக்கும், தேசவிடுதலைக்கும் பாடுபட்டுக் கொண்டிருந்த பத்திரிகைத்துறையில், அதே நோக்கத்தோடு மணிக்கொடி வளர்ந்தது. தமிழ் இலக்கியத்தில் ஆழமும் கனமும் புதுமையும் வளமும் சேர்க்க மணிக்கொடி எழுத்தாளர்கள் முயன்றார்கள். அவர்களையும் மணிக்கொடியின் போக்கையும் அடியொற்றி வளர்ந்தன, பின்னர் தோன்றிய மறுமலர்ச்சி இலக்கியப் பத்திரிகைகள்.

இந்த இயங்குதல் தமிழகத்தில் மட்டுமின்றி இலங்கையிலும் இருந்தது. தமிழ்நாட்டில் எழுகிற அலைகள் இலங்கையிலும் அதே வரிசை அலைகளைத் தோற்றுவிப்பது சகஜமாக இருந்து வந்திருக்கிறது.

மணிக்கொடி நடந்துகொண்டிருந்த காலத்தில் அதன் வேகத்தை இலங்கையில் ஈழகேசரி பிரதிபலித்தது. அதன் ஆசிரிய ராகப் பணியாற்றிய சோ. சிவபாதசுந்தரம் இலங்கையில் தமிழ் இலக்கிய மலர்ச்சிக்கும் சிறுகதை வளர்ச்சிக்கும் பெருமளவு சேவை புரிந்துள்ளார்.

தமிழகத்தில் கிராமஊழியனும் கலாமோகினியும் தீவிரமாக இலக்கியப் பணியில் ஈடுபட்டிருந்த காலகட்டத்தில், அவற்றினால் ஈர்க்கப்பட்ட இலங்கை எழுத்தாளர்கள் அங்கே மறுமலர்ச்சி என்ற பத்திரிகையைத் தொடங்கி வளர்த்தார்கள். பல கவிஞர் களும் இளைய எழுத்தாளர்களும் மறுமலர்ச்சியின் வளர்ச்சிக்கு உழைத்தார்கள்.

வீரகேசரி, தினகரன் நாளேடுகளும் வாரஇதழ்கள் வெளி யிட்டு இலக்கியப்பணி புரிந்தன. தினகரன் க. கைலாசபதி ஆசிரியப் பொறுப்பில் இலங்கையில் சிறுகதை எழுத்தாளர்களைப் பயிற்று வித்தது. சிறுகதையின் வளத்துக்கும் வளர்ச்சிக்கும் கணிசமான பங்கு ஆற்றியது.

தமிழ்நாட்டுப் பத்திரிகைத்துறையில் முற்போக்கு இலக்கிய

வேகம் பரவிய காலகட்டத்தில் இலங்கையில் அந்த அலைவீச்சு தீவிரமாகச் செயல்பட்டது. இளங்கீரனின் மரகதம் தோன்றியது. பின்னர் டொமினிக் ஜீவாவின் மல்லிகை தோன்றி வளரலாயிற்று.

தமிழ்நாட்டில், இந்திய விடுதலைக்கு முன்புவரை தமிழ் இலக்கிய மறுமலர்ச்சி — மறுமலர்ச்சி இலக்கியம், மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் என்றெல்லாம் வழங்கப்பட்டு வந்த பிரயோகங்கள் அரசியல் அலைகளின் எழுச்சி காரணமாக ஓரத்தில் ஒதுக்கப் பெற்றன என்றே சொல்லவேண்டும்.

நாட்டில் செல்வாக்குப் பெற்று வந்த திராவிடர் இயக்கம், அதன் பரிணாமமான திராவிட முன்னேற்றக்கழகம் சார்ந்த தலைவர்கள் தமிழ் மறுமலர்ச்சி, தமிழர் மறும்லர்ச்சி என்பதற்குத் தனிஅர்த்தமும் வர்ணமும் கொடுத்துப் பிரசாரம் செய்து வந்தனர். அந்த நோக்கில் இலக்கியப் பத்திரிகைகள் என்று அநேகப் பத்திரிகைகள் 1940களின் பிற்பகுதியிலும், 1950களிலும் பிரசுர மாயின. இவற்றிடையே பொன்னி பத்திரிகை குறிப்பிடத் தகுந்ததாக வந்து கொண்டிருந்தது.

திராவிடர் இயக்கக் கொள்கைகளை வலியுறுத்தும் கதை களையும் கட்டுரைகளையும் வெளியிட்ட பொன்னி பாரதிதாசன் பரம்பரை என்று இளைய கவிஞர்கள் பலரது படைப்புகளை அறிமுகம் செய்தது. எழுத்தாளர் விந்தன் எழுதிய நாவல் ஒன்றையும், டி.கே. சீனிவாசன் எழுதிய ஆடும் மாடும் நாவலையும் தொடர் கதைகளாகப் பிரசுரித்தது.

பொன்னி வெளிவந்து கொண்டிருந்த சமயம், நண்பன் என்ற இலக்கிய மாசிகை தோன்றியது. சோமு என்று தமிழ் உலகுக்கு நன்கு அறிமுகமான மீ.ப. சோமசுந்தரம் அதன் ஆசிரிய ராக இருந்தார். தரமான விஷயங்களை அது தந்தது.

சில பத்திரிகைகள், இலக்கிய இதழ்கள் என்ற பெயரில், நீண்ட காலம் வாழ்ந்தது உண்டு. ஆயினும் அவை இலக்கியப் பிரக்ஞையோடு செயல்பட்டன என்று கூறமுடியாது. வதவத என்று நிறையப் பக்கங்கள், அதிகம் அதிகமான கதைகள், தொடர் கதைகள் எல்லாம் அவற்றில் இருக்கும் என்றாலும், அவை குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய சிறுகதைகள் அல்லது நாவல்கள், பெயர்சொல்லக் கூடிய எழுத்தாளர்கள், கவிஞர்களை அறிமுகப் படுத்தவேயில்லை. கும்பகோணத்திலிருந்து வந்த காவேரியும், கோயம்புத்தூரில் பிரசுரமான வசந்தம் மாசிகையும் இந்த இனத்தில் சேரும்.

இந்திய சுதந்திரத்துக்குப்பிறகு நாட்டில் அரசியல் விழிப்புடன் வேக இயக்கம் பெற்று வளரத் தொடங்கியது முற்போக்கு இலக்கிய நோக்கு. இது மார்க்சீயத் தத்துவப் பார்வையை, சமுதாய நோக்கை, வலியுறுத்துவது.

ரகுநாதன் ஆரம்பத்தில் மறுமலர்ச்சி இலக்கியவாதியாகத் தான் எழுத்து முயற்சிகளில் ஈடுபட்டிருந்தார்.

1940களின் முற்பகுதியில் முல்லை முத்தையா நடத்திய முல்லை என்ற இலக்கிய மாசிகையில் ரகுநாதன் ஆசிரியராகப் பணியாற்றினார். துணிச்சலான கதைகள், விமர்சனங்கள், ஓவியங்கள் முல்லையில் பிரசுரமாயின. புதுமைப்பித்தன் எழுதிய விபரீத ஆசை, கா.ஸ்ரீ.ஸ்ரீ, லா.ச. ராமாமிர்தம் கதைகள், கு. அழகிரிசாமியின் இலக்கியக் கட்டுரைகள் முக்கியமானவையாகும்.

பின்னர் ரகுநாதன் கம்யூனிச தத்துவத்தினால் ஈர்க்கப்பட்டு, முற்போக்கு இலக்கியவாதியாக வளர்ச்சிபெற்றார். அவருடைய ஈடுபாடுகளை 'சாந்தி' என்ற இலக்கியப் பத்திரிகை பிரதிபலித்தது. பிறகு சரஸ்வதி நன்கு எடுத்துக்காட்டியது.

விஜயபாஸ்கரன் ஒரு கம்யூனிஸ்டாக இருந்த வேளையிலேயே இலக்கியத்தரமாக ஒரு பத்திரிகையை நடத்தவேண்டும் என்ற ஆசையோடு சரஸ்வதியை நடத்தினார். முற்போக்கு இலக்கிய வாதிகளும், மறுமலர்ச்சி இலக்கியவாதிகளும் சரஸ்வதியில் எழுதினார்கள். இலங்கை எழுத்தாளர்களின் படைப்புகளும் சரஸ்வதியில் அதிகமாக இடம்பெற்றன. எழுத்தாளர் ஜெயகாந்தனின் வளர்ச்சிக்கு சரஸ்வதி பெரிதும் உதவியது.

சரஸ்வதி நடந்துகொண்டிருந்த காலத்திலேயே கம்யூனிஸ்டுக் கட்சி சார்பில் முற்போக்கு இலக்கியப் பத்திரிகையாக, தாமரையை ப. ஜீவானந்தம் தோற்றுவித்தார். வெள்ளிவிழா வருடத்தில் வெற்றிகரமாக நடந்து கொண்டிருக்கும் தாமரை சமுதாயப் பார்வையோடு படைக்கப்படுகிற சிறுகதைகள், கவிதைகள், கட்டுரைகளைப் பிரசுரித்து வருகிறது. இந்த நோக்கில் எழுதுகிற எழுத்தாளர்கள் பலரை ஊக்குவித்துள்ளது. இலக்கிய ஆர்வம் அளித்திருக்கிறது.

சரஸ்வதி வந்து கொண்டிருந்த காலத்திலேயே மணிக்கொடி எழுத்தாளர் சி.சு. செல்லப்பா எழுத்து மாதப்பத்திரிகையை ஆரம்பித்து, இலக்கிய விமர்சன ஏடு ஆக நடத்தினார். எழுத்து புதுக்கவிதைக்கு இயக்கவேகம் தந்த பத்திரிகையாகவும் விளங்கிற்று. எழுத்து 12 வருடங்கள் நடைபெற்றது.

அதே சந்தர்ப்பத்தில் க.நா. சுப்ரமண்யம் இலக்கிய வட்டம் என்ற பத்திரிகையைத் தீவிர இலக்கிய ஏடு ஆகக்கொண்டு வந்தார். உலக இலக்கிய அறிமுகத்துக்கும் ஆழ்ந்த இலக்கிய ரசனைக்கும் இது உதவி புரிந்தது. சுமார் இரண்டு வருட காலம் வெளிவந்தது.

எழுத்தும் இலக்கிய வட்டமும் பின்னர் தோன்றிய சிறு பத்திரிகைகளுக்கு உந்துசக்திகளாக அமைந்திருந்தன என்று சொல்லலாம்.

இவ்வகையில் நடை, கசடதபற ஆகியவற்றைக் குறிப்பிடலாம். நடை என்ற காலாண்டு ஏடு இரண்டு வருடங்களே இயங்கியது. கசடதபற மாதப்பத்திரிகை. இவ்விரண்டும் சிறுகதை, புதுக்கவிதை, இலக்கிய விவாதங்களோடு ஓவியக்கலை, நாடகம், கலைத்தரமான திரைப்படம் ஆகியவற்றிலும் அக்கறை காட்டின. கவிஞர் ஞானக் கூத்தன் மற்றும் ந. முத்துசாமி, சி. மணி, வைதீஸ்வரன், தி. சோ. வேணுகோபாலன், பசுவய்யா, தர்மூசிவராமு முதலிய கவிஞர் களை எழுத்து அறிமுகப்படுத்தியது. ந. பிச்சமூர்த்தியின் வழித் துணை காட்டு வாத்து காவியங்களையும், சி. மணியின் நரகம், வரும்போகும் ஆகிய நீண்ட கவிதைப்படைப்புகளையும் வெளி யிட்டு, புதுக்கவிதைக்கு வளம் சேர்த்தது. வெங்கட் சாமிநாதனும், தர்மூசிவராமுவும் குறிப்பிடத்தகுந்த கட்டுரையாசிரியர்களாகத் தெரியவருவதற்கு எழுத்து துணை செய்தது.

சரஸ்வதி காலத்தில் வெளிவந்த இதர இலக்கியப் பத்திரி கைகள் என்று பகீரதன் நடத்திய கங்கை, உமாபதி பிரசுரித்த உமா, பி. எம். கண்ணனை ஆசிரியராகக் கொண்டிருந்த கலாவல்லி ஆகியவற்றைக் குறிப்பிடவேண்டும். விந்தன் நடத்திய மனிதன் பத்திரிகையையும் நினைவுகூரலாம். இவை எல்லாம் அவ்அவற்றின் ஆற்றலுக்கு ஏற்றபடி இலக்கியசேவை புரிந்துள்ளன. சா. கந்தசாமி போன்ற படைப்பாளிகள் தெரியவருவதற்குத் துணைபுரிந்தன.

கவிதை, சிறுகதை, குறுநாவல், நாடகம், நாவல் முதலிய பல்வேறு தன்மைப் படைப்புகளிலும் புதுமுயற்சிகளுக்கும் சோதனை ரீதியான எழுத்துக்களுக்கும், புதிய படைப்பாளிகளின் உற்சாகமான மற்றும் துணிச்சலான சிருஷ்டிகளுக்கும் இடம் தந்து கொண்டு 19 வருடங்களாக நடை போடுகிறது கணையாழி மாதப் பத்திரிகை. தனிமனித அனுபவங்கள், தனிநபர் அக உளைச்சல்கள், எண்ணஓட்டங்கள் முதலியவற்றைப் பிரதிபலிக்கும் இலக்கிய முயற்சிகளோடு, சமூகப்பார்வை கொண்ட முக்கியப் பிரச்சனை களை அலசி ஆராய்கிற எழுத்துக்களுக்கும் கணையாழி இடம் தருகிறது.

தனி இலக்கிய ஏடு ஆகக் கசடதபற வெளிவந்து கொண் டிருந்த காலத்தில், அதற்கு நேர்எதிரிடையான போக்குடன், சமுதாயப்பார்வையும் புரட்சி மனோபாவமும் கொண்டு வானம் பாடி என்ற விலையிலாக் கவிதைமடல் தோன்றியது. சமுதாய நோக்குடன் எழுதுகிற எண்ணற்ற எழுத்தாளர்களின் புதுக்கவிதை களுக்கு வானம்பாடி ஊக்கம் அளித்தது. அத்துடன் அது ஒரு வேக இயக்கம் போல, நாடு நெடுகிலும் — மாவட்டம் தோறும் — புதுக்கவிதைக்கான சிற்றேடுகள் தோன்றுவதற்கும் வழி காட்டியது. இதெல்லாம் சிறிது காலப்பரபரப்பாகவே எழுந்து அடங்கிவிட்டது என்கிற உண்மையையும் எடுத்துக் கூறவேண்டும்.

கவிஞர் ஞானக்கூத்தனும் அவர் நண்பர்களும் நடத்திய ழ, கவனம் ஆகியவை புதுக்கவிதை சோதனைகளுக்கும் புதுமைக் கதைகளுக்கும் இடம் அளித்தன. இந்த ரீதியில் இப்போது அவர் களுடைய மையம் என்ற காலாண்டு ஏடு செயல்படுகிறது.

கலைமகள் — மணிக்கொடி எழுத்தாளர்களுக்கு ஆதரவு காட்டி வந்த மாத இதழ் — காலவேகத்தில் நாட்டு நிலைக்கு ஏற்றபடி தன்னை மாற்றிக் கொண்டது. ஒரு காலத்தில் முழுமை யான இலக்கியப் பத்திரிகையாக இருந்த கலைமகள் வியாபார நோக்கில், தன்னை ஒரு குடும்பப்பத்திரிகை என்று அறிவித்து, தன்போக்கை மாற்றிக்கொண்டது.

எந்த இஸத்தையும் பிரதிபலிக்காமல், ஒரு மிதவாதத் தன்மை யோடு தீபம் மாத இதழ் 19 வருடங்களாக நடந்து வருகிறது. எழுத்தாளர்கள் பேட்டி, பிறமொழி எழுத்தாளர்கள் அறிமுகம் என்று பலவகையான விஷயங்களையும் வெளியிட்டுள்ளது. மலையாள மொழி நாவல் மொழிபெயர்ப்பு, என்று பலவகை யான விஷயங்களையும் வெளியிட்டுள்ளது. ஞானரதம் கவனிப்புக்கு உரிய ஒரு பத்திரிகையாக வளர்ந்தது. முதலில் ஒரு வருடம் ஜெய காந்தன் அதன் ஆசிரியராக இருந்தார். பிறகு, பதிப்பாளரான தேவ. சித்திரபாரதி (அ.இப்ராகிம்) ஆசிரியப் பொறுப்பையும் நிர்வகித்தார். இலக்கியவிவகாரங்களில் ஞானரதம் அக்கறை காட்டியது.

சதங்கை, ஜெயந்தி அஃக், கொல்லிப் பாவை — இப்படிச் சிறுபத்திரிகைகள் பல இலக்கியப்பணி புரிந்துள்ளன.

பெரிய அளவில், வெற்றிகரமாக நடந்த ஒரு இலக்கியப் பத்திரிகை கண்ணதாசன். கவிஞர் கண்ணதாசன் நடத்திய இந்த இலக்கிய ஏடு எழுத்தாளர்களுக்கு உற்சாகம் அளித்தது. இளைய எழுத்தாளர்கள், கவிஞர்கள் பலருக்கு வளர்ச்சிக் களமாக உதவியது.

அமுதசுரபி, கலைமகள் வழியில் நடந்து, பிறகு தனக்கென்று ஒரு வழி அமைத்து, இலக்கியப் பணிபுரிகிறது. லா.ச. ராமாமிர் தத்தின் கதைகளை வெளியிட்டுச் சிறப்புற்ற இது அவரது வாழ்க்கை அனுபவங்களைக் கூறும் கட்டுரைத் தொடரையும் பிரசுரித் துள்ளது.

மணிக்கொடிகாலம், சரஸ்வதிகாலம், புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும், பாரதிக்குப்பின் தமிழ்உரைநடை, தமிழில் சிறுபத்திரிகைகள் போன்ற இலக்கிய வரலாறுகள் முதலிய தரமான — பயனுள்ள விஷயங்களை, தீபம் பிரசுரித்துள்ளது. வண்ணதாசன், நாஞ்சில்நாடன் போன்ற இளையதலைமுறைப் படைப்பாளிகள் வளர்வதற்குத் துணைபுரிந்திருக்கிறது.

முற்போக்கு இலக்கிய நோக்கில் நடைபெறும் மற்றுமொரு பத்திரிகையாக செம்மலர் வந்து கொண்டிருக்கிறது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுக்கட்சி நடத்தும் மாதப் பத்திரிகை செம்மலர். சின்னப்ப பாரதியின் தாகம், டி. செல்வராஜின் மூலதனம் ஆகிய நாவல்கள் செம்மலரில் தொடர்கதைகளாக வெளிவந்தவைதான்.

அச்சுக்கலையும் பிரசுரவசதிகளும் வேகமாக வளர்ந்து கொண்டிருக்கிற தற்காலத்திலும் — லட்சக்கணக்கில் பிரசுரமாகி வருகிற வணிகநோக்குப்பத்திரிகைகள் போட்டி வேகத்தில் பெருகிக் கொண்டிருக்கிற இந்நாளையிலும் — இலக்கியப் பத்திரிகைகள் குடிசைத்தொழில் முயற்சிகள் போல் சோனிகளாகத்தான் தோற்றம் தருகின்றன. வாசகஉலகம் பல்கிப் பெருகி விசாலித்து இருப்பினும், தரம் உணர்ந்து இலக்கிய ஈடுபாட்டுடன் படிக்கும் ரசிகர்களின் எண்ணிக்கை குறைவாக இருப்பதே இதற்குக் காரணம் ஆகும்.

இதனாலேயே மணிக்கொடியும் சரி, மணிக்கொடி வழியில் வந்த இதர இலக்கியப் பத்திரிகைகளும் சரியே, திடகாத்திரமாக வாழ்ந்து தீவிர இலக்கியப்பணியைத் தொடர்ந்து செய்ய முடியாத நிலை ஏற்பட்டது. அந்த நிலைமைதான் இன்றும் நீடிக்கிறது.

ஆயினும், தனிஇலக்கிய நோக்குகளைப் பிரதிபலிக்கும் தன்மையிலும், சமுதாயப் பார்வை முற்போக்குச் சிந்தனை என்று அரசியல் தத்துவச் சார்பைக் காட்டும் விதத்திலும் தோன்றுகிற பத்திரிகைகள் தனிச்சுற்றுக்கு மட்டும் எனக்கூறிக் கொண்டு தனக்கு உரிய ரசிகர்களைத் தேடிச்செல்வது கால நியதியாகியிருக்கிறது.

இத்தன்மையில் இன்று வெளிவருகிற இலக்கியப் பத்திரிகை களில் மீட்சி என்ற மாதஇதழ் குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியது ஆகும். புதியகவிதை சோதனைப் படைப்புகளையும், உலகக்கவிஞர்களது படைப்புகளின் தமிழாக்கங்களையும், புதுரகச் சிறுகதைகளையும் வெளியிடுகிற மீட்சி உதகமண்டலத்திலிருந்து வெளிவருகிறது.

'யாத்ரா' என்ற சிறுபத்திரிகை தனித்தன்மை பெற்றுள்ளது. காரசாரமான இலக்கிய விமர்சனங்கள், ஆய்வுக் கட்டுரைகள், நாடகக்கலை, தெருக்கூத்து சம்பந்தமான விரிவான கட்டுரைகள் யாத்ராவில் வந்துள்ளன. உரிய கவனிப்புப் பெறாது காலவெளியில் மறைந்துபோன சில படைப்பாளிகள் இலக்கியவாதிகளின் ஆற்றலையும் பணிகளையும் ரசிகர்களின் கவனத்துக்குக் கொண்டு வருகிற சிறப்பு மலர்களையும் யாத்ரா பிரசுரித்திருக்கிறது.

இப்படியாக இலக்கிய உணர்வும் ஊக்கமும் உற்சாகமும் தொடர்ந்து செயல்பட்டு வருகின்றன. பொன்னேர் பூட்டி தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக்கு மணிக்கொடி இட்ட வித்து, முளைத்து

மெதுமெதுவாக வளர்ந்து கொண்டிருக்கிறது. இயந்திர வேகத்தோடு உற்பத்தி செய்து பரப்பப்படுகிற வணிகநோக்குப் பெரும் பத்திரிகைகள் பொழுதுபோக்கிற்குத் துணைபுரிகிற ஆழமற்ற, மேலோட்டமான, சிந்தனைக்கு வேலைவைக்காத, கிளுகிளுப்பு ஊட்டுகிற கதைகளையும் கிசுகிசுக்களையும் மிகுதியாகத் தந்து வாசகர்களின் ரசனையை மழுங்கடிப்பதில் தீவிர கவனம் செலுத்தி வருகிற நாட்டில் ஆழ்ந்த இலக்கியத்தை — ஸீரியஸ் லிட்டரேச்சர் — கருத்தில்கொண்டு இயங்குகிற பத்திரிகைகளும், இலக்கியஉணர்வோடு எழுதுகிற படைப்பாளிகளும் போதிய கவனிப்பையும் உற்சாகமான வரவேற்பையும் பெறமுடியாத சூழ்நிலையே இருக்கிறது. எனினும், இலக்கியத்துக்காகவே தங்கள் காலத்தையும் உழைப்பையும் அர்ப்பணித்து வாழ்ந்த மணிக்கொடி எழுத்தாளர்களின் ஆன்மீக வழிகாட்டலைப் பெற்று, இலக்கியத்தைத் தங்கள் வாழ்க்கையின் தேடலாகக் கொண்டுள்ள எழுத்தாளர்கள் குன்றாத தன்னம்பிக்கையுடனும் தளரா ஊக்கத்தோடும் முயற்சிகளில் ஈடுபட்டுவருகிறார்கள். காலம் அவர்களது வெற்றிக்குத் துணைபுரிய வேண்டும்.



# தற்கால இலக்கியத்துக்கு சிற்றிதழ்களின் பங்களிப்பு

மொழிவளர்ச்சிக்கும், அம்மொழி வளர் வதற்கும் வளம் பெறுவதற்கும் வகை செய்யும் இலக்கியங்களின், இலக்கியத்தின் பல்வேறு வடிவங்களின் — வளர்ச்சிக்கும் பத்திரிகைகள் நல்ல முறையில் துணைபுரிகின்றன.

தமிழ்மொழியின், தமிழ்இலக்கியத்தின், வளம் நிறைந்த வளர்ச்சிக்குப் பத்திரிகைகள் ஆற்றி வந்திருக்கின்ற, இப்பவும் ஆற்றி வருகிற — பங்கு கணிசமானது.

அதிகஅளவில் வாசகர்களைச் சென்ற டைய வேண்டும் என்ற நோக்கத்துடன் நடத்தப் படுகிற, ஜனரஞ்சகப் பத்திரிகைகள் என்று சொல்லிக்கொள்கிற வணிகநோக்குப் பத்திரிகை களும் தங்களால் இயன்ற அளவு இவ்வகையில் செயல்பட்டிருக்கின்றன என்பது ஓர் உண்மை ஆகும்.

அதே சமயம், அதிக அளவு வாசகர் களைப் பெற்றிராத போதிலும், இலட்சிய நோக்கோடும் கொள்கைப் பிடிப்புடனும், ஆற்றல் நிறைந்தோரின் ஒத்துழைப்புடனும் நடத்தப்பெற்றுள்ள சிற்றிதழ்கள் — சிறு பத்திரிகைகள் என்று பேசப்படுகிற லிட்டில் மேகஸின்ஸ் — தமிழ்மொழி புத்துயிர்ப்புடன் வளர்வதற்கும், தமிழ் இலக்கியம் தற்காலப்

புதுமைகளோடு வளமும் வனப்பும் பெறுவதற்கும் பெரிதும் உதவியுள்ளன. இது வரலாற்றுஉண்மை.

தமிழ்மறுமலர்ச்சி இந்த நூற்றாண்டின் இருபதுகளில் தொடங்கியது என்று வரலாறு எடுத்துக் கூறுகிறது. ஐம்பதுகளில் அது வலிமை பெற்றது.

முப்பதுகளில் இந்தியவிடுதலைப் போராட்டம் தீவிரம் கொண்டது. அதன் விளைவுகளில் ஒன்றாக இந்திய மொழிகளில் மறுமலர்ச்சி வேகம் தலைகாட்டியது. இந்த விழிப்புஉணர்வு உரைநடை வளர்ச்சிக்கு வகை செய்தது.

அச்சு இயந்திரங்களின் பரவுதலும், உரைநடை வளர்ச்சியும், விடுதலை இயக்க வேகமும் பத்திரிகைகள் வளர்வதற்கு உந்துசக்திகளாக இருந்தன என்றும் சொல்லவேண்டும்.

கொள்கைப்பிடிப்பும் லட்சியவேகமும், புதுமைகள் செய்யும் துடிப்பும் பெற்ற திறமைசாலிகள், சமூகத்துக்கும் நாட்டுக்கும் கலைகளுக்கும் மொழிக்கும் நன்மை செய்ய முயன்றார்கள். ஆர்வத்துடன் உழைத்தார்கள். பத்திரிகைகளைத் தங்களுக்கு ஏற்ற சாதனங்களாகப் பயன்படுத்தினார்கள்.

சொல்லில், பொருளில், சொல்லும் முறையில் புதுமைகள் சேர்ப்பதில் ஆர்வமும், தேசவிடுதலையிலும் சமூக சீர்திருத்தங்களிலும் தீவிரநாட்டமும் கொண்டிருந்த மகாகவி சுப்பிரமணிய பாரதியார் இந்தியா, சக்கிரவர்த்தினி ஆகிய பத்திரிகைகள் வாயிலாகத் தனது எண்ணங்களை வெளியிட்டார். கவிதைகள், கட்டுரைகள் மூலம் தன் கருத்துக்களையும் சமூக விமர்சனங்களையும் எளியநடையில் எடுத்துச்சொன்னார். வேகமும் உணர்ச்சியும் உயிர்த்துடிப்பும் கொண்ட எளிய இனிய நடைக்கு முன் மாதிரியாக அமைந்தன பாரதியாரின் எழுத்துக்கள்.

தமிழ் இலக்கிய நயங்களையும் வனப்புகளையும் வளங்களையும் ரசனாபூர்வ விமர்சனமுறையில் எடுத்துச் சொல்வதில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தவர் வ.வே.சு. ஐயர். தமிழ் மக்களுக்கு நாட்டுப்பற்றும் வீர உணர்வும் புகட்டுவதிலும் அவர் அதிக ஆர்வம் உடையவராக இருந்தார். அவர் ஆரம்பித்து நடத்திய பாலபாரதி இவ்வகைகளில் பணிபுரிந்தது. தமிழ்மொழி மறுமலர்ச்சி, இலக்கியம் கலை ஆகியவற்றின் வளர்ச்சிக்கும், இலக்கியவிமர்சனத்தின் முன்னேற்றத்துக்கும் இச்சிற்றிதழ் தன்னால் இயன்ற அளவு உழைத்துள்ளது.

தமிழ் நாவலுக்கு முதன்முதலாக இலக்கியத் தகுதி சேர்த்த படைப்பாளி என்ற சிறப்பைப் பெற்றவர் பி.ஆர். ராஜமையர். கமலாம்பாள் சரித்திரம் என்ற நாவல் எழுதிப் புகழ்பெற்றுள்ள அவரது பத்திரிகையின் பெயர் 'விவேகசிந்தாமணி'. அதில் பிரசுரமான தொடர்கதை, கட்டுரைகள் முக்கியத்துவம் உடையன.

ராஜமையரின் சமகாலத்தவரும், பத்மாவதிசரித்திரம் என்ற நாவலின் ஆசிரியருமான பெருங்குளம் அ. மாதவையா சமூக சீர்திருத்த நோக்குடன் எழுதிய இலக்கியவாதி. இந்த நோக்கில் அவர் பல நாவல்களும், குசிகர் குட்டிக் கதைகள் என்ற தலைப்பில் கதைகளும் எழுதினார். தனது எழுத்துக்களை அவர் தன்னுடைய பஞ்சாமிர்தம் என்ற பத்திரிகையில் வெளியிட்டு வந்தார்.

பாரதி வழியில் நாட்டுப்பணி, சமூக சேவை, இலக்கிய வளர்ச்சி ஆகியவற்றில் ஈடுபட்டிருந்தவர் சங்கு சுப்பிரமணியன். 1930களில், காலணாவிலையில், சுதந்திரச்சங்கு என்ற இதழை வெளியிட்டு மக்கள்மத்தியில் பாதிப்பும் ஏற்படுத்தினார் அவர்.

தேச விடுதலைப் போராட்டத்தில் சுதந்திரச் சங்கு தீவிரப் பங்கு ஆற்றியது. விறுவிறுப்பும் வேகமும் நிறைந்த கட்டுரைகளும், குத்தும் கிண்டல்மயமான கார்ட்டூன்களும் அதில் வெளிவந்தன. அதன் விளைவாக, அன்றைய பிரிட்டிஷ் ஆட்சியினரின் அடக்கு முறைக்கு சங்கு இலக்காயிற்று.

பின்னர், 1932ல் தமிழ்த்தொண்டுதான் சங்குக்கு மூச்சு என்று அறிவித்தபடி சுதந்திரச்சங்கு மீண்டும் தோன்றியது. சமூகப் பிரச்சனைகள் பற்றிய கட்டுரைகள், கதைகள், சிந்தனைகள் சங்குவில் இடம்பெற்றிருந்தன. படைப்பு இலக்கியத்தில் சாதனை புரிந்தவர்கள் என்று பிற்காலத்தில் போற்றுதலுக்கு உரியவர்களான வ.ரா. ந. பிச்சமூர்த்தி. கு. ப. ராஜகோபாலன், தி. ஜ. ரங்கநாதன் முதலியோர் சுதந்திரச் சங்கு இலக்கியஇதழில் எழுதினார்கள். புதுமைப்பித்தனின் ஆரம்பகாலக் கதைகள் சிலவும் அதில் பிரசுரம் பெற்றன. புதிய எழுத்தாளர்களின் வளர்ச்சிக்கு உதவும் வகையில் யோசனைகளும் கருத்துரைகளும் சங்கு ஆசிரியரால் தொடர்ந்து எழுதப்பட்டு வந்தன.

அரசியல் விழிப்பு ஏற்பட்டு வந்த காலம் அது. மகாத்மா காந்தியின் ஒத்துழையாமை இயக்கம் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. தேசீய விடுதலை உணர்வோடு, மொழி வளர்ச்சி பற்றியும் வலியுறுத்தப்பட்டது. அக்காலக்கட்டத்தில்தான் மணிக் கொடி வாரஏடு பிறந்தது. கே. சீனிவாசன், வ.ரா, டி.எஸ். சொக்கலிங்கம் ஆகியோரின் கூட்டுமுயற்சியில், அரசியல் இதழாக வளர்ந்த அதில் சிந்தனைவேகம் நிறைந்த கட்டுரைகளும், சிறுகதை களும் வெளிவந்தன. வ.ரா.வின் சிந்தனைக் கட்டுரைகளும், நடைச்சித்திரம் என்ற பெயரில் அவர் எழுதிய வாழ்க்கைச் சித்திரங்களும் அதில்தான் வெளிவந்தன. ஒன்றரை வருட காலம் வார இதழாக வந்த மணிக்கொடி நின்று போயிற்று. பின்னர் 1935ல் பி.எஸ். ராமையாவின் பெரும் முயற்சியால் மணிக்கொடி சிறுகதைப்பத்திரிகையாக மலர்ச்சி பெற்றது.

தமிழ்ச்சிறுகதைக்கு இலக்கியத்தன்மையும் வளமும் சேர்த்துப் புகழ் பெற்றுள்ள எழுத்தாளர்கள் மணிக்கொடியில் தங்கள் படைப்புகளை வெளியிட்டார்கள். புதுமைப்பித்தன், கு.ப. ராஜ கோபாலன், ந. பிச்சமூர்த்தி, மௌனி, சி.சு.செல்லப்பா, பி.எஸ். ராமையா முதலியவர்களின் கதைகள் குறிப்பிடத்தக்கவை.

மணிக்கொடிக்காரர்கள் தனிமனிதவாத, கலை, அரசியல் வாதிகள் தம் சமூகத்துப்பெருமை, சிறுமை, குணம் குறைகளை ஆராய்வதில் கவனம் கொண்டிருந்தார்கள். தம் சமூகத்தின் குடும் பத்தின் பழக்கவழக்க விவகாரங்களுக்கு அவர்கள் வெளியீடு காட்டினார்கள். மணிக்கொடிக்காரர்கள் எல்லோருமே சோதனைக் காரர்கள். ஒவ்வொருவர் சோதனை வெவ்வேறுவிதம். அவரவர் உலகம், பார்வை, வர்ணனை, தோரணை தனித்தனிவிதமானது என்று சி.சு.செல்லப்பா மதிப்பிட்டிருப்பது நினைவுகூரத் தகுந்தது.

மணிக்கொடியின் தாக்கம் பின்னர் தோன்றிய இலக்கியப் பத்திரிகைகளில் வலுவாக இருந்தது. மணிக்கொடி எழுத்தாளர்கள் — முக்கியமாக, புதுமைப்பித்தன், கு.ப. ராஜகோபாலன், மௌனி — பாதிப்பு பின்னர் தோன்றிய சிறுகதைஎழுத்தாளர்களின் நோக்கிலும் போக்கிலும் செயல்பட்டது.

இலக்கியம் வாழ்க்கையைப் பிரதிபலிப்பது. இலக்கியம் வாழ்க்கையின் கண்ணாடி. இலக்கியம் என்பது வாழ்க்கையைக் காண உதவுகிற சாளரம் என்று இவ்இலக்கியவாதிகள் கருதி னார்கள். மனித உளப்போராட்டங்களையும், உணர்ச்சி நாடகங் களையும், ஆன்மீகத்தேடல்களையும் தமிழ் மறுமலர்ச்சி இலக்கிய வாதிகள் அழகாகவும் ஆழமாகவும் எழுத்தில் சித்திரித்துள்ளனர்.

1936ல் சிறுகதை மணிக்கொடி நின்று போனதற்குப் பிறகு, முப்பதுகளின் கடைசிக் கட்டத்தில் தோன்றிய ஒன்றிரு இலக்கியப் பத்திரிகைகளும், 1940களில் ஆரம்பிக்கப்பட்ட இலக்கிய இதழ்களும் மணிக்கொடியின் பாதையைப் பின்பற்றின. மணிக்கொடி எழுத் தாளர்கள் காட்டிய வழியிலேயே பெரும்பாலும் கதைகள் படைக்கப்பட்டன.

1937 - 38ல் க.நா. சுப்ரமண்யம் நடத்திய சூறாவளி, 1940களில் தோன்றிய கலாமோகினி, கிராமஊழியன், தேனீ ஆகிய மறுமலர்ச்சி இலக்கியஇதழ்களும், 40களின் மத்தியில் இரண்டு வருட காலம், க. நா. சுப்ரமணியனை ஆசிரியராகவும், சி. சு. செல்லப்பாவைத் துணைஆசிரியராகவும் கொண்டு வளர்ந்த சந்திரோதயம் மாதம் இருமுறைப் பத்திரிகையும் மணிக்கொடியின் பாதிப்பைப் பெற்றிருந்தன.

1930களின் பிற்பகுதியில் தோன்றிய சக்தி 1940களில் வித்தி யாசமான ஒரு பத்திரிகையாக, நல்ல தரத்துடன் வளர்ந்து வந்தது.

தமிழ்ப்புத்தக வெளியீட்டுத் துறையில் குறிப்பிடத்தகுந்த முன்னோடியாக விளங்கி சாதனைகள் புரிந்துள்ள வை. கோவிந்தன் நடத்திய மாதப்பத்திரிகை சக்தி. ஒரு சில கதைகள், ஒன்றிரண்டு கவிதைகள், அறிவியல்கட்டுரைகள். சிந்தனைக்கு விருந்தாகும் பலவித விஷயங்களை, ரசமான துணுக்குகள் மற்றும் தகவல் களையும் சேகரித்து வழங்கிய மாதப் பத்திரிகை அது. ரீடர்ஸ் டைஜஸ்ட் பாணியில் வந்து கொண்டிருந்தது. தி.ஜ.ர. என்று அழைக்கப்பட்ட தி.ஜ.ரங்கநாதன் பல ஆண்டுகள் சக்தியின் ஆசிரிய ராகப்பணியாற்றினார். பின்னர், எழுத்தாற்றலும் சிந்தனைத் திறமும் அதிகம் பெற்றிருந்த எழுத்தாளர் சுப. நாராயணன் அதன் ஆசிரியராக இருந்து நல்ல முறையில் அதை வளர்த்தார். சில வருடங்களுக்குப்பிறகு, அழகிரிசாமியும் தொ.மு.சி.ரகுநாதனும் பொறுப்பு ஏற்று சக்தியை வளர்த்தனர். அதன் கடைசி நிலையில் வ. விஜயபாஸ்கரன் அதன் ஆசிரியராகப் பணியாற்றினார்.

மணிக்கொடி மாதமிருமுறை இதழ் சிறுகதை வளர்ச்சிக்கும் பெரிதும் உதவியது. பிறமொழிக் கதைகளின் மொழிபெயர்ப்பிலும் கவனம் செலுத்தியது. பின் வந்த பத்திரிகைகள் சுயமான சிறுகதைப் படைப்புகள், மொழிபெயர்ப்புகளுடன் புத்தக விமர்சனம், ஓரங்க நாடகம், கட்டுரை இலக்கியம் முதலியவற்றிலும் அக்கறை காட்டி வந்தன.

நாட்டில் ஏற்பட்டிருந்த அரசியல்விழிப்பும், புதியபுதிய விஷயங்களைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்ற வாசகர் அவாவும், பரந்த பார்வையோடு வாழ்க்கையை, மக்களை, நாட்டை, உலகத்தைக் கவனித்துத் தாம் உணர்ந்தவற்றை எழுத்தில் பதிவு செய்யவேண்டும் எனும் எழுத்தாளர் ஈடுபாடும் இந்த வளர்ச்சிக்கு வகை செய்தன.

தனிமனித வாழ்க்கையை, மனிதரின் உளப் போராட்டங் களையும் உணர்ச்சிநாடகங்களையும் அழகாகப் பிரதிபலிப்பது மட்டுமே இலக்கியத்தின் நோக்கமாக இருக்கக் கூடாது. வாழ்க்கை அவலங்களையும் சமூகச் சீர்கேடுகளையும் எடுத்துச்சொல்வதும் இலக்கியத்தின் கடமையாகும். அத்துடன், இந்நிலைமைகள் நீடிப் பதற்கான அடிப்படைக்காரணங்களை மக்களுக்கு உணர்த்தி, அவர் களை விழிப்படையச் செய்வதும், அநீதிகளை எதிர்த்துப் போராட ஊக்குவிப்பதும் வளம்பெற்று வாழமுடியும் என்ற நம்பிக்கையை அவர்களுக்கு உண்டாக்க வேண்டியதும் இலக்கியத்தின் நோக்கங் களாகும். இதை வலியுறுத்துவது முற்போக்கு இலக்கியம்.

இதர இந்திய மொழிகளில் — முக்கியமாக வங்கம், மலையாளம், தெலுங்குமொழிகளில் — முற்போக்கு இலக்கிய முயற்சிகளும் சாதனைகளும் 1920கள் 30களிலேயே தோன்றி விட்டன.

தமிழ்நாட்டில். இவ்வேகம் தாமதமாகத் தான் 1940களின் பிற் பகுதியில்தான் தலைதூக்கியது. இந்த நோக்கில் செயல்படும் பத்திரிகைகளும் தோன்றலாயின.

அதேசமயம் நாட்டில் செல்வாக்கு பெற்று வந்த திராவிடர் இயக்கமும் தங்கள் நோக்கில் இலக்கியமுயற்சிகளை வளர்ப்பதற் காகப் பத்திரிகைகள் நடத்தலாயினர். 1940களின் பிற்பகுதியிலும், 1950களிலும் பலப்பல சிற்றிதழ்கள் தோன்றின. பல விரைவிலேயே மறைந்தும் போயின. அவற்றிடையே நீண்டகாலம் வாழ்ந்து சாதனைகள் புரிந்த இதழ் என்று பொன்னியைக் குறிப்பிட வேண்டும்.

திராவிடர் இயக்கக்கொள்கைகளை வலியுறுத்தும் கதை களையும் கட்டுரைகளையும் வெளியிட்ட பொன்னி பாரதிதாசன் பரம்பரை என்று இளையகவிஞர்கள் பலரது படைப்புகளை அறிமுகம் செய்து, திறமையாளர்களை ஊக்குவித்தது. எழுத்தாளர் விந்தன் எழுதிய நாவல் ஒன்றும், டி. கே. சீனிவாசன் எழுதிய ஆடும், மாடும் நாவலும் பொன்னி மூலம் வாசகர் கவனிப்பைப் பெற்றன.

விந்தன் முற்போக்கு நோக்குடன் மனிதன் பத்திரிகையை நடத்தினார். ஜனநாயகம், புதுமை இலக்கியம், தென்றல், வாரம் என்று இதழ்கள் முற்போக்கு இலக்கிய ஆர்வலர்களால் தொடங்கப் பெற்றன. அவை நீடித்து வளரவில்லை. ஆயினும் முற்போக்கு இலக்கிய மனநிலை நாட்டில் பரவி வந்தது.

இந்நிலையில் 1955ல் வ. விஜயபாஸ்கரன் சரஸ்வதியைத் தொடங்கினார். எட்டு வருடகாலம் அது பாராட்டத் தகுந்த வகையில் செயலாற்றியது. திறமையான படைப்பாளிகளின் கதை களையும், அயல்நாட்டுச் சிறுகதைகளின் தமிழாக்கம், சிறந்த உலக நாவல்களின் சுருக்கம், சிந்தனைவளம் நிறைந்த கட்டுரைகள், நல்ல கவிதைகள் முதலியவற்றை வெளியிட்டு அது இலக்கியப்பணி புரிந்தது.

1955ல் தொ.மு.சி. ரகுநாதன் திருநெல்வேலியிலிருந்து வெளி யிட்ட சாந்தி மாதஇதழும் முற்போக்கு இலக்கிய வளர்ச்சிக்குத் தன் பங்கைச் செலுத்தியுள்ளது. தமிழில் சுயமான படைப்பு களுடன், மலையாளம் இந்திமொழிச் சிறுகதைகளின் தமிழாக்கத்தை சாந்தி வெளியிட்டது. நா. வானமாமலை, சாமி சிதம்பரனார், எஸ். ராமகிருஷ்ணன் ஆகியோர் ஆய்வுக் கட்டுரைகள் எழுதினார். கட்டபொம்மு, மருதுபாண்டியர் போன்ற நாட்டுப் பாடல்கள் குறித்து ரகுநாதன் விரிவான கட்டுரைகள் எழுதினார்.

சரஸ்வதி காலத்திலேயே மணிக்கொடி எழுத்தாளர் சி.சு. செல்லப்பா எழுத்து மாத இதழை இலக்கிய விமர்சன ஏடு ஆக நடத்தினார். தமிழ் இலக்கிய விமர்சனக்கட்டுரை வளர்ச்சிக்கு

வகை செய்த எழுத்து புதுக்கவிதை புத்துயிர்ப்பு பெறவும், இயக்க வேகம் கொள்ளவும் வழிவகுத்தது. 12 வருட காலம் வாழ்ந்த எழுத்துவின் இலக்கிய சேவை போற்றுதலுக்கு உரியது.

அதேசமயத்தில், க.நா.சுப்ரமண்யம் இலக்கியவட்டம் நடத்தினார். அது சுமார் ஒன்றரை வருடகாலம் தான் வாழ்ந்தது. எனினும், உலக இலக்கிய அறிமுகத்துக்கும், ஆழ்ந்த இலக்கிய ரசனைக்கும் அது உதவியது.

எழுத்து இலக்கிய வட்டம் இரண்டும் பின்னர் தோன்றிய சிற்றிதழ்களுக்கு உந்துசக்திகளாக விளங்கின என்று சொல்லலாம். இவ்வழியில் 'நடை' 'கசடதபற' குறிப்பிடத்தகுந்தவை. புதுமை யான சிறுகதைகள், இலக்கியவடிவங்கள் உத்திகளில் சோதனைகள், மொழிபெயர்ப்புக் கதைகள், கட்டுரைகள், கவிதை, இலக்கிய விமர்சனம், நவீன நாடகங்கள், கலை — ஓவியம் பற்றிய கட்டுரைகள் — இப்படிப் பல வகைகளிலும் படைப்புப் பணிபுரிந்தன இவை.

இத்தன்மையில், நவீன தமிழ் இலக்கியத்துக்குத் தங்களால் புதுமைகள் சேர்க்க முடியும் என்ற நம்பிக்கை கொண்டிருந்த திறமைசாலி இளைஞர்கள் தனித்தனியே பத்திரிகைகள் தொடங்கி அவரவர் ஆற்றலுக்கு ஏற்ற அளவில் செயலாற்றியுள்ளனர். ஞானரதம், அஃக், நீலக்குயில், சதங்கை, பிரக்ஞை, வானம்பாடி, கொல்லிப்பாவை, சுவடு, யாத்ரா, வைகை, சோதனை, பாலம், விஸ்வரூபம், பிரபஞ்சம், சாதனா, விழிகள், மானுடம், — இப்படி இதழியல் வரலாற்றில் இடம் பெறத்தக்க முயற்சிகள் பலவாகும். கண்ணதாசன் மாத இதழ் தனியாகக் குறிப்பிடத்தகுந்தது.

சிறுபத்திரிகைகள், இலக்கியம் என்று கூறி வெறும் கதைகள், கவிதைகளை மட்டுமே வெளியிடுவதில் திருப்தி அடைந்ததில்லை. தமிழ் நாடகம், தெருக்கூத்து, சமகால சமூகப் பிரச்சனைகள், பொருளாதாரம், அரசியல்தத்துவங்கள் போன்றவற்றிலும் அக்கறை காட்டலாயின. அவை சம்பந்தமான ஆய்வுகளையும் ஆழ்ந்த சிந்தனைகளையும் கட்டுரைகளாகப் பிரசுரித்தன.

தனிமனித மனஉளைச்சல்கள், ஏக்கங்கள், கனவுகள் ரீதியான விஷயங்களைச் சில பத்திரிகைகள் வெளியிட்ட போதிலும், இந்தப்போக்கிற்கு எதிர்ப்பாக சமூகநோக்குடனும் மனித நேயத் தோடும் அரசியல் தத்துவப்பார்வையோடும் விஷயங்களைப் பிரசுரிக்கும் சிற்றிதழ்களும் அதிகமாகத் தோன்றி இலக்கியப்பணி புரிந்துள்ளன. வானம்பாடி, நீதி, தாமரை, செம்மலர், மகாநதி, சகாப்தம் முதலிய இதழ்கள் இவ்வகைப்பட்டவை.

இலக்கியக் கொள்கைகளில் எந்த இஸத்தையும் பிரதி பலிக்காமல், இலக்கியம் என்ற நோக்குடனேயே புதிய எழுத்து வளர்ச்சிக்கு நீண்ட காலம் பணிபுரிந்துள்ளது தீபம் மாத இதழ். 23 வருடங்கள் வளர்ந்த தீபம் தற்காலத் தமிழ் இலக்கிய வளத்துக்குப்

போற்றத்தகுந்த முறையில் தொண்டாற்றியது. புதுமைக்கதைகள், நாவல்கள், குறுநாவல்கள், கவிதைகளோடு, பிறமொழி எழுத்தாளர் களின் அறிமுகம், எழுத்துக்களின் மொழிபெயர்ப்பு, மற்றும் தமிழ் இலக்கிய வரலாற்றைப் பிரசுரித்துள்ளது. திறமையான இளைய தலைமுறைப் படைப்பாளிகளின் வளர்ச்சிக்கும் தீபம் துணைபுரிந் துள்ளது.

கணையாழியும் தற்கால இலக்கியவளர்ச்சிக்கும், புதிய தலைமுறை எழுத்தாளர்களின் வளர்ச்சிக்கும் பாராட்டத் தகுந்த விதத்தில் பணியாற்றியுள்ளது. 25 வருடங்களுக்கும் மேலாகவே செயல்பட்டு வரும் இந்த இலக்கியப்பத்திரிகை தமிழில் குறுநாவல் வளமாக வளர்வதற்கு இப்பவும் உதவுகிறது.

1980களில் தோன்றி வளர்ந்த அநேக சிற்றிதழ்கள், ஒவ்வொன்றும் தனக்கெனத் தனித்தன்மை கொண்டு, இலக்கியப் பணிபுரிந்துள்ளன. சில, தொடர்ந்து பணியாற்றி வருகின்றன. பூ, கவனம், படிகள், லயம், இனி, புதுயுகம்பிறக்கிறது, மண், (நட்புறவுப்) பாலம், எதிர்வு, பயணம், நிஜம், காலச்சுவடு, 1 - 4, முன்றில், விருட்சம், கனவு, நிகழ், அன்னம்விடுதூது — இப்படிப் பல சிற்றிதழ்கள். இவற்றில் நிகழ், கனவு, விருட்சம் போன்ற ஒரு சிலவே தொடர்ந்து பணியாற்றிக் கொண்டிருக்கின்றன. இவற்றின் பணிகள் வெகுவாகப் பாராட்டப்பட வேண்டியவை.

பல்கலைக்கழக ஆய்வுகளுக்கு உதவக்கூடிய வகையில் ஆழ்ந்த விஷயங்களை வெளியிடும் சிற்றிதழ்கள் என்று பேராசிரியர் நா.வானமாமலை நடத்திய 'ஆராய்ச்சி' அவர் மறைவுக்குப் பிறகு அவரது மாணவர்கள் தொடர்ந்து நடத்தும் நாவாவின் ஆராய்ச்சி, பாளையங்கோட்டையிலிருந்து வருகிற 'மேலும்' ஆகியவற்றைக் குறிப்பிடலாம். இவை சீரிய முறையில், கனமான விஷயங்களை வெளியிட்டுள்ளன.

சிற்றிதழ்கள் சக்தி நிறைந்த வலிய சாதனங்கள் ஆகும். புதிய எழுத்துக்கு, புதிய புதிய சோதனைகளுக்கு அவை இடம் தருகின்றன. புதிது புதிதாகத் திறமையாளர்களைக் கண்டுகொள்ள அவை உதவுகின்றன. திறமையுள்ள படைப்பாளிகளின் வளர்ச்சிக்கு அவை பெரிதும் துணைபுரிகின்றன. கனமான சிந்தனைகள், வளமான கருத்துக்கள், அறிவு வளர்ச்சிக்குத் துணைபுரியும் ஆய்வுகள் முதலியவற்றை வெளியிட்டு கலை இலக்கியங்களைச் சிற்றிதழ்கள் வளம் செய்கின்றன. இதன்மூலம் வாசகர்களின் தரம் உயரவும் அவை வழிவகுக்கின்றன. காலத்தினூடு நிலைத்து நிற்கும் சாதனைகளாகத் திகழவேண்டும் என்ற லட்சியதாகத்தோடு நடத்தப்படுகிற பத்திரிகைகள் மொழிக்கும் இலக்கியத்துக்கும் பெருமை சேர்க்கக் கூடியவையாகும்.



# இலங்கை புதுமை இலக்கியம் - இலங்கை இதழ்கள்

தமிழ்நாட்டில் தீவிரமான இலக்கிய முயற்சிகள் ஊக்கத்தோடும் உற்சாகத்துடனும் செயல்படுத்தப்பட்டு, வெற்றி நடைபோடுகின்ற காலகட்டங்களில், இலங்கையிலும் அவற்றின் தாக்கம் நன்கு உணரப்படும். இலங்கையில் உள்ள இலக்கியவாதிகள் புதுவிழிப்புடனும் புதியவேகத்தோடும் தமிழ்நாட்டில் நடை பெறுகிற முயற்சிகளைப்போல, அங்கும் உற்சாக முயற்சிகளில் ஈடுபடுவது வழக்கம். தமிழ்நாட்டில் மணிக்கொடி வந்துகொண்டிருந்த காலத்தில், இலங்கையில் 'ஈழகேசரி' தோன்றி இலக்கிய மறுமலர்ச்சிக்காகப் பணிபுரிந்தது. பிறகு 'கிராம ஊழியன்' காலத்தில் இலங்கையில் எழுத் தாளர்கள் மறுமலர்ச்சி இலக்கியத்தில் ஆர்வம் காட்டினார்கள். மறுமலர்ச்சி என்றொரு சிறு பத்திரிகையை நடத்தினார்கள். கே. கணேஷ் பாரதி நடத்தினார். சரஸ்வதி நடந்து கொண் டிருந்தபோது அதை ஒட்டி சாந்தி, தாமரை வர ஆரம்பித்த காலத்தில், இலங்கை முற்போக்கு இலக்கியவேகம் தீவிரமாகச் செயல்படலா யிற்று. டொமினிக்ஜீவா மல்லிகையை ஆரம் பித்தார். இன்னும் எத்தனையோ முற்போக்கு இலக்கியச் சிறுபத்திரிகைகள் தோன்றின. மறைந்தன.

இலங்கையில் வியாபாரம் செய்துகொண்டே இலக்கியப் புரவலராகவும் எழுத்தாளராகவும், எழுத்தாளர்களின் நண்பராகவும் வாழ்ந்த ஒட்டப்பிடாரம் ஆ.குருசுவாமி பிற்காலத்தில் என்னிடம் அடிக்கடி சொன்னது உண்டு. இந்த இலக்கியத்தாக்கங்கள் செயல் அலைகள் பற்றியும் நீங்கள் எழுத வேண்டும் என்ற முடிவுரை யோடு அவர் இப்பேச்சை முடிப்பது வழக்கம்.

இலங்கையின் இலக்கியப்பத்திரிகைகள் மற்றும் புத்தக வெளியீடுகள் குறித்து விரிவாக எழுதப்படவேண்டியது அவசியமே. ஆனால் அவ்விதம் எழுதுவதற்கு எத்தனையோ தடங்கல்கள். அங்கே வெளியான - புத்தகங்கள், பத்திரிகைகள் முதலியன தமிழ்நாட்டில் கிடைப்பதில்லை. இது பெரிய குறைபாடு.

கிராமஊழியன், சரஸ்வதி, எழுத்து காலங்களில் இலங்கை நண்பர்களோடு ஓரளவு தொடர்புகொள்ள முடிந்திருந்தது. பின்னர் அது நின்றுபோயிற்று. 1970களில் இலங்கையில் பலப்பல சிறு பத்திரிகைகள் வெளிவந்திருப்பதாகத் தெரிகிறது. அவற்றைப் பார்க்கக்கூடிய வாய்ப்பு இங்கே யாருக்கும் கிட்டியதாகத் தெரிய வில்லை. என் இனிய நண்பர்கள் சிலரது உதவியினால் ஓரளவுக்குத் தகவல்கள் எனக்குக் கிடைக்க வழி ஏற்பட்டது. அவற்றை ஆதார மாகக் கொண்டுதான் நான் இக்கட்டுரையை எழுத வேண்டி யிருக்கிறது. சம்பந்தப்பட்ட பத்திரிகைகளின் பல இதழ்களைப் பார்க்கமுடியாத நிலையில், கிடைத்த ஒன்று இரண்டைப் பார்த்து விட்டு அவை பற்றி எழுத நேரிட்டிருப்பதால், இலங்கைச் சிறு பத்திரிகைகள் பற்றி மேம்போக்காய்ச் சில தகவல்களை மட்டுமே தரமுடிகிறது.

இலங்கை தினகரன் நாளிதழின் வார மஞ்சரியில், தெளிவத்தை ஜோசப் என்ற ஈழத்துஎழுத்தாளர் ஈழத்து முற்போக்கு இலக்கியப் பாரம்பரைக்கு வித்திட்ட ஏடு பாரதி பற்றி விரிவாகவே எழுதி இருக்கிறார்.

ஜனரஞ்சகப் பத்திரிகைகளான வணிகப் பத்திரிகைகள், கொள்கைப்பிடிப்போடு நடத்தப்படுகிற சிற்றேடுகள் குறித்து விளக்கமாக அறிவிக்கும் அவருடைய கட்டுரையிலிருந்து சில வரிகள்.

"எவ்வித சமுதாயநோக்கமோ இன்ன பிறவோ இன்றி வெறுமனே மக்களின் இரசனையை மழுக்கி வியாபாரம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டுள்ள பத்திரிகைகளுக்கு அரையிலும் குறையிலும் நிறுத்தப்படவேண்டிய அவசியம் இருப்பதில்லை.

அவர்களுடைய இலக்கு பணம். இலக்கை நோக்கிப் பயணம் செய்யும்போது இடையே வரும் தடைகளை உடைத்தெறியப் பணத்தால் முடியும்.

மற்றவர்களின் இலக்கு பணம் அல்ல. ஒரு தரநிர்ணயம். இந்த இரண்டாவது குழுவினர் தங்களது இலக்கு நோக்கி நடக்கும்போது இடையில் குறுக்கிடும் முதல் தடை பணம்.

சில நேரங்களில் பணத்தால் இலட்சியங்களை உடைக்க முடியும். ஆனால் எல்லா நேரங்களிலுமே இலட்சியங்களால் பணத்தை உடைக்கமுடிவதில்லை. ஆகவே ஏதாவதோர் இலட்சியத் துடன் ஓர் ஏட்டை ஆரம்பிக்கிறவர்கள் இடையில் குறுக்கிடும் பணத்துடன் மோதிப்பார்த்து முடியாமல் தோற்றுவிடுவதுண்டு. இந்தத் தோல்வியே பெருமைக்குரியது தான்...

இவர்களுக்கு ஓர் எதிர்ப்புக் குரல்கூட நாம் கொடுக்கா விட்டால் இவைகளை நாமும் ஏற்றுக் கொண்டவர்களாகிறோம் என்று கூறிக்கொண்டு வெளிவரத் தொடங்கும் ஒரு சிற்றேட்டின் இலக்கு பணம் அல்ல. இத்தனை சீரழிவுகளையும் அழித்தொழித்து விட்டு, தனது இலக்கை அடைந்து விடுவதென்பதும் சாத்தியமான தொன்றல்ல. ஆனாலும் அவர்களுடைய நோக்கம், நாம் வாழும் காலத்தில் நடக்கும் அந்த அநீதிகளுக்கு நாமும் உடந்தையாகிவிடக் கூடாது என்னும் விழிப்புணர்வு போற்றற்குரியது.

தமிழ்நாட்டிலும் சரி, இங்கும் சரி இலக்கியச் சிற்றேடுகளின் தோற்றம் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் குறிப்பிடத்தகுந்த மாறுதல் களை நிகழ்த்தியிருக்கின்றது என்பதை மறுக்கமுடியாது.

1930ம் ஆண்டு ஜூன் மாதம் தொடங்கப்பட்ட ஈழகேசரி, 1946 ஜனவரியில் தொடங்கிய பாரதி, 1946 மார்ச்சில் தொடங்கிய மறுமலர்ச்சி, அதற்குப்பின் தோன்றிய இலக்கியச் சிற்றேடுகளும் தம்மாலான பணியினைச் செய்தே மறைந்துள்ளன. "(தினகரன் வாரமஞ்சரி, நவம்பர் 18, 1984)

ஈழகேசரி பல வருட காலம் நடைபெற்ற வாரஇதழ் ஆசிரியர் சுன்னாகம் பொன்னையா. சோ. சிவபாதசுந்தரம் ஈழ கேசரியில் பணிபுரிந்திருக்கிறார். ஈழத்துச்சிறுகதைப் படைப்பாளிகள் பலரும் அதில் கதை எழுதினார்கள். பிற்காலத்தில் நல்ல நாவல் களைத் தொடர்கதையாகப் பிரசுரித்தது. இலக்கியக்கட்டுரைகள், சர்ச்சைகள், புத்தக விமர்சனங்கள் இடம்பெற்றன.

மறுமலர்ச்சி - சில இதழ்களே வெளிவந்தன. வரதர், மகாகவி, அ.ந. கந்தசாமி. அ.செ. முருகானந்தன் போன்ற அந்நாளைய படைப்பாளிகள் இதில் எழுதினார்கள்.

'பாரதியை' கே. கணேஷ் ஆரம்பித்து நடத்தினார். திரு.வி.க. விடம் தமிழ் படிப்பதற்காக, சென்னைக்கு வந்த கணேஷ் இடது சாரிகள் பலருடனும் பழகும் வாய்ப்பைப் பெற்றார். நவசக்தி

ஆசிரியர் குழுவில் இருந்த கே. ராமநாதன், ஐ. மாயாண்டி பாரதி, சக்திதாசன், சுப்பிரமணியன் ஆகியோருடன் அவருக்கு நட்பு ஏற்பட்டது. தமிழ்நாட்டின் பழம்பெரும் எழுத்தாளர்கள் சகல ருடனும் பழகிய கணேஷ் கே.ஏ. அப்பாஸ் முல்க்ராஜ் ஆனந்த், கிருஷன்சந்த் போன்ற வடஇந்திய எழுத்தாளர்களோடும் பழகினார். பெரும்பான்மையான வெளிநாடுகளுக்குச் சென்றுள்ள அவர் அங்கே உள்ள எழுத்தாளர்கள், இலக்கியங்களுடன் தொடர்பு கொண்டவர். 1984ல் கூட பல்கேரியா போய் வந்தார். பல்கேரியக் கவிதைகளைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். முல்க்ராஜ் ஆனந்த், கே.ஏ.அப்பாஸ் நாவல்களையும் அவர் தமிழாக்கியிருக்கிறார். கலா நேசன் என்ற பெயரில் அவர் கவிதைகள் எழுதினார். இப்போதும் இலங்கைவாசியாகத்தான் இருக்கிறார்.

இலங்கையில் முற்போக்கு எழுத்தாளர் சங்கம் தோன்று வதற்குக் காரணமாக இருந்தவர்களில் கே. கணேஷும் ஒருவர். இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கமும், ஈழத்தின் தமிழ் இலக்கிய வளர்ச்சியும் என்ற கட்டுரையில் இவ்வாறு குறிப்பிட்டிருக் கிறார்.

"1946இல் இச்சங்கம் தோன்றுவதற்குக் காரணமாயிருந்தோர் அக்காலத்தில் இலங்கை கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கிய உறுப்பினர் களாகவிருந்த கே. ராமநாதன், கே. கணேஷ் ஆகியோரே. இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் உந்துதலையும் ஆற்றுப்படுத்தலையும் அடிக் கல்லாகக்கொண்டு இந்தியாவில் கே.ஏ.அப்பாஸ் முதலியோரின் தலைமையில் தோன்றிய முற்போக்கு எழுத்தாளர் சங்கம் போன்று ராமநாதனும் கணேஷும் இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தைத் தோற்றுவித்தனர்".

இதே கணேஷும் ராமநாதனும்தான் கூட்டாசிரியர் களாக இணைந்து பாரதி சஞ்சிகையை நடத்தினர்.

பாரதியின் முதலாவது இதழ் 1946 ஜனவரியில் வெளிவந்தது.

அந்த இதழின் தலையங்கத்தின் சிறுபகுதி இது: பாரதி அணுசக்தி யுகத்தின் சிற்பி. விஞ்ஞானமுடிவுகளில் புரட்சி ஏற்படுத்திய அணுசக்தி போல் தமிழர் மொழிக்கும் புதுமைப் போக்களித்த மகாகவிபாரதியின் பெயர் தாங்கி வருகிறது இவ்விதழ். அவர் தமிழுக்குப் புதுவழி காட்டியது போலவே பாரதியும் கண்டதும் காதல்கதைகள் மலிந்து விட்ட இன்றைய தமிழிலக்கியப் போக்கிற்குப் புதுவழி காட்டும்... "தமிழ் தமிழுக்காகவே என்று தம் கூட்டத்திற்குள்ளேயே தமிழைச் சிறைப்படுத்திக்கொண்ட பண்டிதர்களின் இரும்புப் பிடியினின்று அதனை மீட்டு மக்கள்

சொத்தாக்கினார் பாரதியார். இன்று பாரதி பரம்பரையில் வந்தோம் என்று ஜம்பமடிக்கும் எழுத்தாளர் கோஷ்டி கலை கலைக்காகவே என்று அப்பண்டிதர் பல்லவியையே வேறு இராகத்தில் பாடுகிறது. தமிழைச் சிறைமீட்ட பாரதியார் செய்த சேவையே பாரதியின் இலட்சியமும்.

கலை கலைக்காகவே என்றுகூறி மொழி வளர்ச்சியைக் கட்டுப்படுத்தும் கலைஞர்களுக்கெதிராகவும் ஏதாதிபத்தியத்துக் கெதிராகவும் - பாசிசத்துக்கெதிராகவும் - முதலாளித்துவத்துக்கு எதிராகவும் குரல் எழுப்ப பாட்டாளி வர்க்கத் துணையுடன் பொதுவுடைமைச்சமுதாயத்துக்கு ஆதரவாகக் குரல் எழுப்பிய முதல் தமிழ் ஏடு பாரதிதான் என்று இலங்கை எழுத்தாளர்கள் கருதுகிறார்கள்.

1946 ஜனவரியில் தோன்றிய பாரதி ஆகஸ்ட் முடிய உள்ள எட்டு மாதங்களில் ஐந்து இதழ்கள்தான் கொண்டுவர முடிந்தது. அதன் ஆறாவது இதழ் 1948 ஜனவரியில் பிரசுரம் பெற்றது. அதுவே பாரதியின் இறுதி இதழாகவும் அமைந்தது.

முற்போக்கு இலக்கிய இதழாக ஆரம்பித்து, இலக்கியத் துக்கும் அரசியலுக்கும் சமமான இடம் அளித்து வந்த பாரதி, மூன்றாவது இதழுக்குப் பிறகு இலக்கியப் பகுதிகளைக் குறைத்துக் கொண்டு ஒரு அரசியல் ஏடு ஆகவே மாறிவிட்டது.

இலக்கியவாதிகளின் ஆதரவையும் பெறாமல், அரசியல்வாதி களின் பக்கபலத்தையும் பெறமுடியாமல் பாரதி தன் வரலாற்றை முடித்துக் கொண்டது.

முற்போக்கு இலக்கிய ஏடுகள் என்று சொல்லிக்கொண்டு இலங்கையில் அவ்வப்போது சிறுபத்திரிகைகள் வந்திருக்கின்றன. அவை சிறிது சிறிது காலமே உயிர் வாழ்ந்துள்ளன.

நாவலாசிரியர் இளங்கீரனை ஆசிரியராகக்கொண்டு 1960 களில் மரகதம் என்றொரு பத்திரிகை வந்தது.

1968 மருதூர்வாணன் ஆசிரியராக இருந்து "தேன்மதி" என்ற பத்திரிகையை நடத்தினார். இளம் எழுத்தாளர்களுக்கு உற்சாகம் அளிக்கும் அரங்கமாக அது விளங்கியது. கலைக்கூடல் என்ற அமைப்பையும் உருவாக்கி எழுத்தாளர்கள் சந்தித்து உரையாடிப் பழகுவதற்கும் இது ஏற்பாடு செய்தது.

யாழ்ப்பாணம் இ.செ. கந்தசாமி 1967 வசந்தம் மாத இதழை ஆரம்பித்தார். ஈழத்துக்கலை இலக்கியத் துறையில் முற்போக்கான பாதையில் செல்கின்றோம் என்று அறிவித்தது அது. தமிழ்நாட்டி லிருந்து கட்டுப்பாடின்றி இறக்குமதியாகி, இலங்கை வாசகர்கள்

மனசையும், இலங்கைப் பத்திரிகைகளையும் வெகுவாகப் பாதித்துத் தீமைபுரியும் தமிழ்ப்பத்திரிகைக் குப்பைகளுக்குப் பலத்த எதிர்ப்பு தெரிவித்தது வசந்தம். இளைய எழுத்தாளர்களின் கதை கவிதை களுடன், லுசூன் போன்ற முற்போக்கு இலக்கிய ஆசிரியர்களின் படைப்புகளை மொழி பெயர்த்தும் பிரசுரித்தது.

புரட்சிகரசிந்தனையாளர்களின் எழு(த்துக்) களம் என்று கூறியவாறு புத்தளம் மன்னார் வீதியிலிருந்து பொன்மடல் வந்தது.

அக்னி என்ற சிற்றேடு மனிதாபிமானப் படைப்பாளிகளின் முற்போக்குச் சிந்தனைக்களமாகச் செயல்பட்டது.

1971ல் கற்பகம் தோன்றியது. வண்மையுடையதொரு சொல் லினால் உங்கள் வாழ்வு பெற விரும்பி நிற்கிறோம் என்ற பாரதி வாக்கை இலட்சியவரிகளாகத் தாங்கி கலை, இலக்கியம் அறிவியல், பொருளாதாரம் போன்ற பல துறைகளிலும் கவனம் செலுத்திய கற்பகம் ஈழத்துமண் வாசனையையும் சாதாரண விவசாயத் தொழிலாள மக்களுடைய வாழ்க்கைமுறையையும் கருத்திற் கொண்டு ஆற்றல் இலக்கியங்கள் படைக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்தியது.

"களனி நூறு சிந்தனை மலரட்டும் நாறும் கீழ்மைகள், தகரட்டும்" என்ற கொள்கை முழக்கத்துடன், யாழ்ப்பாணத்தில் 1973 பிற்பகுதியில் தோன்றியது.

தேசத்தின் முற்போக்கு இலக்கியம் மட்டுமல்ல முழு முற்போக்கு இயக்கமுமே பின்னடிக்கப்பட்ட நிலையில், ஒரு விவசாயப் பிரதேசமான கிளிநொச்சியை நிலைக்களமாகக் கொண்டு களனி தீவிரமாகச் செயல்பட முயன்றது. ஆயினும், 1975ன் முற் பகுதிவரை நான்கே நான்கு இதழ்களைத்தான் கொண்டுவர முடிந்தது இலக்கிய உற்சாகிகளினால்.

1976ல் மீண்டும் "ஊற்றுக்கண்களைத் திறக்க" முற்பட்டது வைரம் பாய்ந்த தனது கொள்கைக் கால்களில் ஊன்றி நின்று. ஈழத்தமிழ் இலக்கியப்பரப்பு ஏற்றமுற வளமூட்டும்; நூறு பூக்கள் மலரட்டும்; நாறும் கீழ்மைகள் தகரட்டும். இது அன்றும் இன்றும் என்றும் களனியின் தாரக மந்திரம். அழகான ரோசாப்பூக்கள் களனியின் இலக்கல்ல. ஆனால் அவை அழகூட்டி அலங்கரிப்பதற்கு களனி எதிரல்ல என்று அது அறிவித்தது.

கிட்ட நிற்கும் நண்பர்கள் மட்டுமல்ல. எட்டி நிற்கும் நண்பர்களையும் களனி அரவணைத்து முன்னேற்றும். காலை இளங் கதிர்போல நாளும் தோன்றுகிற புதுமைச்சிற்பிகளின் புலமைக்குக் களமாய் களனி அமைவாகும். முதிய தலைமுறையின் முத்தான

அனுபவங்கள் பிற்கால சந்ததிக்குப் பின்பலமாய் அமைவதற்குக் களனி துணையாகும் என்றும் நம்பிக்கைக் குரல் கொடுத்தது.

சமுதாயப்பார்வையுடன் எழுதப்பட்ட கதைகள், கட்டுரைகள், கவிதைகளோடு கலை விமர்சனங்களையும் களனி வெளியிட்டது. நாடக விமர்சனத்துடன், மிருணாள்சென் எழுதிய கட்டுரை களையும் மொழிபெயர்த்து வெளியிட்டது.

## தாயகம்

1974ல் யாழ்ப்பாணம் தேசிய கலை இலக்கியப்பேரவை வெளியீடாகத் தாயகம் வெளிவந்தது. என்.கே. ரகுநாதன், யோகன், சில்லையூர் செல்வராசன், அன்பு ஜவஹர்ஷா போன்றவர்களின் படைப்புக்களையும் க. கைலாசபதியின் கட்டுரைகளையும் தாங்கி வந்தது. தோட்டத் தொழிலாளரின் தொடர்ச்சியான சோக வரலாற்றை முக்கியப்படுத்தும் கட்டுரைகளும் கதைகளும் அதில் அதிகம் இடம் பெற்றன.

## நவயுகம்

காரைத் தீவில் பிரசுரம் பெற்றது. மருதூர்க் கொத்தன் கதைகளும், திக்கு வெல்லைக் கமால், தில்லையடிச் செல்வன், மேமன்கவி போன்றோரின் கவிதைகளும் வெளிவந்தன.

1979இல் 'சமர்' இலக்கிய வட்டக்குழுவினருக்காக, 'சமர்' என்ற முற்போக்கு இலக்கியஏடு தோன்றியது. ஆசிரியர் டானியல் அன்ரனி.

கீற்று இலக்கிய வட்டம் என்ற அமைப்பு 1979இல் கீற்று என்ற காலாண்டு சஞ்சிகையை நடத்தியது. கல்முனை எனும் இடத்தி லிருந்து பிரசுரமான இது வழக்கமான கவிதை, கதை, மொழி பெயர்ப்புக் கதைகள், நாடக விமர்சனம் முதலியவற்றை வெளி யிட்டது. சினிமா சம்பந்தமான கட்டுரைகளும் பிரசுரம் பெற்றன.

"உண்ணுவதற்கும் நல்ல உணவின்றி உழைப்பவனின் எண்ணத்தை நாளும் இலக்கியமாய்ப் பாய்ச்சுகின்ற மின்னலெனும் கீற்று வீச்சாகும் எம் எழுத்து" என்று பெருமையுடன் கூறிக் கொண்ட இக்காலாண்டு ஏட்டின் ஆசிரியப்பொறுப்பை ஆர்.என். லோகேந்திரலிங்கம், கல்லூரன், கலைக்கொழுந்தன் ஆகியோர் கவனித்துக் கொண்டனர்.

சர்ச்சைக்குரிய விஷயங்கள், விறுவிறுப்பான தகவல்கள், பரபரப்பு ஏற்படுத்தும் அபிப்பிராயங்கள் முதலியவற்றை வெளியிடு வதில் கீற்று ஆர்வம் காட்டியது. எனவே அது இலக்கிய அபி மானிகள், பொதுவான வாசகர்கள் முதலியோரது கவனத்தைக் கவர்ந்தது.

சிலோன் நியூஸ் பேப்பர்ஸ் லிமிடெட் 1975 ஏப்ரல் முதல் சுடர் என்ற கலை இலக்கியத் திங்கள் இதழை நடத்தியது. இது சில வருடங்கள் தொடர்ந்து பிரசுரம் பெற்றதாகத் தெரிகிறது.

இலங்கைத் தமிழ்ப் பத்திரிகைகளிடையே சிரித்திரன் தனி இடம் பெற்றுள்ளது. இது பரவலான கவனிப்புக்கு இலக்காகி, தமிழகத்தின் சஞ்சிகைகளின் கவனத்தையும் கவர்ந்து பெருமை பெற்றிருக்கிறது.

இதன் ஆசிரியர் சிவஞானசுந்தரம் (சிவா) ஓர் ஓவியர். இலங்கையின் பிரபல தினசரிகளான தினகரன், வீரகேசரி ஆகிய பத்திரிகைகளில் சவாரித் தம்பர், சின்னக்குட்டி, மைனர் மச்சான் போன்ற பாத்திரங்கள் மூலம் தனக்கெனத்தனி இடம் தேடிக் கொண்டவர் சிவா. இந்த நகைச்சுவைப்படைப்புகளைத் தூரிகை மூலம் அளித்து வாசகர்களை ஈர்த்துக் கொண்டவர்.

வடஇந்தியாவிலிருந்து வெளிவரும் கொஞ்ச், லோக சத்தா ஆகிய மராட்டிய ஏடுகளிலும் சிவாவின் ஓவியப் படைப்புகள் இடம் பெற்றுள்ளன.

அரசாங்கக் கட்டடக் கலைப்பகுதியில் கடமையாற்றிய சிவாவுக்கு, தினகரன் ஆசிரியராகப் பணியாற்றிய க. கைலாச பதியின் நட்பு கிடைத்தது. தினகரன் நாளிதழில் தொடர்ந்து தனது படைப்புக்களைப் பிரசுரிப்பதற்கான வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது.

அவர் சிறிது காலம் பம்பாயில் தங்கி கட்டடக் கலை இயலில் பயிற்சி பெற நேர்ந்தது. அப்போதுதான் சிவாவின் கார்ட்டூன் சித்திரங்கள் பிளிட்ஸ் முதலிய பத்திரிகைகளில் வரலாயின. இவருடைய சித்திரப் படைப்புக்களைப் பிரசுரித்த கொஞ்ச் என்ற சஞ்சிகை இந்திய தேசியத்தலைவரான வல்லபாய் பட்டேலின் மகன் தாதாபாய் பட்டேல் நடத்தியது ஆகும்.

இலங்கை எழுத்து உலகத்தில் ஆட்சி செலுத்திய முற்போக்கு — பிற்போக்கு — நற்போக்கு என்ற எதிலும் சிக்காதவர் சிரித்திரன் சிவா. சிரித்திரன் என்ற சஞ்சிகையை நடத்துவதற்காக அவர் தான் பார்த்து வந்த அரசாங்க உத்தியோகத்தைத் துறந்தார். தனக்குக் கிடைத்த பணத்தில் பத்திரிகையை ஆரம்பித்தார். அது வெற்றி கரமாக வளர்ந்தது.

செய்தொழில் தெய்வம். சிரிப்பே சீவியம் என்பதை இலட்சிய எண்ணமாகக் கொண்டது சிரித்திரன்.

சிரித்திரனில் முக்கிய இடம்பெறும் மகுடியின் கேள்வி பதில் பகுதி வாசகர்களுக்கு வெகுவாகப் பிடித்தது ஆகும். நகைச்

சுவையோடு கூடிய சீர்திருத்தக் கருத்துக்களும், சமூகப் பார்வையும் படிப்பவர்களைச் சிரிக்க வைப்பதோடு சிந்திக்கவும் தூண்டும். இக்கேள்வி — பதில்கள் புத்தகமாகவும் வெளிவந்திருக்கின்றன.

இளம் எழுத்தாளர்களுக்கு ஊக்கம் அளிக்கும் நோக்கத்துடனேயே பல பத்திரிகைகள் ஆரம்பிக்கப் பட்டிருக்கின்றன.

குமரன், புதுசு, சமூகதீபம், களம், ஒளி, நதி — இப்படி அநேகம். இவற்றில் தாரகை என்பதும் ஒன்று.

வேள்வியொன்று காண வாரீர் என்று அது எழுத்தாளர்களை அழைத்தது.

இளம் எழுத்தாளர்களின் உள்ளக் குமுறல்கள் — எழுதத் துடிக்கும் இலக்கிய ஆர்வலர்களின் இதயத் துடிப்புகள் எமக்கும் கேட்கிறது. தாள்தாளாக எழுதி அனுப்பிவிட்டு அவை பிரசுரிக்கப் படாமையால் பாழ்பாழாகப்போன பல படைப்பாளிகளின் இதயங்களையும் பரிசோதித்துப் பார்த்து விட்டோம்.

இமயமலையில் ஏறுவது மிகமிகக் கஷ்டமான காரியம். ஆனால் ஒரு இலக்கியப்படைப்பாளியின் இலட்சியப் படைப்பைப் பத்திரிகையில் வெளிக்கொணர்வது அதைவிடக் கஷ்டம். இப்படிச் சொல்லிக் கொண்டு இலக்கிய உலகத்தையே கைவிட்டுச் சென்ற பல அன்பர்களோடும் நாம் பழகி விட்டோம்.

எனவேதான், பிரபலம் — புதுமுகம் என்ற பேதமின்றி, தரமாக எதுவரினும் ஏற்றுப்பிரசுரிக்கும் நிலைக்குத் தயாராயிருக்கின்றோம்.

இந்த இலக்கிய வேள்வியில் கலந்துகொள்ளுமாறு படைப்பாளிகளையும், ஆர்வலர்களையும் இருகரங்கூப்பி வரவேற்கிறோம்.

இவ்விதம் அறிவித்துக்கொண்டு தாரகை ஆகஸ்ட் 1981இல் தோன்றியது. ஆசிரியர் சி. சங்கரம்பிள்ளை. ஆசிரியர்குழு கண். மகேஸ்வரன், இந்திராணி தாமோதரம்பிள்ளை. பிரசுரமான இடம் மட்டக்களப்பு.

மரபுக் கவிதை, புதுக்கவிதை, கதைகள், நகைச்சுவைச் சித்திரம், சமூக சீர்திருத்த நோக்குடைய கட்டுரைகளைத் தாரகை பிரசுரித்தது.

முற்போக்கு இலக்கியஉணர்வுடன், மல்லிகை போல் தரமான இலக்கியஏடு ஆகக் கொண்டுவர வேண்டும் என்ற நோக்கத்துடன் வசந்தம் 1981இல் ஆரம்பிக்கப்பட்டது. வசந்தம் இலக்கிய வட்டத்தினருக்காக நடத்தப்பெற்ற இந்த சஞ்சிகை யோகநாதன் கவனிப்பில் வளர்ந்தது. கைலாசபதி, சிவத்தம்பி கட்டுரைகள்,

யோகநாதன் கதைகள், கிருஷ்ணசந்தர் என்ற இந்தி ஆசிரியரது படைப்புக்களின் மொழிபெயர்ப்பு முதலியவற்றை வெளியிட்டது. தமிழகத்திலிருந்து பொன்னீலன் கவிஞர் பாப்ரியா, ருத்ரய்யா ஆகியோரின் எழுத்துக்களும் இதில் பிரசுரமாகியுள்ளன.

யாழ்ப்பாணத்திலிருந்து 1981இல் வெளிவந்த மற்றுமொரு பத்திரிகை கிருதயுகம். ஆசிரியர் க. வீரகத்தி.

ஊனுயிர் நான் உளவரைக்கும்

ஒருலகர சென்றே பாடி

மானுட நேசிப்பை வளர்ப்பேன்

என்பதை புன்னகை பூக்கும்

இவ்வரிகளை இலட்சிய எண்ணமாகக் கொண்டிருந்தது. பேராசிரியர் கைலாசபதி ஒரே உலகம் பற்றி எழுதிய கட்டுரை, சரியான இடத்தில் சரியான சொல்லைப் பயன்படுத்தக்கூடிய சீரான மொழியாட்சியை வலியுறுத்தி முனைவர். சாலை இளந் திரையன் எழுதிய கட்டுரை, மதுரையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாடு ஆராய்ச்சிக் கருத்தரங்குகள் பற்றி முருகையன் எழுதிய கட்டுரை, மற்றும் காவலூர் ஜெகநாதன் கதை, சில கவிதைகள், சீனாவில் பணிபுரியும் திருமதி. ராணி சின்னத்தம்பியுடன் ஒரு பேட்டி, பாரதி நூற்றாண்டு விழா 1982 என்று தலையங்கம் - இவை இந்தப் பத்திரிகையின் தனித்தன்மையை எடுத்துக்காட்டும் விதத்தில் இருக்கின்றன. கிருதயுகம் எத்தனை இதழ்கள் (எத்தனை காலம்) வெளிவந்தது என்று தெரியவில்லை.

பூரணி, அலை, கவிஞன் என்று சில இலக்கியப் பத்திரிகைகள் வந்ததாகவும், அவை இலக்கியவாதிகளின் கவனிப்புக்கும் பாராட்டு தலுக்கும் உரியனவாக இருந்தன என்றும் தெரிய வருகிறது. இவற்றின் பிரதிகள் என் பார்வைக்கோ, என் நண்பர்கள் பார்வைக்கோ கிடைக்கவில்லை.

இலங்கையில் பிரசுரமான சிறுபத்திரிகைகளில் — சிறிது காலஅளவே வாழ்ந்த போதிலும் — முக்கியகவனிப்புக்கு உரிய தாகி, ஏதோ சிலவகைகளில் தாக்கங்கள் ஏற்படுத்திய வெளியீடு களில், தீர்த்தக்கரைக்கு முக்கிய இடம் உண்டு.

காலாண்டு ஏடாக வெளிவந்த தீர்த்தக்கரை ஐந்து இதழ்கள் தான் பிரசுரம் பெற்றது என்று ஒரு இலக்கிய ரசிகர் குறிப்பிடுகிறார்.

மலையகத்தின் இளைய தலைமுறையைச் சார்ந்த புத்திஜீவி வட்டத்தினரால் தயாரிக்கப்பட்ட இந்த சஞ்சிகை தீர்த்தக்கரை, இலக்கிய வட்டத்திற்காக எல். சாந்திகுமாரை ஆசிரியராகவும்

எஸ். நோபெட், எம். தியாகராம், எல். ஜோதிகுமார் ஆகியோரை ஆசிரியர்குழு ஆகவும் கொண்டு இயங்கியது.

சிந்தனை பேதங்களுக்கெல்லாம் அப்பால் நின்று இலக்கியம் படைக்கும் நவீனகம்பர்கள் ஒரு புறமும், எமக்கு இளங்காலையின் கதகதப்புத் தேவையில்லை. நெருப்பைத் தாருங்கள் என்று யதார்த்தத்தை மறந்த நக்கீரர்கள் ஒருபுறமும் நின்று வரிந்து கட்டிக்கொண்டு மகத்தான கூப்பாடு போடுகையில், இவற்றின் இடையே அல்லலுறும் இளம் எழுத்தாளர்களைப் பார்த்தும், வந்து குவியும் மூன்றாந்தர சஞ்சிகைகளில் புதையுண்டு கிடக்கும் பலதரமான வாசகர் கூட்டத்தைப் பார்த்துமே நாம் எம்மை இந்தப் புதிய அக்கினிப் பரீட்சையில் இறக்கிக் கொள்ள நேரிட்டது.

இவ்வாறு கூறிக்கொண்டு தீர்த்தக்கரை தோன்றியது. மலையகத்தின் முன்னேற்றத்தில் ஆர்வமும் அக்கறையும் கொண்டிருந்த அறிவுஜீவிகளின் கூட்டுறவு முயற்சிதான் இக்காலாண்டு ஏடு. மலையக மக்களின் வாழ்க்கை, அவர்களுடைய சூழ்நிலை, பிரச்சினைகள், மற்றும் கலாசாரம் ஆகியவற்றில் கருத்து செலுத்தியது.

மலையகமத்தியில் எழுதாத இலக்கியமாய் வாழ்ந்து வளர்ந்த நாட்டுப்பாடல்களைச் சேகரித்து ஏட்டில் எழுதாத இதயத்து ராகங்கள் என்று இதழ்தோறும் நிறையவே அச்சிட்டு வந்தது குறிப்பிடத்தகுந்த முக்கியமான பணி ஆகும்.

மலையகமக்களின் வாழ்க்கையையும் உணர்ச்சியையும் பிரதிபலிக்கும் சிறுகதைகள் தீர்த்தக்கரையில் வெளிவந்தன. திறமையுள்ள இளைய எழுத்தாளர்களின் படைப்புக்கள் அவை.

"எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்த கொள்ளக் கூடிய சந்தம், பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்தில் செய்து தருவோன் நமது தமிழின் பெயரால் எழுகின்ற சந்தடிகளுக்கும், கலையின் பெயரால் நடக்கும் ஆரவாரங்களுக்கும் மத்தியில் பாரதியின் எளிமையான இந்தக் கூற்று இன்னும் அதன் மகத்துவத்தைத் தாங்கி நிற்கின்றது. இந்தக் கூற்றினையே எமது தெய்வவாக்காகக் கொள்வதில் பெருமைப்படுகின்றோம்.

ஆனால் இப்படிக் கூறுவதின் நோக்கம் தமிழுக்கு உயிர் கொடுக்க வந்தோம் என்று சாதிக்கும் மமதை அல்ல. நாம் ஆற்றும் பணி மிகமிகச் சொற்பமானது என்பதைப் பிரக்ஞை பூர்வமாகவே தீர்த்தக்கரை உணர்ந்துள்ளது.

குழந்தை பிறந்தவுடனேயே எழுந்து நின்று "எனக்கு யாருடைய உதவியும் தேவைப்படாது. என்னை நானே கவனித்துக்கொள்ள

எனக்குத்தெரியும்" என்று கூறி முகம் கழுவிச்சென்றால் யாருக்கும் சம்மதம்தான். இல்லை என்றாலும் யார்தான் கோபிக்கப் போவது? குழந்தைகளாயிற்றே.

தீர்த்தக்கரையும் இந்தப்பருவத்தில் நின்றுதான் உங்கள் அரவணைப்புக்காகக் கரங்களை நீட்டுகின்றது. ஆனாலும் இந்தக் குழந்தையின் யாத்திரையில் முகம்கொண்டு அரவணைக்க முயலும் மழலைகளும் தான் எத்தனை. சமூகத்தில், பல்வேறுபட்ட துறை களில் வாசகர்களாக விமர்சகர்களாக படைப்பாளிகளாகச் சங்கோஜத்தோடும் சிலசமயங்களில் துணிவோடும் நிற்கிற இந்தப் புதிய கர்த்தாக்களுக்குத் தீர்த்தக்கரையின் தாய்மை ஆதர்சமாக விளையும்.

இவ்விதம் அதன் மூன்றாவது இதழ் தலையங்கம் பேசியது. தீர்த்தக்கரை சமூகப்பிரச்சினைகளிலும் அக்கறை காட்டியது. ஆப்பிரிக்க மக்களின் வாழ்க்கையையும் பிரச்சினைகளையும் பிரதிபலிக்கும் படைப்பாளிகளின் எழுத்துக்களைத் தமிழாக்கி அறிமுகம் செய்வதில் ஆர்வம் கொண்டிருந்தது. கேள்வி பதில் பகுதியும் உண்டு.

குருஷேத்திரம் என்ற பகுதி ஒவ்வொரு இதழிலும் வந்தது. இலக்கிய விமர்சனங்கள், எழுத்தாளர் பிரச்சினைகள் முதலியன இதில் இடம் பெற்றன. பல பேர் தங்கள் அபிப்பிராயங்களை வெளிப்படையாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.

தீர்த்தக்கரை ஆசிரியர் சாந்திகுமார் மலையகம் பற்றி ஆய்வு ரீதியான கட்டுரைகள் எழுதியுள்ளார். தீர்த்தக்கரை பாராட்டப்பட வேண்டிய நல்லமுயற்சி. ஐந்து இதழ்களோடு அது நின்று போனது ஒரு இழப்புதான்.



# எனது இலங்கை சுற்றுலா

திடீரென்று வந்த வாய்ப்பு அது. இலங்கைக்குப் போவேன் என்று ஜூன் மாதம் வரை நான் நினைத்ததே இல்லை.

ஜூன் முதல் வாரம் இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்க அமைப்புச் செயலாளர் என். சோமகாந்தன் எழுத்தாளர் நண்பர் செ. யோகநாதனுடன் வந்து, ஜூலை மாதம் நீங்கள் இலங்கை வருகிறீர்கள். முற்போக்கு எழுத்தாளர் சங்க 40ஆவது ஆண்டுவிழாவில் கலந்துகொள்கிறீர்கள். மூத்த எழுத்தாளர் வரதரைப் பாராட்டுகிறீர்கள். அதற்கான ஏற்பாடு களைச் செய்யத்தான் வந்திருக்கிறோம் என்றார்கள்.

இதற்குமுன் நான்கு தடவைகள் வெவ் வேறு காலங்களில் வெவ்வேறு சந்தர்ப்பங் களில் இலங்கை நண்பர்கள் என்னை அன்புடன் அழைத்தது உண்டு. வல்லிக்கண்ணனைத் தமிழ்நாடு தெரிந்துள்ளதைவிட இலங்கை அதிகம் அறிந்து வைத்திருக்கிறது. அங்குள்ள இலக்கியவாதிகள் வல்லிக்கண்ணனைப் பார்க்க வேண்டும் என்று மிகுந்த ஆவலோடு இருக்கி றார்கள். நீங்கள் அவசியம் வரவேண்டும் என்று அவர்கள் கூறுவது வழக்கம். நான் மறுத்து விடுவதும் வழக்கம்தான்.

இப்போதும் அது நிகழ்ந்தது. ஆனால், இம்முறை வல்லிக் கண்ணனை எப்படியும் இலங்கைக்கு வரவழைத்து விடுவது என்று சோமகாந்தன் உறுதியாக இருந்தார். என்னை அங்கு அனுப்பி விட்டுத்தான் இதர காரியங்களைக் கவனிப்பது என்று யோகநாதன் உறுதி பூண்டிருந்தார்.

பாஸ்போர்ட் எடுக்கவேண்டும். அது தொல்லை பிடித்த விவகாரம் என்று நான் தட்டிக்கழிக்க முயன்றேன். பாஸ்போர்ட் எடுக்க நீங்கள் சிரமப்பட வேண்டியதில்லை. அந்தப் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்கிறேன் என்று நண்பர் யோகநாதன் வாக்களித்தார்.

அது வெகுசிரமமான காரியமாகத்தான் இருந்தது. யோகநாதன் தனது சகல வேலைகளையும் ஒதுக்கிவிட்டு எனக்கு பாஸ்போர்ட் வாங்குவதற்காக, தனது காலம், உழைப்பு, பணம் அனைத்தையும் ஈடுபடுத்திப் பல நாட்கள் கடுமையாகப் பாடு பட்டார். அப்படி முயன்றும்கூட பாஸ்போர்ட் தாமதமாகத்தான் வாங்க முடிந்தது. அதனால் துவக்கவிழாவுக்கு நானும் பென்னீலனும் போக இயலவில்லை.

தாமரை ஆசிரியர் மகேந்திரன் மட்டும் 1996 ஜூலை 5ல் பயணம் செய்து இலக்கியப் பேரரங்கின் துவக்க விழாவுக்குப் போய்ச் சேர்ந்தார். பொன்னீலனும் நானும் இரண்டாம் நாள் நிகழ்ச்சிகளுக்குத்தான் போகமுடிந்தது. சென்னையிலிருந்து கொழும்புவுக்கு விமானப்பயணம் ஒருமணி நேரம்தான். இனிமை யாக இருந்தது.

மு. எ. சங்கத்தின் இலக்கியப்பேரரங்கு பம்பலப்பிட்டி சரஸ்வதி மண்டபத்தில் நடந்தது. 5ம் தேதி துவக்க விழா. புதுமை இலக்கிய மலர் வெளியீடு 6 - 7 தேதிகளில் சிறுகதை, நாவல், கவிதை பற்றிய கருத்தரங்குகள். தினம் காலை 9 மணி முதல் மாலை 6.30 வரை, ஆய்வுக்கட்டுரைகள் படித்தல், கருத்துரை வழங்கல், சிறப்புச் சொற்பொழிவு, கேள்வி - பதில் என்று தொடர்ந்து நிகழ்ந்தன. பேராசிரியர் கா. சிவத்தம்பி கலாநிதி களான சித்தரலேகாமௌனகுரு, எம்.ஏ நுஃமான், மற்றும் பத்மா சோமகாந்தன், சோமகாந்தன், கவிஞர் வ.ஐ.ச. ஜெயபாலன், மேமன்கவி. வில்வரத்தினம் முதலியவர்களும் மற்றும் பெயர் பெற்ற எழுத்தாளர்களும் இலக்கியவாதிகளும் பங்குபெற்றனர். பெரிய அரங்கு. அரங்கு நிறைந்த ரசிகர்கூட்டம். இலங்கைத் தமிழரின் இலக்கிய ஈடுபாட்டை இந்நிகழ்ச்சிகள் உணர்த்தின.

மூன்றாம்நாள் மாலை நிகழ்வில், இலங்கையின் மூத்த எழுத்தாளர் வரதர் பாராட்டப்பட்டார். 1944 முதல் சிறுகதை,

கவிதைகள் எழுதிய வரதரை அந்நாளிலிருந்தே நான் அறிவேன். எழுத்துமூலம் தான். நான் பணிபுரிந்த கிராமஊழியன் இலக்கிய இதழில் அவருடைய எழுத்துக்கள் பிரசுரம் பெற்றன. இலங்கையில் 1940களில் இலக்கிய மறுமலர்ச்சி தோன்றவும் இயக்கமாக வளரவும் முன்னின்று பாடுபட்டவர்களில் வரதரும் ஒருவர். அவர் புத்தக வெளியீட்டாளரும்கூட. அச்சக உரிமையாளர். நூறு புத்தகங்களுக்கு அதிகமான நல்ல நூல்களை அவர் பிரசுரித்துள்ளார். கல்வி வளர்ச்சிக்கு நற்பணி புரிந்தவர். சமூக சீர்திருந்த நோக்குடன் செயல்பட்ட மனிதநேயர். அவரை நான் பாராட்டி வாழ்த்தினேன்.

முற்போக்கு எழுத்தாளர் சங்கப் பொதுச்செயலாளர் பிரேம்ஜி, கே.எஸ். சிவகுமாரன், மல்லிகை ஆசிரியர் டொமினிக் ஜீவா ஆகியோரும் வாழ்த்துரை வழங்கினர். வரதர் கதைகள் மலரும் நினைவுகள் எனும் இரண்டு நூல்கள் விழாவில் வெளியிடப்பட்டன.

இறுதியில் இலக்கியத்தின் எதிர்காலம் பற்றி பொன்னீலன், சாரல்நாடன், மகேந்திரன் சிறப்புரை நிகழ்த்தினார்கள்.

கொழும்புவில் நாளேடுகளான தினகரன், வீரகேசரி ஆகிய இரண்டு பத்திரிகைகளின் அலுவலகங்களுக்கும் பிரேம்ஜி எங்களை அழைத்துச் சென்றார். ஆசிரியர்கள் அறிமுகம். ஆசிரியர் குழுவினர் மற்றும் உதவியாளர்களோடு கலந்துரையாடல் நிகழ்ந்தன. எங்கள் இலங்கை வருகை குறித்தும், அங்கு சேர்ந்தபிறகு எங்கள் நிகழ்ச்சிகள் சொற்பொழிவுகள் பற்றியும் அனைத்து தினசரிகளும் விரிவாக முக்கியமான இடத்தில் செய்திகள் விவரங்கள் பிரசுரித்தன. இலங்கை தினசரிகள் எழுத்தாளர்களை வெகுவாக மதித்து கவுரவிக்கின்றன. வானொலியும் தொலைக்காட்சியும் எங்களுக்கு முக்கியத்துவம் அளித்து எங்கள் நிகழ்வுகளை எடுப்பாக அறிவித்தன. வானொலியிலும் தொலைக்காட்சியிலும் எங்கள் பேட்டிகளும் கருத்துரைகளும் ஒலி - ஒளி பரப்பு செய்யப்பட்டன.

இப்படித் தினம் பல்வேறு பணிகள் நிமித்தம் காரில் போய் வருகையில் கொழும்பு நகரின் பல பகுதிகளையும் பார்த்து அதன் வளத்தையும் வனப்பையும் அறியமுடிந்தது. அங்கு மக்கள்தொகை அதிகமில்லை. அதனால் ரோடுகளில் நெரிசலும் பரபரப்பும் இல்லை.

அமைச்சின் கலை கலாசார சமய அலுவல் திணைக்களம் எங்களுக்காக வெவ்வேறு இடங்களில், வெவ்வேறு தினங்களில் சிறப்பு நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்தது. சிறுகதை, நாவல், சிற்றிதழ்கள், இலக்கியப்போக்குகள் என்று பல விஷயங்கள் பற்றியும் நாங்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினோம். ஒவ்வொரு நிகழ்விலும் கேள்விகள் கேட்கப்பட்டன.

இலங்கையில் இளைஞர்களிடையே நல்ல இலக்கிய உணர்வும் இலக்கியஅறிவும், விஷயங்கள் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆர்வமும் அதிகம் இருப்பதை இவை புலப்படுத்தின.

கொழும்புவிலிருந்து சில நூறு மைல்கள் தள்ளி இருக்கிற கண்டிக்கு எங்களை அழைத்துச்சென்றார்கள். அங்கு சத்தியோதயா என்றொரு அமைப்பு. அது குன்றின் குரல் என்ற இதழையும் வெளியிடுகிறது. வேறு சமூக இலக்கியப் பணிகளிலும் ஆர்வம் காட்டுகிறது. அங்கு இரண்டுநாள் இலக்கியப் பயிலரங்கம் நடந்தது. அங்கும் காலை, மாலை அமர்வுகளில் இலக்கியப்பிரச்சனைகள் குறித்து நாங்கள் விளக்கஉரைகள் வழங்கினோம். சிறுகதை, நாவல், கவிதை பற்றிப் பயிலரங்குகளில் கலந்து கொண்டவர்கள் நிறையவே அறிய வாய்ப்பு கிட்டியது.

கண்டி, மலையகப்பகுதியைச் சேர்ந்த அழகான நகரம். நாங்கள் தங்கியிருந்த இடத்திலிருந்து நகரின் வனப்பையும் பசுமை யையும் குளுமையையும் நன்கு காணமுடிந்தது. இரவு வேளையில் வகைவகையான விளக்குகள். விண்மண்டலமென ஒளிர்ந்த மலைப் பகுதியின் மோகனத்தோற்றம் அற்புதமான காட்சி விருந்து.

கண்டியிலிருந்து சில நூறு மைல்கள் தள்ளி உள்ள மாத்தளை மகளிர் பள்ளியில் ஒரு சிறப்பு நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்பட்டி ருந்தது. மண்டபம் நிறைந்து காணப்பட்ட வெண்சீருடை அணிந்த மாணவியர் வெள்ளை ரோஜாக்கள் போல் விளங்கினர். அவர்கள் முன் சிற்றிதழ்கள் பற்றி நான் பேசினேன். பொன்னீலன், நாவல்கள் குறித்து ரசமான உரை நிகழ்த்தினார். மாணவியர் கூடி இலக்கிய ஆர்வத்துடன் நல்ல கேள்விகள் கேட்டார்கள். உரிய பதில்களை மகிழ்வோடு வழங்கினேன்.

மலையகப்பகுதியைச் சேர்ந்த ஹட்டன் கண்டியிலிருந்து பல நூறு மைல்களுக்கு அப்பால் இருக்கிறது. அதிகாலையில் எழுந்து கண்டியிலிருந்து காரில் அங்கு போனோம். அழகான சூழ்நிலை. தேயிலைத் தோட்டங்கள் மிகுந்த பகுதி மலைக்குப் பின் மலையென அடுக்கடுக்கான உயர்ந்த பிரதேசம். அங்கிருந்து நந்தலாலா இலக்கிய வட்டம் ஹட்டனில் சிறப்புக் கூட்டத்துக்கு எங்களை அழைத்திருந்தது. அதில் இன்றைய இலக்கிய இசங்களும் முற்போக்கு இலக்கியமும் பற்றி நான் விரிவாகப் பேசினேன். தமிழ்நாவல்கள் குறித்து பொன்னீலன் சுவையாக சொற்பொழி வாற்றினார். சந்தேகங்களைப் போக்கிக் கொள்ளும் வகையில் பலர் பயனுள்ள கேள்விகள் கேட்டார்கள். அவற்றின் மூலம் அவ்விளைஞர் களின் இலக்கிய ஈடுபாடும் படிப்பறிவும் தெரியவந்தன.

ஹட்டன் நிகழ்ச்சி முடிந்த உடனேயே காரில் பயணம் செய்து கண்டி வந்தோம். அங்கு மாலையில் ஒரு விசேஷவிழா.

இலங்கையில் மலையகம் தனிப்பட்ட பகுதி. அங்கு தோட்டத்தொழிலாளர்களாக வாழும் தமிழர்கள் அதிகம். அவர்கள் வாழ்க்கை, வறுமையும் சோகமும் நிறைந்தது. அரசின் கொள்கை களால் அவர்களில் பெரும்பாலோர் பெரும் அவதிக்கு உள்ளாக நேர்ந்தது. இவைபற்றிப் பல நாவல்கள், சிறுகதைகள், கவிதை களை மலையக எழுத்தாளர்கள் எழுதியிருக்கிறார்கள். இப்பவும் எழுதுகிறார்கள்.

மலையகக் கலை இலக்கியங்கள் மக்கள் பிரச்சனைகள் முதலியவற்றை வெளித் தெரியச் செய்யும் முயற்சியில் அந்தனி ஜீவா தீவிரமாக உழைத்து வருகிறார். இவர் கொழுந்து என்ற இதழையும் நடத்துகிறார். புத்தகங்கள் வெளியிடுகிறார். அவருடைய உழைப்பினாலும் உற்சாகத்தாலும் மலையகக் கலை இலக்கியப் பேரவை பதினைந்து ஆண்டுகளாகச் செயலாற்றி வருகிறது.

அதன் 15ஆவது ஆண்டுவிழா கண்டியில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. அவ்விழாவில் கலந்துகொண்டு நானும் பொன்னீலனும் உரைநிகழ்த்தினோம். கரகாட்டம் போன்ற கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. மலையக, கல்வி கலை இலக்கியத் துறைகளில் சிறப்பாகப் பணிபுரிந்த 15 பேருக்கு விருது வழங்கும் வைபவமும் நடந்தது. மலையக நாவலாசிரியர் ஞானசேகரனின் 'கவ்வாத்து' என்ற நாவலும் வெளியிடப்பட்டது.

அன்று இரவே கொழும்பு வந்து சேர்ந்தோம். ஒருநாள் திருகோணமலையில் பிரதேசத் தமிழ் இலக்கிய விழா நடந்தது. கொழும்புவிலிருந்து திருகோணமலைக்கு 600 மைல் தூரம் என்று சொல்லப்பட்டது. அவ்விழாவிலும் நாங்கள் பங்கு பற்றினோம்.

இவ்விழாவில் அபிநயப்பாடல், வாள் நடனம், கும்மி வில்லுப்பாட்டு முதலிய கலை நிகழ்ச்சிகள் எடுப்பாக விளங்கின. இலங்கையின் மூத்த எழுத்தாளர்களில் ஒருவரான வ.அ. இராச ரத்தினம் பாராட்டி கவுரவிக்கப்பட்டார். நாவல், சிறுகதை, கவிதை, நாடகம் பற்றி ஆய்வுக் கட்டுரைகள் படிக்கப்பட்டன.

மறுநாள் ஒவ்வொரு பள்ளிக்கு ஒருவராக வெவ்வேறு பள்ளிகளில் நாங்கள் மூவரும் மாணவமாணவியருக்கு உரை நிகழ்த்தினோம். பின்னர் புறப்பட்டு, கொழும்பு சேர்ந்தோம். அன்று மாலையில் ஒரு அமைச்சரைச் சந்தித்துப் பேசினோம். இதற்கு முன்னர் இரண்டு அமைச்சர்களைச் சந்தித்து உரையாடும் வாய்ப்பு எங்களுக்குக் கிட்டியிருந்தது.

இவ்விதம் ரொம்ப பிசியாகப் பதினோரு நாட்கள் கழிந்தன. இலங்கையில் ஓய்வே இல்லாதபடி நிகழ்ச்சிகள் நெருக்கடியாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. பன்னிரெண்டாம் நாள் புறப்பட்டு

விமானம் மூலம் நாங்கள் மூவரும் சென்னை வந்து சேர்ந்தோம். இலங்கைத்தமிழர்களின் வாழ்க்கை, துயரங்கள் நிறைந்தது. யாழ்ப்பாணத்தமிழ் மக்கள் யுத்தத்தினால் பாதிக்கப்பட்டு வீடிழந்து காடுகளிலும் வீதிஓரங்களிலும் வசிக்க நேரிட்டுள்ளது. அவர்கள் இயல்பான வாழ்வை இழந்து பல வருடங்களாக இன்னல்கள் அனுபவிக்கிறார்கள். கொழும்பு, திருகோணமலை, போன்ற பகுதி களிலும் இராணுவக் கண்காணிப்பும் கட்டுப்பாடும் மும்முர மாகவே செயல்படுகின்றன. இருந்தபோதிலும், தமிழரின் இலக்கிய தாகமும் கலை உணர்வும் ஒடுங்கிவிடாது. உயிர்ப்புடன் செயல் மலர்ச்சி பெற்றுத் திகழ்வதை அங்கு நடை பெற்ற விழாக்கள் எடுத்துக்காட்டின.

நான் இலங்கையின் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இடங்களையும் சிகிரியா, அனுராதபுரம், பொலநறுவை, மிகிந்தலை, கதிர்காமம் போன்ற விசேஷச் சிறப்பு மிகுந்த இடங்களை, யாழ்ப்பாணத்தையும் பார்க்கவில்லைதான். எனினும் இலங்கை நண்பர்களின் அன்பை, நட்பு உணர்வை, மதித்துக் கவுரவிக்கும் உயர்பண்பை, இலங்கைத் தமிழரின் இலக்கிய ஈடுபாட்டை, ரசனையை, நன்கு கண்டேன். வல்லிக்கண்ணன் என்கிற எழுத்தாளன் பேரில் இலங்கை இலக்கியவாதிகள் கொண்டுள்ள மதிப்பையும் அபிமானத்தையும் நல்லெண்ணத்தையும் கண்டு ணர்ந்தேன். இது என் உள்ளத்தில் ஒரு நிறைவையும் புதிய தெம்பையும் சேர்த்துள்ளது.



# வியக்கும் மனம் வேண்டும்

**நா**கரிகப் பெருநகரத்தின் வீதிகள் எல்லாம் வெளிச்சமயம். எண்ணற்ற மின் விளக்குகள் இருளைத் துரத்திவிட்டுப் பேரொளி பரப்பிக் கொண்டிருந்தன. கடைகள், கட்டி டங்கள் எங்கெங்கும் ஒளிமழை பொழியும் விதவிதமான விளக்குகள். இரவு என்று தெரியாதபடி எங்கும் வெளிச்சமயம். வீடுகள் தோறும் ஒளி சிரிக்கும் விளக்குகள். நகரத்தின் பல பகுதிகளும் தனி அழகுடன் ஒளிர்ந்தன.

திடீரென்று மின்சக்தி செயலற்றுப் போச்சு.

இருட்டு கவிழ்ந்தது எங்கும். வீதிகளில் சந்து பொந்துகளில் வீடுகளில் எங்கெங்கும் இருட்டு. இருட்டைப் போக்குவதற்தான தற்காலிக ஏற்பாடுகளில் முனைந்தனர் மனிதர்கள். இப்போது இருள் சிரிக்கத் தொடங்கியது.

ஒரு வீட்டில், பொங்கிப் பெருகி வழிந்த பெரும் வெளிச்சத்தில் தனிஅறையில் அமைதி யாகப் படித்துக் கொண்டிருந்த ஒருவன் வெளிப் புறம் வந்து நின்றான். ஆகா என வியந்தது அவன் மனம். கண்கள், பார்வையைச் சுற்றிலும் மிதக்கவிட்டன. நிலாஒளி அற்புதமாகப் படிந்து கிடப்பதை வியப்புடன் விழுங்கினான் அவன்.

தனி அழகுடன் குளுகுளுத்தது சூழ்நிலை. கட்டிடங்களும் மரங்களும் பிறவும் ஒரு மோகன அழகுடன் காட்சி தந்து கொண்டிருந்தன. இரவைப் பகலாக்க முயலும் செயற்கை ஒளி இல்லை. இரவை இரவாகவே காட்சிப்படுத்தும் ஒளி தவழ்ந்து நின்றது நெடுகிலும். வானம்கூட அற்புதமாகக் காட்சியளித்தது. செயற்கை ஒளிப்பெருக்கு இயற்கையின் எழிலை, இனிமையை மறைத்திருந்தது அவன் மனசில் பட்டது.

ஒளிப்பெருக்கு ஓர் அழகு என்றால், இருளின் நிறைவு தனி வசீகரம். இரவு இருட்டுமயமாகவே இருந்துவிடுவது இல்லை. இருட்டு குறைவான வெளிச்சம் என்கிறார் மகாகவி. இருள் ஒளிக்குப் பகையா? அல்லது ஒளியை எடுத்துக்காட்ட வாய்த்த துணையா? இரவு மோகனமானது. இரவிலும் ஒளி செய்கிற அற்புதங்கள் நிறைந்திருக்கின்றன. வானத்தின் வெள்ளிகள். அமுத ஒளி பாய்ச்சும் குளுமையான நிலவு. இப்படிப் பல.

வெளிச்சமே வெளிச்சத்துக்குப் பகையாகிவிடுகிறது. நிலாவின் அமுதஒளி அழகை உணரவிடாதபடி விளக்குகள் தடையாக ஒளிர்கின்றன. நாகரிகப் பெரும் வெளிச்சங்களுக்குப் பழகிப் போன மனிதர்கள் நிலாவை, விண்மீன்களை, வானத்தின் ரகசியங்களைக் காணத் தவறிவிடுகிறார்கள். காண்பதற்கான மனமும் நாட்டமும் அவர்களுக்கு இருப்பதில்லை. அதனால் எத்தனையோ இனிமை களை இழந்துவிட்டார்கள். செயற்கை ஒளி வெள்ளம் மேவாத கிராமப்புறங்களில்கூட மக்கள் முன்காலங்களைப் போல் நிலாவின் இனிமையை ரசித்து அனுபவிக்கிறார்கள் என்று சொல்வதற் கில்லை. வாழ்க்கைப் பரபரப்பும் பிரச்சனைகளும் கவனங்களும் மிகுந்ததாக ஆகிவிட்டது பெரும்பாலோருக்கு.

நிலா முன்பு சிறுவர்களுக்கும் பெரியவர்களுக்கும் களிப்பு அளிக்கும் களிப்பு ஆக இருந்தது. நிலாவில் அமர்ந்து கதைகள் பேசி உண்டு மகிழ்வதற்கு மக்களுக்கு முன்பு நேரம் இருந்தது. மனமும் இருந்தது. இளம்பெண்களும் சிறார்களும் வகைவகை யான விளையாட்டுகள் ஆடி மகிழ்வதற்கு நிலா துணைபுரிந்தது. உற்சாகம் அளித்தது. இக்காலத்தில் அத்தகைய விளையாட்டுகள் மறக்கப்பட்டுவிட்டன. சின்னஞ் சிறுசுகளுக்கு இனிய கதைகள் சொல்லி சந்தோஷப்படுத்துவதற்கு பெரியவர்களுக்கு நேரமும் இல்லை. பொறுமையும் இல்லை. பலருக்குச் சுவையாகக் கதைகள் சொல்லக்கூடிய ஆற்றலும் இல்லை என்ற நிலைமை.

நகரத்தில் வசிப்பவர்கள் வானத்தைப்பார்க்க மறந்து போனார்கள். எண்ணற்ற சிறுவர் சிறுமியருக்கு நட்சத்திரங்கள், சந்திரன் முதலிய அற்புதங்களைக் கண்ணாரக் காணக்கூடிய வசதிகள் இல்லாமலே போயின வாழ்க்கையில். சூரிய உதயத்தையும்

அஸ்தமனத்தையும் பார்க்கக்கூடிய வாய்ப்புகளோ, பார்க்க வேண்டும் எனும் ஆசையோ நகரவாசிகளுக்கு இல்லை.

செம்பட்டுச் சல்லடம் சொகுசாக உடுத்தி எழிலாகக் கிழக்கில் சிரித்து வரும் உஷை பற்றிய கவிஞனின் வர்ணனை, இன்றைய நாகரிக மனிதர்களுக்கு பேத்தல் (பிதற்றல்) ஆகவே தோன்றும். அந்தி வானில் உமை கவிதை செய்து கொண்டிருக் கிறாள் என்ற கவிக்கூற்றும் புரியாத விஷயமாகவே படும் அவர் களுக்கு. வைகறைவேளையின் ஒளி மலர்ச்சிகளையும் அந்தி வேளையின் வர்ணமய வானத்து விந்தைகளையும் கண்டு வியக்க எத்தனை பேர் தயாராக இருக்கிறார்கள்?

தொலைக்காட்சிப் பெட்டிமுன் அமர்ந்து அநாகரிகக் கூத்துகளையும் அபத்த ஆட்டங்களையும் பார்ப்பதிலேயே பெரிய வர்களும் சிறியவர்களும் கருத்தாக இருக்கிறார்கள். காலம் மாறி விட்டது. மனிதர்களின் விருப்பங்களும் போக்குகளும் மாறிப் போயின. இயற்கையை, அதன் வனப்புகளையும் வசீகரங்களையும் காணவேண்டும் என்கிற எண்ணம் மனிதருக்கு வேண்டும். செயற்கைச் சாதனங்கள் பயனுள்ளவை. வலியன. சந்தேகமில்லை. அவற்றைப் போலவே — பல சமயங்களில், அவற்றை விடவும் — வலுவானவை. வனப்பு மிக்கவை. இனிமையானவை இயற்கை சக்திகள். அவற்றைக் கண்டு வியந்து, ரசித்துப் பழகி, பயன்படுத்தி மகிழக்கூடிய மனசை நாம் மீண்டும் பெறவேண்டும்.



# உயிர்ப்பின் மகா சக்தி

கடல் - பரந்து விரிந்து கிடக்கும் பயனற்ற நீர்க்காடு; இயற்கையின் ஊதாரித்தனத்தின் மற்றுமோர் எடுத்துக்காட்டு! இப்படி என் நண்பர் ஒருவர் சொன்னார்.

பயனற்றது என்று ஒரே அடியாகச் சொல்லிவிடுவது சரியாகாதுதான். கடலினால் எவ்வளவோ பயன்கள் உலகத்துக்கு, மனித இனத்துக்கு, இதர ஜீவராசிகளுக்கும் கிடைத்துக் கொண்டுதான் இருக்கின்றன.

கடல், வலிமையின் சின்னம். மர்மங்களின் உறைவிடம். அமைதியின் ஆலயமான அதுவே குமுறலின் கொந்தளிப்பின் பயங்கரங்களின் நிலைக்களனாகவும் இருக்கிறது.

ஒவ்வொரு அலையும் ஒரு அற்புதம். அதிசய உருவகம். வியப்பின் சிலிர்ப்பு. அழகின் குமிழ்ப்பு. சீற்றத்தின் சிரிப்பு. அழிவின் சிதறல். சிதறல்களின் நுரைக் கோலம்.

கடல் உயிர்ப்பின் மகாசக்தி. உயிர்களின் ஊக்குவிப்பு.

பகல் நேரம். வெயில் நிறுத்தி வைத்த மாதிரிக் காய்கிறது. மணல்பரப்பு வெளேரென விரிந்து கிடக்கிறது. கரையோர மரங்கள். செடி கொடிகளின் இலைகள். பச்சையின் பல

ரகங்கள் காட்டி அமைதியாய் உறங்குகின்றன. அவற்றின் மலர் களின் வெண்மையும் சிவப்பும் இதர நிறங்களும் வெயிலில் பளீரிடுகின்றன. கடல் நீலமாய்த் தென்படுகிறது. வானம் வேறுவித நீலமாய்த் தொங்குகிறது. தூரத்தில் ஒரு கப்பல், நீரில் செல்லும் வேகம் புலனாகத் தொலைவில் அமைதியாக ஒரேஇடத்தில் நிற்பது போன்ற தோற்றம் காட்டுகிறது. மனோகரமான அமைதியின் வர்ணச்சித்திரமாகக் காட்சி தருகிறது. அவ்வேளைய அனைத்தின் முழுத் தோற்றமும்.

கடல் ஓரம். நல்ல வெயில் நேரம். எல்லாம் பளீரெனத் தென்படும் சூழ்நிலை. மரங்களின் நிழல் பகுதி இனிய சுகநிலையம். அவ்வேளையிலும் மேலே எரிக்கும் வெயிலையும் பாதங்களைச் சுடும் மணலையும் பொருட்படுத்தாது உழைப்பே கண்ணாகி நிற்கிறார்கள் கருநிற மீனவர்கள். மரங்களின் கீழே அங்கங்கே உணர்ச்சித் துடிப்பு மிகுந்த யுவதிகளும் யுவன்களும் காதல் நாடகத்தின் சுவாரசியமான கட்டங்களை லயிப்போடு நடித்து இன்புற்ற வண்ணம் இருக்கிறார்கள். எதையும் பொருட்படுத்தாத சிலர் சுகமாகத் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். மனிதர்கள் பலவிதம். அவரவர் காரியம் அவரவருக்கு முக்கியம்.

கடல் பரப்பிலே ஒரு விம்மல். அது பெரிதாகி வீங்குகிறது. கனக்கிறது. தடித்துப் பெருக்கிறது. வளர்கிறது. உயர்கிறது. உருண்டு வருகிறது. விம்மி எழுகிறது. உட்கவிகிறது. தலை தணிகிறது. அப்போது கண்ணாடி மாதிரி மிளிர்கிறது. கவிந்த உட்பரப்பின் தலைமீது வெண்மை அரும்புகிறது. அப்பகுதி கனமேறித் தடாலென விழுகிறது. அலைச்சிதறல் குதிரைபோல் ஓடி வேகத்தோடு பாய்ந்து வந்து அலைநுரைப் பரப்பாய்ப் பாவாடை விரிவாய்ச் சரசரத்து நிலம் தடவி மாய்கிறது. பாவாடை விளிம்பின் பூ வேலைப்பாடுகள் போல் நீர்ப்பரப்பு சுழன்று அழிந்து மறைந்தே போகிறது. அலையின் தோற்றமும் வளர்ச்சியும் வீழ்ச்சியும் மறைவும் கண்டு களிப்பதற்கு இனிமையான அற்புதக் காட்சி. அலை மேல் அலையாய்த் தொடர்ந்து இயங்கிக் கொண்டே இருக்கிறது.

அலையின் சிதறல் அரும்புகளின் குவியலா? மலர்களின் பரவலா? துருவித் துருவிச் சிதறப்படும் தேங்காய்த் தூவல்களா? சிதறி எரியப்பட்ட கண்ணாடியின் உடைந்த நுண்சில்லுகளா? சோப்பு நுரைக்குமிழ்களா? பூ நூல்களின் பின்னல் வேலைப்பாடா?

கடல் ஏன் சதா அலைந்துகொண்டே இருக்கிறது? அமைதி காண முடியாமலா? கவலையின்றித் துருதுருக்கும் சிறுபிள்ளைத்தன விளையாட்டாகவா?

கடலைப் பார்த்துக்கொண்டே இருப்பதில் மனிதர்கள்

அலுப்படைவதே இல்லை. பெரிய பெண்கள்கூட அலைகளோடு விளையாடுவதில் சிறுமிகள் ஆகிவிடுகிறார்கள். கடலின் முன்னிலையில் காதலர்கள் தனிமகிழ்ச்சி அடைகிறார்கள். காமுகர்கள் புதுஇன்பம் பெறுகிறார்கள். கடல் வலிய உயிரூக்கி. உணர்வூக்கி.

கடல் பயங்கரமானது. பயங்கரப்பிராணிகள் வசிக்கும் இருள் ஆழப்பெருவெளி. ஆளை அமுக்கிக் கொல்லும் நீர்ச்செறிவு. கவனக் குறைவோடு கரையோரம் இறங்குவோரைக் கீழே தள்ளி உருட்டிப் புரட்டி உள்ளிழுத்துச் சுழற்றிப் பந்தாடும் அலைகள் மேயும் அகல் அரங்கம். மனிதன் காலைக் கவ்வி உள்ளே இழுத்துச் செல்லக் கூடிய சுறாமீன்கள் எப்போதாவது கரை ஓரம் வருகின்றன. மனிதரைக் கொல்லும் பெரிய மீன்களைக் கொல்கிற வாய்ப்பு மனிதருக்குச் சிலசமயம் கிடைத்து விடுகிறது.

அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் மீனை வேடிக்கை பார்க்க மனிதர்கள் கூட்டம்கூட்டமாய், கடலோரம் வருகிறார்கள். சமயத்தைப் பயன்படுத்தி அதையும் காசு சேர்க்கும் வழி ஆக்கி விடுகிறார்கள் சிலர்.

கடல்மீது கப்பல் மிதப்பது ஒரு அதிசயம். விஞ்ஞான வெற்றி. அலைகள் சாடும் நீர்ப்பரப்பின்மேல் வெகுதூரம் வரை பாதுகாப்பு இல்லாத கட்டுமரத்தில் மூன்று பேர் நான்கு பேராகப் பயணம் செய்து மீன் பிடித்து மீண்டுவருவது மனிதரின் துணிவையும், பிழைப்புக்காக எவ்வித அபாயங்களையும் மேற்கொள்ளச் சித்தமாகிவிடுகிற இயல்பையும் காட்டுகிறது.

அபூர்வமாகச் சில சமயங்களில் ஒரு கப்பல் அல்லது மூன்று நான்கு கப்பல்கள்— ஏழெட்டுகூட — அசையாது கடல் மீது நிற்பது காட்சியாகிறது. இரவானதும் வரிசையாய், தோரணமாய், அழகு செய்யப்பட்ட மின்சார விளக்குகள் ஒளிபெற்றுச் சிரிக்கின்றன. வெகு அற்புதம். பார்வைக்கு விருந்து. இதுவும் மனித உழைப்பின், விஞ்ஞானத்தின் விந்தை மலர்ச்சியே ஆகும்.

கடலை ஒட்டிய மணல்வெளி ஆள் யாருமற்ற வெம்பரப்பாய்க் கிடக்கிறது சில நேரம். உழைப்பவர் தென்படும் தொழில் நிலமாய்த் தெரிகிறது. அவ்வப்போது பொழுதுபோகாதவர் வேலை இல்லாதவர், வீணர்கள், சோம்பேறிகள் ஓய்வுநாடுவோர் காதல் ஜோடிகள் நகரும்; அமரும்; பேசிப் பொழுதுபோக்கும் களமாக மாறுகிறது. பல்வேறு விளையாட்டுகள் ஆடுவோர் கூடும் மைதானம் போலாகி விடுகிறது. அடிக்கடிப் பெரும் கும்பல் திரண்டிடும் அரங்கம் ஆகிறது.

கோடை நாட்களில் மாலை வேளைகளில் ஞாயிறு மற்றும் விடுமுறை தினங்களில், பொதுக்கூட்டங்கள் நிகழும் நாட்களில்,

ஒளி வெள்ளம் புரளும் இடமாய், மிக அதிகமான ஜனங்கள் கூடிக் கலைகிற பெருவெளியாய், கடல்புறம் காட்சி தருகிறது.

இரவு நேரம். பத்துமணிக்கு மேலிருக்கும். அதிகமான ஒளிவிளக்குகள் பிரகாசித்துக்கொண்டிருக்க, ஒலிபெருக்கும் குழாய் வாய்கள் ஊமையாய் நிற்க, பிரசங்க மேடை அரவமற்று ஆளற்றுக் கிடக்க விசித்திரமாய் என் பார்வையில் பட்டது.

ஏதோ ஒரு கட்சியின் கூட்டம் முடிந்து, கும்பல் கலைந்து போய் வெறிச்சென்று ஆகிவிட்ட தோற்றம் அது. அந்த வெறுமையும், வீணாகப் பிரகாசித்துக் கொண்டிருந்த எண்ணற்ற விளக்குகளின் பேரொளியும் கண்களை உறுத்தின. நாகரிக இடம் உயிரற்ற சூன்யமாக மாறிவிட்டால் இப்படிக் காட்சி தரலாம் என்று மனசில் உறுத்தல் ஏற்படுத்திய தோற்றம் அது.



# தொடர் கதைகள்

தொடர்கதைகள் வணிகநோக்குப் பத்திரிகைகளின் ஜீவநாடியாக விளங்குகின்றன. எல்லாக் காலத்திலுமே பத்திரிகைகள், தங்கள் வளர்ச்சிக்காக வாசகர்களின் தொடர்ந்த நீடித்த ஆதரவைப் பெறுவதற்காகத் தொடர் கதை பிரசுரிப்பில் கருத்தாகவே இருந்திருக் கின்றன. இருந்து வருகின்றன.

இந்த நூற்றாண்டின் முப்பதுகள் நாற்பது களில், பத்திரிகைகள் ஒரே ஒரு தொடர்கதை பிரசுரித்தால் போதும் என்ற கொள்கையைக் கொண்டிருந்தன. காலஓட்டத்தில் வாசகர் களை இழுத்துப் பிடித்துவைத்துக் கொள்வதற்கு இரண்டு கதைகள், மூன்று தொடர் அம்சங் களை வெளியிட வேண்டும் என்று உணர்ந்து செயல்பட்டன.

இப்போது இரண்டு மூன்று தொடர் கதைகள் மட்டுமில்லாது, ஸ்தலப்புராணத் தொடர் (திருத்தல யாத்திரை) பயணக்கதை, எவராவது ஒரு ஹீரோ (வீர நாயகர், கீர்த்தி நாயகர், திரைப்பட வெளிச்ச நாயகர் அல்லது நாயகி) வரலாற்றுத்தொடர் என்று அம்சங்கள் பல ரொப்பும்படி பத்திரிகைக்காரர்கள் அக்கறை எடுத்துக் கொள்கிறார்கள்.

ஒவ்வொன்றும் வெவ்வேறு காலத்தில் முடியவேண்டும். ஒன்று முடிகிற சமயத்தில் மற்றொன்று புதிதாக ஆரம்பிக்க வேண்டும். இப்படி அமைந்தால்தான் வாசகர்கள் தொடர்ந்து தம் பத்திரிக்கையில் இன்ட்டரஸ்ட் காட்டுவர் என்பது வணிக நோக்கில் பத்திரிகை நடத்துகிறவர்களின் நம்பிக்கையும் நடைமுறையுமாக இருந்துவருகிறது.

எந்த ஒரு பத்திரிகையை எடுத்துப் புரட்டினாலும் அதில் தொடர்கள் (கதைகள் + இதர அம்சங்கள், அளவுக்கு அதிகமாக இருப்பதாகவே படுகிறது. இதனால் எப்பவாவது காசு கொடுத்துப் பத்திரிகை வாங்குகிற உதிரி வாசகருக்கு, அந்த இதழுக்காக அவர் கொடுத்த காசு தெண்டம் என்ற உணர்வே ஏற்படுகிறது. ஏனெனில், தொடர்கள் அவருக்குப் பயன்படுவதில்லை. தலையும் இல்லாத வாலும் இல்லாத விஷயங்களில் எங்கோ ஒரு சிறுபகுதியை எப்பவோ படிப்பதனால் வாசகர் என்னத்தைப் புரிந்துகொள்ள இயலும்?

ஆனால், பத்திரிகை நடத்துகிறவர்கள் எப்பவாவது பணம் கொடுத்து ஏதோ ஒன்றிரண்டு இதழ்களை வாங்கிப் படிக்க ஆசைப் படுகிற உதிரி வாசகர்களைக் கவனத்தில் கொள்வதே இல்லை.

அப்படி வாங்கும் எண்ணமும் இயல்பும் உடையவர்களால் தங்களுக்குக் கணிசமான லாபம் இல்லை; எனவே சென்னை ரிக்ஷாக்காரர்கள் பாஷையில் அவர்கள் வெறும் சாவு கிராக்கிகள் தான் என்று பத்திரிகைக்காரர்களின் மனக்குறளி கூவிக்கொண்டிருக்கும் போலும்!

அப்படியே திடீர்னு நெனச்சிட்டு எப்பவாவது பத்திரிகை வாங்குகிற கேஷுவல் பய்யர்கூட அந்தப் பத்திரிகையில் ஒரு சுவைகண்டு அடுத்த இதழையும் அதுக்கு அடுத்ததையும் அப்படித் தொடர்ந்தும் அந்தப் பத்திரிகையை வாங்க ஆசைப்பட வேண்டும் என்ற நோக்கத்தோடு உரிய முறையில் சரக்குகள் தயாரித்துப் பக்கங்களை ரொப்புகிற மாஸ்டர்களான திறமை சாலிகள்தான் வணிகப் பத்திரிகைகளில் ஊக்கத்தோடும் உற்சாகத் தோடும் உழைத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்த நோக்கில் உதவக்கூடிய எழுத்து மன்னர்களையும் மன்னிகளையும் விடாது கவுரவித்து, தொடர்கதைகள் எழுதும்படி செய்து வருகிறார்கள்.

தொடர்கதைக்கு என்று சில விசேஷமான உத்திகள் உள. அவற்றைத் திறமையாகக் கையாண்டு வெற்றிபெறுகிற பேனா மன்னர்கள் நிரந்தரத் தொடர்கதைப் பிரம்மாக்களாக பத்திரிகை களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு மிக அதிகமாக வேலை வாங்கப் படுகிறார்கள். ஒரு பத்திரிகை மாறி இன்னொரு பத்திரிகை — ஒரேசமயத்தில் இரண்டு அல்லது அதுக்கும் அதிகமான பத்திரிகை களில் எழுதும் வாய்ப்பு அவர்களைத் தேடி வருகிறது.

காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளும் நோக்கமுடைய பேனா ஓட்டிகள், புகழ் உள்ள போதே பணம் பண்ணிவிட வேண்டியது மிக முக்கியம் என்ற எண்ணத்தோடு வேகம் வேகமாகத் தொடர் கதைகளை உற்பத்தி செய்து தள்ளுகிறார்கள்.

கதை சுவாரஸ்யம், விறுவிறுப்பு சம்பவத்துக்குமேல் சம்பவம், மர்மங்கள், கொலைகள், துப்பறிதல், காதல் என்ற பெயரில் காம விளையாட்டு விவரிப்புகள், பெண் அழகு வர்ணிப்புகள், அடுத்து என்ன நிகழுமோ என்று ஆவலைத் தூண்டும் விதத்தில் ஸஸ்பென்ஸ் வைத்து எழுதுவது — இவை போன்ற உத்திகள் அவசியம் தொடர்கதைகளில் கையாளப்பட வேண்டும்.

இப்படி எழுதுகிற எழுத்தாளர்களின் தயாரிப்புகளுக்கே மவுசு உண்டு. இவ்விதம் சுவாரஸ்யமாகவும் விறுவிறுப்பாகவும் கதைகள் அமைவதற்கும் மேலைநாட்டுத் தயாரிப்புகளைத் தாராள மாகத் தழுவலாம். புதுமைப்பித்தன் சொன்னது போல தழுவுகிற கைகள் வலிமை பொருந்தியதாக இருக்கவேண்டும். யார் யாரை எப்படி எப்போது தழுவுகிறார்கள் என்பது வாசகர்களுக்குத் தெரியாமல் இருக்கவேண்டும். அதுதான் முக்கியம்.

பத்திரிகைக்காரர்களுக்குத் தெரிந்திருக்கலாம். அதனால் நஷ்டமில்லை. அநேக சமயங்களில் தழுவப்பட வேண்டிய சரக்கு களைப் பத்திரிகையாளர்களே தேர்ந்தெடுத்து, தழுவல் எப்படி இருக்கவேண்டும் என்று அவர்களே எழுத்தாளர்களுக்கு ஆலோச னையும் வழங்குகிறார்கள். எல்லாம் வியாபார வெற்றிக்காகத்தான்.

தொடர்கதைகள் மூலம் வாசகர்களின் ஆர்வத்தைக் கிளறி விட்டு, பத்திரிகை படிப்பவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்த முடியும் என்று செய்து காட்டிய பெருமை தமிழ் நாட்டில் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்திக்கே உரியது.

1930களின் பிற்பகுதியில் கல்கி தொடர்கதை எழுத ஆரம்பித்தார். அவருடைய முதல் தொடர்கதையான கள்வனின் காதலியே அபார வெற்றியாக அமைந்துவிட்டது. அடுத்த சமூக நாவலான தியாகபூமி சினிமா ஸ்டில் படங்களின் அதிகப்படி யான கவர்ச்சியோடு ஜாம் ஜாம் என்று பவனி வந்தது. பின்னர் அவர் சரித்திர நாவல் என்கிற பம்மாத்துப் படைப்புகளை ஆரம்பித்து வெற்றி கண்டார். வாசகர் கூட்டம் சொக்கிக் கிடந்தது.

இன்று நான்தான் சரித்திரக்கதை சக்கிரவர்த்தி என்றும், நானே சரித்திர நாவல் கொம்பன் எனவும், நானே தான் கொம் பாதி கொம்பன் என்றும் யார் யாரோ கொக்கரித்த போதிலும், சரித்திர நாவல்கள் எழுதுவதில் கல்கி பக்கத்திலே யாரும் வர முடியாது என்று உரத்துச் சொல்கிற ரசிகர்கள் இப்பவும் இருக்கிறார்கள்.

கல்கி தனது சரித்திரத் தொடர்கதைகளில் அருமையான கேரக்டர்களை உருவாக்கி உலாவ விட்டிருக்கிறார். அப்படி மறக்க முடியாத கேரக்டர் ஒன்றைக்கூட, அவருக்குப் பின் வந்த சரித்திரக் கதை எழுத்தாளர் எவரும் இதுவரை படைக்கவில்லை என்பது ரசிகர்கள் சிலரது அபிப்பிராயம்.

என்றாலும், சரித்திரத் தொடர்கதைகளை விரும்பிப் படிக்கிற வாசகர்கள் அதிகமாகத்தான் இருக்கிறார்கள். சரித்திர நாவல் என்பது ஒரு பம்மாத்து வேலை என்றேன். சரித்திர காலக் கதா பாத்திரங்கள் சிலசில இடங்களில் சில வரலாற்று நிகழ்ச்சிகள் இந்நாவல்களில் காணப்படுகின்றன என்பது உண்மைதான். வரலாற்று ரீதியான உண்மைகளைப் பார்க்கிலும் அளவுக்கு அதிகமான அளப்புகளே இவற்றில் இடம் பெறுகின்றன. இவை வரலாற்று உடைதரித்த மர்ம மற்றும் துப்பறியும் நாவல்களாகவே உள்ளன.

தாமே உண்மையான வரலாற்று நவீனம் எழுதுகிறவர் என்று வாசகர்களுக்கு மயக்கம் ஏற்படுத்துவதற்காக, சில எழுத் தாளர்கள் தேசப்படம், களங்களின் பிளான், சரித்திர நூல்களின் மேற்கோள்கள், பெயர்ப்பட்டியல்கள் முதலியவற்றைச் சேர்த்து வைப்பதும் தொடர்களின் நியதியாக வளர்ந்து வருகிறது.

சரித்திரத்தொடர்கதையும் தமிழ்சினிமா போல தனக்கென சில ஃபார்முலாக்களைக் கொண்டிருக்கிறது. ரசிகப் பெருமக்கள் விரும்புகிறார்கள் என்று சொல்லி படாதிபதிகள் கதாநாயகியை மழையில் நனையவைத்தும் (அருவியில், குளத்தில் அல்லது ஏதாவது நீர்நிலையில், குழாயடியில் கூட) குளிக்க வைத்தும் நடிகையின் உடல் அழகுகளை செக்ஸியாகக் காட்டி மகிழ்கிறார்கள். படுக்கை யறைக் காட்சி கட்டாயத் தேவை. கதாநாயகனும் நாயகியும் கட்டிப்பிடிப்பதும் முத்தமிடுவதும் இன்றியமையாத விஷயங்கள்.

மிக அதிகமான வாசகர்களைக் கொண்டிருப்பதாகச் சொல்லப்படுகிற சரித்திரத் தொடர்கதை நாவலாசிரியர் சாண்டில் யனும் இத்தகைய மசாலாக்களை தனது நாவலில் அங்கங்கே தாராளமாக விரவிவைக்கிறார் குளிர்சுனையில், பூம்புனலில், வெள்ளிநீர் அருவியில் இளவரசி குளிப்பதும் மறைவிலிருந்து மன்னன்மகன் பார்ப்பதும் அவர் தொடர்கதைகளில் தவறாது வருகிறது. படுக்கைஅறையில் அவள் படுத்திருக்கும் கோலத்தை ரசமாக வர்ணிப்பதற்காகவே ஒரு தனி அத்தியாயம். பெண்ணின் முன்னழகையும் பின்னழகையும் சைடழகையும் வர்ணிப்பதற் கென்றே சாமர்த்தியமாக உருவாக்கப்படும் சந்தர்ப்பங்கள் பல. ஒரே நாவலில் இந்த ரகக் காட்சிகள் திரும்பத் திரும்ப வர்ணிக்கப் படுகின்றன.

மற்ற எழுத்தாளர்கள் மர்ம மற்றும் துப்பறியும் நாவல்களில் இப்படிப்பட்ட வேலைகளைச் செய்துவருகிறார்கள். தொடர் கதைகள் எழுதுகிற புகழ் எழுத்தாளர்களிடையே போட்டி அதிகரிக்கவும் ஒருவரை ஒருவர் மிஞ்சுவதற்காகவும் அவர்கள் புதுமை பண்ணவேண்டியது அவசியமாகிறது. இவர்களுடைய புதுமை, இனிமை, தீவிர முற்போக்கு எல்லாம் பெண் அங்கங்களை விவரிப்பதிலும், ஆண்பெண் செக்ஸ் ஈடுபாடுகளைச் சித்திரிப்ப திலும், காம வக்கிர விவகாரங்களை எடுத்துச் சொல்வதிலும் தான் மிஞ்சிக் காணப்படுகிறது.

தொடர்கதைகள் நல்ல நவீனங்களையும் அறிமுகப்படுத்தக் கூடும். ஆனந்தவிகடன் முன்னொரு காலத்தில் பிரேம்சந்த், தாகூர், நாவல்களை, தொடராகத் தரத்தான் செய்தது. கலைமகள் பிரேம்சந்த் மற்றும் தாராசங்கர்பானர்ஜி நாவல்களைத் தமிழ் வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தியது. பத்திரிகை என்பதும் முதல் போட்டு லாபம் சம்பாதிக்கக்கூடிய ஒரு தொழில்தான் என்ற நிலை ஏற்பட்டதும், பத்திரிகை நடத்துகிறவர்களின் நோக்கும் போக்கும் முற்றிலும் மாறிப்போயின.

ஒருகாலத்தில் தொடர்கதைகளைப் பெண்களே விரும்பிப் படிப்பதாகச் சொல்லப்பட்டது. அப்படி இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். பல்வேறு ருசி உடையவர்களும், பல்வேறு தரத்தினரும், வாழ்க்கையின் பலவித நிலைகளில் (அலுவல்களில்) உள்ளவர்களும் தொடர்கதைகளைப் படிக்கத்தான் செய்கிறார்கள்.

தொடர்கதைகளும் தமிழ் சினிமா மாதிரியேதான் என்று சொன்னேன். இரண்டும் வாழ்க்கையின் எதார்த்தங்களைச் சித்தரிப்பதில்லை. கிளுகிளுப்பூட்டும் கற்பனைகளில் அதிகம் ஈடுபடுகின்றன. வாழ்க்கையின் வறட்சியை மறக்க விரும்புகிற மனிதர்களுக்கு, பசுமைக்கனவுகளைக் காட்டும் போதைச் சரக்கு களாக விளங்குகின்றன. நுகர்வோரின் பொழுதுபோக்கையே கருத்தில்கொண்டு தயாரிக்கப்படுகின்றன.

தமிழ்ச் சினிமாப்படங்களைப் பார்த்து ரசிப்பதற்குப் பொறுமையும் போதிய மனப்பக்குவமும் தேவை. பத்திரிகைத் தொடர்கதைகளைப் படித்து ரசித்து மகிழ்வதற்கும் தனியான மனப்பக்குவமும் பொறுமையும் கட்டாயம் வேண்டும்.



# நடைப் பயணம்

"எழுத்தாளராக முன்னேறவேண்டும் என்ற நோக்கத்துடன் வல்லிக்கண்ணன் திருநெல்வேலியிலிருந்து சென்னைக்கு நடந்தே வந்தார்"

இப்படி ஒரு தகவல் அவ்வப்போது ஏதாவது ஒரு பத்திரிகையில் பிரசுரம் பெற்றுக் கொண்டுதான் இருக்கிறது. எழுத்தாளர் வல்லிக்கண்ணனைப் பாராட்டிப் பேச முற்படுகிறவர்களில் எவராவது ஒருவர் இதை மேடையில் ஒலிபரப்பிக்கொண்டு தானிருக் கிறார்.

இத்தகவலில் உள்ள ஒரு கவர்ச்சித் தன்மை காரணமாகத்தான் இது அடிக்கடிப் பேசப்படுகிறது. ஆயினும் இது உண்மை யில்லை. எனினும் இதில் உண்மை இல்லா மலும் இல்லை.

நான் 1942 மேமாதம் 25ஆம் நாள் அதிகாலையில், திருநெல்வேலி அரசடிப் பாலத்தெரு வீட்டிலிருந்து வெளியேறினேன். நடந்தே சென்னை போய்ச் சேரவேண்டும் எனும் எண்ணத்தோடுதான்.

திருநெல்வேலிக்கும் சென்னைக்கு மிடையே நானூறு மைல் தூரம். தினசரி

முப்பது மைல் நடந்தால் பதின்மூன்றரை நாட்களில் சென்னை சேரலாம். எப்படியும் பதினைந்து நாட்களில் சென்னையை அடைந்துவிடமுடியும்.

இவ்விதம் என் மனம் பல நாட்களாகக் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தது. ஒருநாள் துணிந்து கிளம்பினேன். வீட்டில் யாரிடமும் சொல்லவில்லை. சொன்னால் போகவிட மாட்டார்கள. இவ்வளவு தூரம் நடந்தே போவதாவது! வழியில் சாப்பாட்டுக்கு என்ன செய்வாய்? இப்படிப் பலப்பல கேள்விகள் கேட்டு என்னைத் தடுத்திருப்பார்கள்.

நடப்பது என்பது எனக்கு மலைப்பு தரும் காரியமில்லை. மாணவப்பருவத்திலேயே பலப்பல மைல்கள் நடந்து பழகியவன் தான். ராஜவல்லி புரத்திலிருந்து பாளையங்கோட்டைக்கு அநேக நாட்கள் நடந்திருக்கிறேன். பிறகு வேலையின்றி வீட்டிலிருந்த போது ஆனந்தவிகடன் வாங்குவதற்காக ராஜவல்லிபுரத்தில் இருந்து ஆற்றங்கரைப் பாதை வழியாகத் திருநெல்வேலி ஜங்ஷனுக்கு வந்து பத்திரிகை வாங்கிக்கொண்டு வந்த வழியாக நடந்திருக் கிறேன். இப்படி வாரம்தோறும் இரண்டு வருடங்கள் பழக்கம் அது. மேலும், அந்நாட்களில் எவ்வளவு தூரமானாலும் நடந்து போகத்தயங்காதவர்கள். கிராமங்களில் இருந்தார்கள். தூத்துக் குடிக்கும் திருந்செந்தூருக்கும் சேரகுளம் கார்சேரி போன்ற தூரத்து ஊர்களுக்கும் நடந்தே போய் நடந்து திரும்பியவர்கள் எங்கள் ஊரில் வாழ்ந்தார்கள். அவர்களுக்கு நடப்பது இயல்பான ஒரு செயலாகவே இருந்தது. எனக்கும்தான்.

நான் பாடப்புத்தகத்தில் ஆலிவர் கோல்டுஸ்மித் என்ற கவிஞன் நாவலாசிரியன் பற்றிப் படித்திருந்தேன். அவன் நடந்து நடந்தே ஐரோப்பா முழுவதும் கண்டறிந்தான். பின்னர் மாக்சிம் கார்க்கி பற்றிப் படித்தேன். அவன் நடந்து நடந்தே ரஷ்ய நாட்டின் நீளஅகலங்களைக் கண்டதோடு பல்வேறு மக்களின் வாழ்க்கை முறைகளையும் கலாசாரங்களையும் பற்றித் தெரிந்து கொண்டான். இப்படி கார்க்கியின் வரலாறு கூறியது. பெனிட்டோ முசோலினி என்கிற இத்தாலிய சர்வாதிகாரி அவனது இளமைப் பிராயத்தில், பையில் மூன்றே காசுகளுடன் அவன் ஊரிலிருந்து ரோமாபுரிக்கு நடந்தே வந்தான். இதுவும் வரலாறுதான். சுவாமி விவேகானந்தர் நடந்து நடந்தே இமயம் முதல் குமரிவரை சென்று பாரததரிசனம் கண்டார்.

இத்தகைய இலட்சிய வழிகாட்டுதல்கள் என்னுள் நெடுங் காலமாகவே வேலை செய்துகொண்டிருந்தன. நானும் இப்படி நடந்து நடந்தே ஊர்களைப் பற்றியும் மனிதர்கள் பற்றியும் தெரிந்து கொள்ளவேண்டும் என்று ஆசைப்பட்டேன். அதற்கான

வெள்ளோட்டம் போன்றதுதான் சென்னை நகரை நோக்கிய எனது நடைப்பயணம்.

நாள்தோறும் சோர்வுறாது முப்பது மைல்கள் நடக்க முடியுமா? பதின்மூன்று (அல்லது பதினைந்து) நாள்கள் போதிய உணவு இல்லாமல் நடந்துபோவது சாத்தியப்படுமா? அப்படி நடந்துபோய், சென்னையை அடைந்ததும் என்ன செய்வது? இவ்விதமான சந்தேகம் எதுவும் என் மனசில் எழவில்லை. நடந்தே சென்னை சேரவேண்டும் என்பது ஒரு வெறியாக என்னுள் கனன்று கொண்டிருந்தது. அப்போது எனக்கு வயது இருபத்து இரண்டு.

ஆகவே நடக்கலானேன். ஒரு துணிப்பையில் இரண்டு வேட்டிகள் இரண்டு துண்டுகள், இரண்டு சட்டைகள். எழுது வதற்குச் சில தாள்கள் மற்றும் பேனா. வீட்டில் அவல் இருந்தது. வழியில் உண்பதற்கென்று கொஞ்சம் அவல் எடுத்துக்கொண்டேன். காசுகள் எடுக்கவில்லை.

நடந்தேன். முதல்நாள் இருட்டுவதற்கு முன்னதாகவே கோவில்பட்டி சேர்ந்தேன். முப்பத்தைந்து மைல்கள்.

அக்காலத்தில் ரஸ்தாக்களில் பஸ் போக்குவரத்து அதிகம் கிடையாது. லாரிகள் அபூர்வமாகத்தான் காணப்படும். சரக்குகளை ஓர் ஊரிலிருந்து பிறஇடங்களுக்கு எடுத்துச்செல்ல கூண்டு வண்டிகள் உபயோகத்தில் இருந்தன. கட்டை வண்டிகள் (மொட்டை வண்டி) சர்வசாதாரணமாக இயங்கிக் கொண்டி ருந்தன. ரோடுகளில் நடந்துசெல்கிற பயணிகளும் அதிகம் இல்லை. அது இரண்டாவது உலக மகா யுத்தகாலம். ரயில் குறைக்கப் பட்டிருந்தது. வெறிச்சோடிக் கிடந்த தண்டவாளம் நெடுகிலும் காட்சி தந்தது.

கோவில்பட்டியில் ரயில் நிலையத்தின் தாழ்வாரத்தின் ஒரு மூலையில் படுத்தேன். அயர்ந்து தூங்கிவிட்டேன். (தற்காலத்திய கோவில்பட்டி நிலையம் நவீன வளர்ச்சியைப் பெற்றுள்ளது. 1940களில் சாதாரண, பழைய மாடல் கட்டடமாகத்தான் இருந்தது).

இரண்டாம் நாள் காலையில் எழுந்து நடந்தேன். அவல் தான் அவ்வப்போது உணவாக உதவியது. முன்தினங்களில் மழை பெய்திருந்ததால் வழி நெடுகப் பள்ளங்களில் தண்ணீர் தேங்கிக் கிடந்தது. அதுவே எனக்குக் குடிதண்ணீர். விருதுநகருக்குப் புறத்தே காணப்பட்ட சாலையோரக் கட்டடத்தின் திண்ணையில் படுத்தேன். மாலை நேரம். தூக்கம் என்னை ஆட்கொண்டது.

திடீரென விழிப்பு வந்தது. நல்லஇருள். நடந்தேன். விருதுநகர் விளக்குகள் வெளிச்சத்தோடு விழித்திருந்தன. பல கடைகளில்,

கூரையிலிருந்து தொங்கிய சரவிளக்கு. எண்ணெயில் எரியும் திரிவிளக்குதான் வெளிச்சம் கொடுத்துக் கொண்டிருந்தது. இரவு மணி பன்னிரண்டு என்று ஒரு கடையின் சுவர்க்கடியாரம் அறிவித்தது. மற்றுமொரு முப்பது மைல்கள் கடந்திருந்தேன் என்ற நிறைவு எனக்கு. கடைவீதியின் தண்ணீர்க் குழாயில் அப்போதும் தாராளமாகவே தண்ணீர் வந்து கொண்டிருந்தது. திருப்தியாக நீர் பருகினேன். நடந்தேன். கள்ளிக்குடி வந்தது. சாலையோரக் கடைகள் திறந்திருந்தன. கூண்டு வண்டிகள் மைதானத்தில் நின்றன. விடிந்தால் சந்தை கூடும் என்று தோன்றியது. வண்டிகள் இல்லாத வெற்றிடத்தில் படுத்தேன். தூக்கம்தான்.

திடீரென யாரோ எழுப்பிய உணர்வு விழிப்பு தந்தது. மைதானம் கூண்டு வண்டிகளால், மாடுகளால், மனிதர்களால் நிறைந்து காணப்பட்டது. என் அருகில் ஒரு வண்டி நின்றது. அந்த வண்டிக்காரன்தான் என்னை எழுப்பியிருக்கிறான். வண்டியை இங்கு நிப்பாட்டணும். மாடுகளை அவிழ்த்துக் கட்டணும். எழுந்து தள்ளிப்போ என்று குரல் கொடுத்தான்.

எழுந்து நடந்தேன். இரவு நீண்டிருந்தது. தனித்த ரோட்டில் தனியனாய் நடந்தேன்.

எரிந்துகொண்டிருந்த எலெக்ட்ரிக் லைட்டுகள். தூங்கும் திருமங்கலம் ஊரைச் சலனமற்ற வெறுமையாய்க் காட்டி நின்றன. நான் நடந்துகொண்டிருந்தேன்.

வைகறை வேளையில் திருப்பரங்குன்றம் வந்துவிட்டேன். விசாலமான குளத்தில் நிறையவே தண்ணீர் கிடந்தது. குளிப்பவர்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள்.

நானும் நன்கு நீராடினேன். வேட்டி சட்டையை நனைத்து கரைமீது நின்றபடி உலர்த்தினேன். இனிய காற்று துணை புரிந்தது.

நான் செருப்பு அணிந்திருக்கவில்லை. ரோட்டில் நடந்து கொண்டிருந்ததால் பாதத்தில் விரல்களிடையே வெடிப்பு ஏற்பட்டு வலி தந்தது. மூன்றாவதுநாள் (இரண்டே கால் நாட்களிலேயே) மதுரை வந்து சேர்ந்தாச்சு. 95 மைல்கள். மேலும் நடந்துநடந்து போவதே சிரமம்தான். எனவே மதுரையில் வசித்த ராஜவல்லிபுரம் உறவினர் ஒருவரிடம் சிறிது பணம் கடனாகப் பெறுவது. காரைக்குடிக்கு ரயிலில் போவது. அங்கே இருந்த இந்திரா மாதப் பத்திரிகை அலுவலகத்தில் இடம் கிடைக்குமா என முயல்வது. இல்லையெனில் ஆசிரியர் ப. நீலகண்டனிடம் ரயில் செலவுக்குப் பணம் வாங்கிக்கொண்டு சென்னைக்கு ரயிலில் போவது என்று திட்டமிட்டேன். மதுரையை நோக்கி நடந்தேன். காலை 9.30 மணிக்கு அந்த உறவினரைச் சந்திக்க முடிந்தது. அன்று அவருட

னேயே தங்கினேன். மறுநாள், காரைக்குடிக்குப் போக ரயில் டிக்கட்டுக்கான பயணம் மட்டும் மூன்றுரூபாய் அவரிடம் கேட்டுப்பெற்றேன். ரயிலில் பணம் செய்து காரைக்குடி போனேன்.

இரவு வந்திருந்தது. ரயில் நிலையத்திலேயே படுத்துத் தூங்கினேன். மறுநாள் அதிகாலையில் எழுந்து காரைக்குடி ஊருக்குள் சென்று இந்திரா அலுவலகம் அடைந்தேன். இந்திரா நடத்திய சிறுகதைப்போட்டியில் என்கதை, முதல் பரிசு பெற்றிருந்தது. அது தவிர மாதம்தோறும் எனது சிறுகதையை இந்திரா வெளியிட்டு வந்தது.

ஆனாலும் அங்கே எனக்கு இடம் இல்லை என்று புரிந்தது. யுத்தகாலம். சென்னை சென்றாலும் பத்திரிகைகளில் இடம் கிடைப்பது சிரமம். கிடைக்காது என்றே சொல்லலாம். எனவே நீங்கள் திருநெல்வேலிக்குத் திரும்பிப் போவதே செய்ய வேண்டிய நல்ல காரியம் என்று ப. நீலகண்டனும், சக்தி பத்திரிகை ஆசிரியர் வை. கோவிந்தனும் தி.ஜ. ரங்கநாதனும் மற்றும் சிலரும் அறிவுரை கூறினார்கள்.

வேறு வழியில்லை. ஆகவே வீட்டுக்கு என் அண்ணாவுக்குக் கடிதம் எழுதினேன். திரும்பி வருவதற்கு அண்ணா பணம் அனுப்பி வைத்தார். வெற்றிகரமாக நான் வாபசானேன்.

இதுதான் எனது நடைப்பயணத்தின் உண்மை வரலாறு. சென்னைக்கு நடந்தே போகவேண்டும் என்கிற என் கனவு கால்வாசிதான் பலித்திருந்தது. மீதி? சிதைந்த கனவுதான்.



# மாற வேண்டிய விஷயம்

கடந்தகால இனிய அனுபவங்களைத் தற்காலத்தில் நினைத்துப் பார்த்து மகிழ்ச்சி அடைவதில் தனி இன்பம் காணும் முதிய நண்பர் ஒருவர் அடிக்கடி அலுத்துக் கொள் கிறார். முன்பு ஆனந்தமாகப் பொழுதுபோக்க வகை செய்த இடங்கள் பலவும் இப்போது சிதைந்து சீர்குலைந்து மகாமோசமான சூழ்நிலைகளாக மாறிப் போயிருப்பதைக் குறித்துத்தான்.

இளமைப் பிராயத்தில் அவரும் அவருடைய நண்பர்களும் மாலைவேளைகளில் தாமிரவருணி ஆற்றின் மணல் வெளியில் ஓடி ஆடி விளையாடிக் களித்தார்கள். பிறகு மணலில் அமர்ந்து பேசி மகிழ்ந்தார்கள். நிலாக்கால இரவுகளில் இனிமைகள் அதிகரித் திருக்கும். ஆற்றங்கரைப் பிள்ளையார் கோயில், கட்டிடம் இன்றிக் காணப்பட்டாலும் அமைதியும் தூய்மையும் நிறைந்த இடமாக இருந்தது. ஆற்றில் தண்ணீர் சுத்தமாக, தெளிவாக, ஓடிக் கொண்டிருந்தது. அதில் குளிப்பதே தனி சுகம்.

காலஓட்டத்தில் தூரதொலைவில் வெளி மாவட்டங்களில் பணிபுரிய நேரிட்டதால், நண்பர் வெளியூர்வாசியாகவே வாழ்ந்து விட்டார். ஆயினும் எப்போதும் தாமிர வரணியும் மணல்வெளியும் தெளிநீரும்

குளிப்பு சுகமும் அவர் மனசில் நீங்காமல் நிலைத்திருந்தன. ஆற்றங்கரைப் பிள்ளையார் அவர் உள்ளத்தில் ஆசை காட்டிக் கொண்டுதான் இருந்தார்.

ஊருக்குப்போய் அங்குள்ள இடங்களை எல்லாம், முக்கிய மாக ஆற்றையும் முன்னொரு காலத்தில் நண்பர்களோடிருந்து பேசிப் பொழுதுபோக்கிய மணல் பரப்பையும், மனசுக்கு இதம் தரும் பிள்ளையாரையும் மீண்டும் கண்டுகளிக்க வேண்டும். ஆற்றில் நீராடும் சுகஅனுபவத்தைப் பெறவேண்டும் என்ற நினைப்பு அவருள் உறுத்தலாக நிலைபெற்றிருந்தது.

ஒருநாள் போனார். பார்த்தார். ஏன் வந்தோம் என்று வருத்தம்தான் ஏற்பட்டது அவருக்கு. ஆறு ஆறாக இல்லை. பல இடங்களில் நகர்ப்பகுதிகளின் சாக்கடை நீர் வாய்க்காலாய்ப் பெருகி ஓடிவந்து ஆற்றில் கலந்து கொண்டிருந்தது. ஆற்றுநீர் அசையாது குட்டை குட்டையாய்த் தேங்கி நின்றது. நீரில் கால் வைக்கவே கூசினார் நண்பர். அவருக்கு மேலும் அதிக வேதனை தந்தது. ஆற்றுப்படுகையில் எங்குமே மணல் என்பதே தென்பட வில்லை.

நண்பருக்குப் பிடித்தமான பிள்ளையார், சிறைக் கம்பி போல் கம்பி அளி போடப்பட்ட சிறுகட்டிடத்தினுள் அடைப்பட்டி ருந்தார். அந்தக்கோயிலும் பூட்டப்பட்டிருந்தது. இது புனித இடமாகத் தோன்றவில்லை. குப்பையும் அசுத்தங்களும் சிதறிக் கிடந்த சூழ்நிலை அவருக்கு மனவேதனை அளித்தது.

இதுபற்றித்தான் நண்பர் கடிதத்தில் வேதனையோடு குறைப்பட்டிருந்தார். ஊர்களும் தெருக்களும் நகரமும் வளர்ச்சி என்ற பெயரில் சீர்குலைந்து அழகற்றுக் காணப்பட்டதாக அவர் வருந்தினார். எங்கும் கும்பலும் நெருக்கடியும், பரபரப்பும் அவசரமும், முண்டி அடித்து முட்டி மோதுதலும் அவரைச் சங்கடப்படுத்தின. ஏன் வாழ்க்கை இப்படி ஆகிப் போச்சு என்று பெருமூச்செறிந்து கொண்டிருக்கிறார் அவர்.

தாமிரவரணியை அதன் பல்வேறு நிலைகளில் பார்த்து நான் ரசித்திருக்கிறேன். வியந்திருக்கிறேன். வருத்தப்பட்டுமிருக் கிறேன். என் சின்னஞ்சிறு பிராயத்திலிருந்தே நான் அந்த ஆற்றை நேசித்து வந்திருக்கிறேன்..

ஒரு காலத்தில் 1920—1930களில் அந்த ஆறு இளமை வனப்புடன் இனிய காட்சியாக விளங்கியது. வெள்ளிய மணல் எங்கும் பரவிக்கிடக்க நடுவிலோ — ஓரத்திலோ தண்ணீர் தெளிவாக, அழகாக, நெளிந்து வளைந்து ஓடிக்கொண்டிருந்தது. நீரின் அடியில் மணல் செம்மையும் கருமையும் கலந்த ஒரு

நிறத்தில் மிளிர்ந்தது. அது தாமிரநிறம் என்றும், அதனாலேயே ஆறு தாமிரவரணி எனப் பெயர் பெற்றது எனவும் சொல்லப் பட்டது.

மழைக்காலத்தில் ஆறு வெகுண்டு பொங்கிப் பிரவாகித்து, இரு கரையும் நீர் தொட்டுத் தழுவி ஓட, மிடுக்காகப் பயங்கர மாகக் கூட காட்சி தரும். கோடைகாலத்தில் ஆறு மெலிந்து காணப்படும். தண்ணீர் சுத்தமாக ஓடிக் கொண்டுதான் இருந்தது. நீர் வற்றித் தேங்கி, சாக்கடைக் குட்டைகளாக அந்நாட்களில் ஆறு இருந்ததில்லை.

நண்பர் குறிப்பிடுகிற பகுதியில் திருநெல்வேலி சந்திப்பை ஒட்டிய கைலாசபுரம், மீனாட்சிபுரம், கொக்கிரகுளம் முதலிய ஊர்களைச் சார்ந்த பகுதிகளில், மணல் வெண்மையாய்ப் பெரும் பரப்பாய் விரிந்து கிடந்தது. சுலோசன முதலியார் பாலத்தை அடுத்தும் தைப்பூசமண்டபத்தை ஒட்டியும் அகன்று கிடந்த மணல் பரப்பில் பெரிய பெரிய பொதுக்கூட்டங்கள் நடைபெறுவது வழக்கம்.

1933 அல்லது 34 இருக்கலாம். தமிழ்நாட்டில் சுற்றுப் பயணம் செய்த ஜவகர்லால் நேரு, அவர் மனைவி கமலா நேரு, மகள் இந்திரா மூவரும் ஆற்றுமணலில் அமைக்கப்பட்ட மேடையில் தோன்றினார்கள். அவர்களைப் பார்ப்பதற்காகப் பெரும் திரளாக மக்கள் கூடியிருந்தனர். ஜவகர்லால் நேரு சொற்பொழிவாற்றினார். இப்படி வரலாற்றுப் புகழ்பெற்ற கூட்டங்கள் நிகழ்ந்த இடம் — மணல்வெளி — அது.

நான் வசித்த ராஜவல்லிபுரம் ஊரிலிருந்து தெற்கே ஒரு மைல்தூரத்தில் ஓடுகிறது தாமிரவரணி. அந்த இடத்துக்கு செப்பறை என்று பெயர். தாமிரசபை (செப்பறை)யில் வீற்றிருக்கும் நடராஜர் திருக்கோயில் அங்கே இருக்கிறது. காட்டுக் கோயில் என்பார்கள். ஆள் நடமாட்டம் இல்லாத பிரதேசம். பனை மரங் களும் உடை கருவேல மரங்களும் செறிந்திருக்கும் இடம்.

கோயிலில் இருந்து ஒரு பர்லாங் தள்ளி, பள்ளத்தில் கிடக்கிறது ஆறு. அங்கும் முன்னர் மணல்வெளி பரந்து கிடந்தது. அமைதி நிறைந்த அச்சூழலில் அழகிய மணலில், காலையிலும் மாலையிலும் நான், என் அண்ணா, ஒரு நண்பர் மூவரும் யோகாசனப்பயிற்சிகள் செய்வது வழக்கம். அந்நாட்களில் பெங்களூர் சுந்தரம் என்பவர் யோகாசனப் பயிற்சி முறைகளை அருமையான நடையில், வாரப் பத்திரிகையில் கட்டுரைகளாக எழுதி வந்தார், ஆனந்தரகஸ்யம் என்ற தலைப்பில், பிறகு தொடர்ந்து ஆரோக்கிய ரகஸ்யம் என்ற தலைப்பில் இதர உடற்

பயிற்சிகள் பற்றியும் ஆரோக்கியத்துக்கு வகை செய்யும் உணவு வகைகள் குறித்தும் சுவாரசியமாக எழுதினார். வாசகர்கள் பலருக்கு வழிகாட்டியாக விளங்கிய பயனுள்ள எழுத்து அது.

காலஓட்டத்தில் நிலைமைகள் மாறின. பாபநாசத்தில் ஆற்றில் அணை கட்டப்பட்டது. நீர்தேக்கி வைக்கப்பட்டது. அதன் பாதிப்புகள் ஆறுநெடுகிலும் ஏற்பட்டன. நீரோட்டம் குறைந்தது. திருநெல்வேலிப் பாலம், ஸ்ரீ வைகுண்டம் பாலம் போன்ற தடுப்பு நிலைகளில் சேறும் சகதியும் கொழ கொழத்தன. நாளடைவில் ஆற்றுப்படுகையில் மணல் படிவதில்லை. முன்பு பரந்து விரிந்து கிடந்த மணல் அழுக்காகி, அசிங்கமாகி, பாழ்பட்டு மெதுமெது வாக மறையலாயிற்று.

ஆற்றோரத்தை ஒட்டி ஓர் ஊரில் துவக்கப் பெற்ற காகித ஆலையின் கழிவு நீர் ஆற்றில் கலக்கவிடப்பட்டது. வளர்ந்து வந்த ஜனப்பெருக்கம் மிகுந்த ஊர்களின் - நகரங்களின் - சாக்கடை நீரும் ஆற்றில் வந்து கலந்தது. ஆறே பெரிய கழிவுநீர்க் கால்வாய் ஆக மாறிப்போயிற்று.

கரை ஓரங்களில் ஓங்கி வளர்ந்து நின்ற மருத மரங்கள் வெட்டுண்டன. நீர்க்கருவை என்று சொல்லப்படுகிற - வேகமாக மண்டி வளரும் முட்செடிப் புதர்கள் எங்கும் செழித்துப் படர்ந்தன. ஆற்றங்கரை ஓர ஊர்களுக்கு அழகு செய்து நின்ற மாந்தோப்புகள் அழிந்துபட்டன.

1960கள் வரைகூட மக்கள் ஆற்றங்கரைப் பாதை வழியாக நடந்துபோவது வழக்கமாக இருந்தது. கிராமங்களில் இருந்து மோர் - தயிர், நெய்யைக் கூடையில் தலைமீது சுமந்து ஆற்றங் கரைமீது வளைந்து நெளிந்து பளீரெனக் கிடந்த ஒற்றையடித் தடம் வழியாக நடந்து, பக்கத்து நகரங்களுக்குக் கொண்டுபோய் விற்பனை செய்தார்கள். பிறகு அவ்வழியே திரும்பினார்கள். பூ - கொழுந்து போன்றவற்றை விற்பனை செய்ய எடுத்துச் சென்ற வர்களும் அப்படியே போய்வந்தார்கள். ஊர்வழி போகிறவர் களும் நடந்தார்கள்.

காலம் மாறுதல்களை விதைத்தவாறே நகர்கிறது. அனைத்து ஊர்களுக்கும் பஸ் வசதி ஏற்பட்டது. சுகமாக, பஸ்சில் பயணம் செய்து போகிற வசதி இருக்கிறபோது நடந்து போய் சிரமப்படு வானேன் என்ற மனநிலை மக்களிடம் ஏற்பட்டது. வளர்ந்து கொழுத்தது. சிறுதூரத்துக்குக்கூட நடந்து போகச் சோம்பி னார்கள் மனிதர்கள். கால்மணி நேர நடையில் அடைந்துவிடக் கூடிய இடத்துக்குப் போவதற்கு, பஸ்சை எதிர்பார்த்து அரை மணி நேரம் - முக்கால் மணி நேரம் என்று காத்து நிற்கலானார்கள்.

பக்கத்து ஊர்களுக்கு - நடந்து போய்விடக்கூடிய தூரத்தில் உள்ள இடங்களுக்கு - நாற்று நட, களை பிடுங்க, அறுவடை செய்ய என்று பல ரகமான வேலைகளுக்கும் போய் வந்த ஆண்களும் பெண்களும் பஸ் வந்த பிறகு நடக்கத் தயாராக இல்லை. காத்து நின்று, பஸ் பிடித்து சுலபமாகப் போய்வரவே விருப்பம் கொண்டார்கள்.

இந்த மனநிலை மக்களிடம் படிந்துவிட்டபிறகு ஆற்றங் கரைப்பாதையை நாடுவோர் எண்ணிக்கை குறைந்தது. இறுதியில் எவருமில்லை என்றாயிற்று. அதனால் அந்தப் பாதை தூர்ந்து போனது. நடந்து போக முடியாதபடியாகிவிட்டது.

இப்படி எத்தனையோ மாற்றங்கள் ஆற்றில் ஏற்பட்டுள்ளன. தாமிரவரணியில் மட்டும்தான் என்றில்லை. நாடு நெடுகிலும் நீண்டு கிடக்கிற ஆறுகள் பலவும் காட்டுகிற சித்திரங்கள் இப்படித்தான் இருக்கின்றன.

சீர்குலைந்து அழகுகெட்டு அசிங்கமாகிப்போன தாமிர வரணியை மீண்டும் நல்ல நிலைக்குக் கொண்டுவர வேண்டும். ஆற்றுப்படுகையைச் சுத்தப்படுத்தி நீரோட்டத்தை நன்னிலை யாக்கி, கரைகளை அழகுபடுத்தி, வனப்புறுத்தும் சேர்மானங்கள் சேர்த்து மறுமலர்ச்சி உண்டாக்குவது என்று ஒரு திட்டம் வகுக்கப்பட்டது. சில வருடங்களுக்கு முன்பு, மாவட்ட ஆட்சியரும், மக்கள் கலாசார அமைப்பு ஒன்றும் இதில் ஆர்வம் காட்டி னார்கள். பாடிவரும் பரணி என்று வசீகரமான பெயரிட்டு, சுறுசுறுப்பாக வேலைகள் செய்தார்கள்.

(காலஓட்டத்தில் தாமிரவரணியின் பெயரும் தாமிரபரணி என்று மாறிவிட்டதையும் குறிப்பிட வேண்டும்)

ஆனால் சந்தர்ப்பங்கள் சதிசெய்துவிட்டன. கொக்கிர குளம் ஆற்றுப்பகுதி கொலைக்களமாக மாற நேர்ந்தது. உரிமைக்குரல் கொடுத்து, பேரணி நடத்தி, மாவட்ட ஆட்சியரிடம் மனு கொடுக்கச் சென்ற உழைப்பாளி மக்கள், காவலர்களின் தாக்கு தலுக்கும் விரட்டல்களுக்கும் ஆளானார்கள். ஓடித் தப்ப முயன்ற பலர் ஆற்றிலிறங்கினார்கள். சாவைச் சந்தித்தார்கள்.

இதன் பிறகு ஆற்றை அழகுபடுத்தும் திட்டமும் கிடப்பில் போடப்பட்டது.

நாட்டில் ஓடுகிற அல்லது ஓடுவதாகச் சொல்லப்படுகிற ஆறுகள் அனைத்துக்கும் இப்படித் தனிவரலாறுகள் இருக்கும். பருவ மழை பொய்த்து வருவதால் ஒவ்வொரு வருடமும் மழை சரிவரப் பெய்யாததால் ஆறுகள் வறண்டு கிடப்பது சகஜநிலை ஆகிவிட்டது.

தென்பெண்ணை, பாலாறு, வைகை மட்டுமே நீரற்ற வறண்ட படுகைகளாக இல்லை. இப்போது நாட்டில் வளம் சேர்த்து குளுமையாய்ப் பெருகி ஓடிய காவிரியும் அதன் கிளை நதிகளும் நீரற்றுக் காய்ந்து காணப்படுகிற காலமாக இருக்கிறது இது.

எங்கும் மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. ஆனால், அவை விரும்பத்தக்க மாறுதல்களாக இல்லை. மனித வாழ்க்கைக்கு வளம் சேர்க்கும் மாற்றங்களாக இல்லை, பெரும் பாலான மாற்றங்கள்.

இயற்கை செய்யும் மாறுதல்கள் பல. மக்கள் செய்கிற மோசமான மாறுதல்கள் அநேகம்.

இயற்கையின் வக்கிரச்செயல்பாடுகளை முற்றிலும் தவிர்க்க இயலாது. ஆனால், மனிதர்கள் சுயநலப் போக்கினாலும் பண ஆசையினாலும் இதர பல மோகங்களினாலும் நிகழ்த்திக் கொண் டிருக்கிற விரும்பத்தகாத, அநேக சமயங்களில் தேவை இல்லாத, அடாவடித்தனமான விளம்பர ஆசையாலும் நாகரிக மோகத் தினாலும் வளர்ந்து வருகிற மாற்றங்களைத் தவிர்க்க இயலும்.

அதற்கு மக்களின் மனநிலை மாறவேண்டும். மனம் இருந்தால் மார்க்கம் உண்டு. என்பார்கள். அதுதான் முக்கியம்.



# கற்பனைச் சுழலில் கதாபாத்திரம்

காவிய கர்த்தர்களும், கதாசிரியர்களும் விதம்விதமான கதாபாத்திரங்களை உருவாக்கு கிறார்கள். அவர்களை வகைவகையான அனுபவங்களிலும், சிக்கல்களிலும், உணர்ச்சிக் குழப்பங்களிலும் உழலவிடுகிறார்கள்.

அத்தகைய மாந்தரும் அவர்களது அனுபவங்களும் வாசக ரசிகர்களிடையே வெவ்வேறு ரகமான தாக்கங்களை ஏற்படுத்து கின்றன. சில கதாபாத்திரங்களின் உணர்வு களும் செயல்களும் மூலக்கதையில் இருப்பதை விட மாறுபட்ட விதத்தில் அமைந்தி ருந்தால் பொருத்தமாகவும் சிறப்பாகவும் இருக்குமே என்ற நினைப்பு கற்பனைவளம் பெற்ற சிலருக்கு உண்டாகிறது. உடனே அவர்கள் தங்கள் மனதுக்கேற்றபடி ஒரு புதுக்கதையை உண்டாக்கி விடுகிறார்கள்.

காலங்காலமாக கதை கவிதை எழுதுகிற படைப்பாளிகள் கையில் படாத பாடுபடும் கதாபாத்திரங்களில், கவிஞர் கதாசிரியர் நாட காசிரியர் அநேகர் அவரவர் கற்பனைக்கும் மனோதர்மத் துக்கும் கண்ணோட்டத்துக்கும் தகுந்தபடி அகலிகை கதைக்குப் புதுமெருகு தீட்டி மகிழ்ந்திருக்கிறார்கள். வெவ்வேறு இந்திய மொழிகளிலும்...

சுதேஷ்ணா சக்ரவர்த்தி எனும் வங்கமொழிப் படைப்பாளி எழுதிய அகலிகைகதையின் தமிழாக்கத்தை அண்மையில் படித்தேன். முற்றிலும் வித்தியாசமான, புதுமையான, அந்தக் கற்பனை தமிழில் வந்துள்ள பல்வேறு அகலிகைகதைகளையும் என் நினைவில் ஓடச் செய்தது.

வால்மீகி படைத்துவிட்ட அகலிகையின் கதை நேயர்களுக்குத் தெரிந்திருக்கும். அழகுமிகுந்த பெண்ணான அகலிகைக்குத் திருமணம் செய்ய நிச்சயித்த பிரம்மா அவளைப் படைத்தவர். ஒரு நிபந்தனை விதித்தார். “இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் யார் முதலில் வலம் வருகிறானோ அவனுக்கே அவள் உரிமையாவாள்” என்றார். அனைவரும் பயந்து விலகினர். இந்திரன் துணிந்து முன் வந்தான். ஐராவதம் என்ற யானையின் மீதேறி வலம்வரத் தொடங்கினான். ஆனால் கௌதமன் (கோதமன்) என்கிற முனிவன், அருகில் நின்ற காமதேனு எனும் பசுவை வலம் வந்து, “இக்கோமாதாவிடம் அகில பிரபஞ்சங்களும் அடக்கம். இவளை வலம் வந்ததன் மூலம் நான் பிரபஞ்சத்தை வலம் வந்தவனாகிறேன்” என்றான். அவனது தர்க்க நியாயத்தை அங்கீகரித்த பிரம்மா அகலிகையை முனிவனுக்கே மணம் முடித்து வைத்தான்.

வேகம் வேகமாய்ச் சுற்றிவிட்டு வந்த இந்திரன் பேரழகி அகலிகை வறட்டு தாடி முனி ஒருவனோடு குடில் ஒன்றில் ஒடுங்கி விட்டதை அறிந்து உளம் கொதித்தான். எப்படியும் அவளுடன் இன்பம் நுகரத் தவித்தான். தவிப்பு அதிகமான ஓர் இரவில் தனது சக்திகளால் வஞ்சனைகள் புரிந்து கோதமனை ஏமாற்றி வெளியேற்றினான். விடியும் வேளை வந்துவிட்டது என மயங்கிய முனிவன் நீராட நதிக்கரை சென்றான். அவ்வேளையில் இந்திரன் கௌதமனின் உருவில் வந்து, அகலிகையோடு இன்பம் நுகர்கிறான். இன்னும் பொழுது புலர நேரம் கிடக்கிறது என்று கண்டுகொண்டு முனிவன் வீடு திரும்பியதும் உண்மையை உணர்ந்து வெகுண்டு இந்திரனைச் சபிக்கிறான். அகலிகையையும் கல்லாகும்படி சாபம் கொடுக்கிறான்.

இந்தக்கதையைப் படித்தவர்கள், அகலிகை தவறு செய்யவில்லை என்று எண்ணுவோரும், அவளுக்கு அளிக்கப்பட்ட தண்டனை நியாயமானதில்லை என்போரும் அவரவர் கற்பனைத் திறனைக் காட்ட விரும்பினார்கள்.

அகலிகைகதையைப் பாட வந்த கம்பன் அவள் உடலினால் பிழை செய்ய நேரிட்ட போதிலும், உள்ளத்தால் பிழைஇலாதவள். அவள் அந்நியன் ஆன இந்திரனைக் கூடியிருந்த வேளையிலும்

தன் கணவனான கௌதமனே தன்னைத் தழுவியிருக்கிறான் என்றே நம்பி இன்புற்றாள் என்று கூறிவைத்தான்.

கம்பஇராமாயணத்தைத் தழுவி அகலிகை வெண்பா இயற்றிய வெ.ப. சுப்பிரமணிய முதலியார், கம்பனைப் போலவே அகலிகை உள்ளத்தால் பிழை இல்லாதவள் என்றே முடிவு கட்டினார். அவள் உள்ளத்து உளைச்சலிருந்து விடுபடும் வகையில் கல்லாகி பாறைப் படுக்கையில் துயிலும்படி வெ.ப.சு உதவி புரிந்திருக்கிறார் என்று ரசிகமணி டி.கே.சி. எழுதியுள்ளார்.

தமிழில் மறுமலர்ச்சி சிந்தனைகள் எழத்தொடங்கிய பின்னர், படைப்பாளிகள் அகலிகை கதைக்குத் தீவிரமான மெருகுகள் தீட்ட முனைந்தார்கள். உள்ளம், உணர்வு, உடல் என்ற கோணங்களில் கவனிப்பு செலுத்தினார்கள்.

ச.து. சுப்பிரமணிய யோகியார் பாடியுள்ள அகலிகை விசேஷ மான படைப்பு. மேகமலர் காவனத்தே பூக்கொய்து விளையாடும் அகலிகையைக்கண்டு மோகம் கொள்கிறான் இந்திரன். வான வில்லின் வீதியிலே அவள் துள்ளித் திரிவதைப் பார்த்துப் பித்தேறிப் போனான். அவளை அடையத் தவிக்கிறான். வஞ்சனைகள் செய்து தாடி முனியை வெளியேற்றிவிட்டு கௌதமன் போல் வந்து அவளைத் தழுவுகிறான். என்றுமிலா ஆசை என் கணவர் கொண் டாரே என உளம் மகிழ்ந்து அவள் அவனோடு இன்பமொக்க உடன் உண்டு இருந்தாள் என்று விவரிக்கிறார் கவிஞர். பின்னர் வழக்கமான கதைதான்.

உள்ளத்தால் ஏங்கிய அகலிகை உடலின்பம் பெறத் தயாராக இருந்தாள். காமுகன் ஆன இந்திரன் பயன்படுத்திக் கொண்டான் என்ற ரீதியில் கு.ப. ராஜகோபாலன் அகலிகை நாடகம் எழுதினார்.

ந. பிச்சமூர்த்தி அகலிகைகதையில் புதிய பொருள் புகுத்தினார். உயிர்மகள் என்பது அவர் எழுதிய கவிதைக் கதை ஆகும். அதற்கு முன்னதாக, புதுமைப்பித்தன் எழுதிய அகலிகை கதை முக்கிய மாகக் குறிப்பிடத்தக்கது.

நிகழ்ச்சிகளை உரிய முறையில் அழகான நடையில் விவரித்துவிட்டு, இறுதிக்கட்டத்தில் புதுமை சேர்த்தார் புதுமைப் பித்தன். கோதமனை உன்னத மனிதனாக மாற்றிவிட்டார் கதையில். தான் வஞ்சிக்கப்பட்டதைப் புரிந்து கொண்ட முனிவர் கொதிக்கவில்லை. கோபம்கொண்டு சாபமிடவில்லை. தன் உணர்ச்சிகளை வென்றுவிட்ட சான்றோனாகத் திகழ்கிறார். “அப்பா இந்திரா உலகத்துப் பெண்களை எல்லாம் உன் சகோதரி களாக மதித்து நடக்கக்கூடாதா?” என்று இந்திரனிடம் கேட்ட

முனிவர், அகலிகையிடம் உன் உணர்வுகள் அந்நேரத்தில் உண்மையை அறிந்துகொள்ள முடியாத அளவுக்கு நீ கல்லாகி விட்டாயா?" என்று வினவுகிறார். இப்படி ஒரு மாமனிதனாக முனிவர் நடந்து கொள்வதோடு கதை முடிந்து விடுகிறது.

பல வருடங்களுக்குப் பிறகு புதுமைப்பித்தன் அகலிகை கதையை மீண்டும் எழுதினார் சாபவிமோசனம் என்று. இராமனின் பாதம்பட்டு கல்லிலிருந்து உயிர்த்தெழுந்த அகலிகையின் உணர்வு களையும் அனுபவங்களையும் நுண்மையாகச் சித்திரிக்கிறது இந்தக் கதை. ஒரு சமயம் சீதை தன் அனுபவங்களை இராமன் கூறி அவள் தீக்குளிக்க நேர்ந்ததை அவளிடம் சொல்கிறாள். அதைக் கேட்கவும் அகலிகை கொதிப்படைகிறாள். ஆண்களின் அநீதி அவள் உள்ளத்தைத் துன்புறுத்துகிறது. அமைதியிழந்த அகலிகை, மீண்டும் தீர்த்தயாத்திரை போகலாம் எனும் கணவனின் யோசனையை ஏற்கிறாள். அப்படிக் கிளம்புவதற்கு முன்னர் அவள் கல்லாகிப் போகிறாள்.

அகலிகை மீண்டும் கல்லாகிவிட்டாள் என்பது இந்த இடத்தில் அவள் உயிர் பிரிந்து அவள் உடல் இயக்கமற்று கல்போல் கனத்து விட்டதையே குறிக்கும் என்று சி.சு. செல்லப்பா விளக்கம் கூறுகிறார்.

ந. பிச்சமூர்த்தியின் உயிர்மகள், அகலிகையை உயிர் என்றும் புலன்களின் கதவும் தட்டி, உயிரிலே உணர்ச்சி கூட்டும். இன்பமே வடிவம் கொண்டவன் இந்திரன் என்றும், உண்மையிலே மனமே ஆனோன் கோதமன் எனவும் உருவகப்படுத்துகிறது, அகலிகை கதையை நயமாக விவரிக்கும் இந்நெடுங்கவிதை. இராமனின் கூற்றாகச் சில விளக்கங்களைத் தருகிறது.

சிருஷ்டியின் நுண்மை அறியா மனமுனியான நீ புலனைப் பகைவனாய்ப் பார்த்திட்டாய். கற்பென்றும் கடமையென்றும், கனவுகள் கண்டு உயிரை கானல்நீர் சுவைக்க கட்டளை மனத் தாலிட்டாய். உயிரற்ற மனம் ஒன்றுண்டா? உடலற்ற நிழலொன் றுண்டோ? பெண் இனம் நெஞ்சை இன்றும் மானிடர் அறிய வில்லை. பாசம் ஒன்றே கொள்ளும் பெண்ணைப் பாரிலே காண லரிது. கள்ளப்புருஷனென்றோ மின்னிடும் அணிகள் என்றோ, மயக்கிவிடும் துணிகளென்றோ, மணத்திடும் மலர்களென்றோ, பெண்மனம் கொள்ளை கொள்ளும் என்று இராமன் முனிவ னுக்கு விளக்குவதாகக் கவிதை வளர்ந்துள்ளது.

"ஞானம் பெற்று வளர்ச்சி பெற்ற முனிவனே, இந்திரனின் வஞ்சகப் போக்கை உணரும் திறன் உனக்கே இல்லை என்றான போது, அப்பாவி அகலிகை ஏமாற்றப்பட்டதற்கு அவளைக் குறை

கூறுவானேன்? அவளை நீ தண்டித்தது எப்படி நியாயமாகும்?" என்று ஒருவர் எழுத்தில் சாடியுள்ளார்.

அகலிகை — முனிவன் — இந்திரன் விவகாரத்தை, கோவை ஞானி மார்க்சியப் பார்வையில் நோக்கி 'கல்லிகை' என்றொரு குறுங்காவியம் படைத்திருக்கிறார். முற்றிலும் வித்தியாசமான பார்வை அது.

உழைக்காமலே உல்லாசமாகவும் சோம்பேறித்தனமாகவும் பொழுதுபோக்கி வாழ்கிறவர்களின் பிரதிநிதிதான் கௌதமன். உழைப்பவர்களது — உழைப்புமூலம் சூழ்நிலையில் புதுமைகள் புகுத்துவோரின் உருவகம் இந்திரன். படைப்புக்காலம் தொட்டு இன்றுவரை அடக்கி ஒடுக்கி வைக்கப்பட்டு உரியமுறையில் கவுரவிக்கப்படாமலும் திருப்தி செய்யப்படாமலும் குமைந்து கொதிக்கிற பெண் இனத்தின் எடுத்துக்காட்டு அகலிகை.

அவள் கணவன் உடல் கூட்டை உயிர்க்கயிற்றில் கட்டி இழுத்துத் திரியும் எந்திரம். அவனோடு அவள் நடத்திய தாம்பத்திய வாழ்க்கை அவள் போன்ற பத்தினிகள் அனைவரும் அனுபவிக்கும் அவலவாழ்வு. இந்நிலையில் ஆசைப் புயல் அடித்தடித்து நிமிர்ந்து கிடந்த தசைத்தீயை எந்த நாய்க்கு முன்னரும் எடுத்தெறியத் தயாரானாள் அகலிகை.

காட்டுச் சிந்தனைப் புதர்களை வெட்டி வாழ்வின் நேர் பாதையை வகுப்பதற்கே வச்சிரம் எடுத்ததாகச் சொன்ன இந்திரன் அகலிகை மனசைக் கவர்ந்து அவள் உடலுக்கும் மிகுந்த சுகானு பவம் தருகிறான்.

இந்திரனை வெற்றிகொள்ள முனிவர் இறைவன் ஒருவனைக் கற்பனையாய் உருவாக்கினார். அகலிகை மூலம் இதைக் கேட் டறிந்த இந்திரன், ஞானத்தாடியை அசிங்கமாய் வளர்த்த முனிவனைக் கண்டவன், அவளை விட்டு ஓடினான். ஆத்திரப் புயல் கிளப்பிய சொற்புழுதியைச் சாபம் என்று வீசினான் முனிவன். அவனை அவள் வெறுத்தாள். அவளிடம் இன்பம் அனுபவித்தும் அவளது இதயத்தை உணரத் தவறிவிட்ட சுரண்டல் மன்னன் இந்திரனையும் கரித்துக் கொட்டினாள். இது பன்னெடுங் காலமாக நடந்து வருகிறது.

உலகம் எனதே என உரத்து முழங்கும் ஒருவன், நீயே இறைவன் என்னும் இன்னொருவன். இருவரின் காலடியில் ஓர் அநாதை மனிதன். நெறிபடும் அவன் கண்களில் அகலிகை முகம் தெரிகிறது. உள்ளத்தை உயர்த்த விரும்பியவர் உடலை மதிக்க வில்லை. உடலை மதிக்க வந்தவர் உள்ளத்தைக் கவுரவிக்கவில்லை. இந்த உண்மைகளை வலியுறுத்துகிறது ஞானியின் கல்லிகை.

சுதேஷ்ணா சக்ரவர்த்தியின் வங்கமொழிச்சிறுகதை அகலிகையும் இந்த உள்ளம் — உடல் விவகாரத்தைத் தான் உட்பொருளாகக் கொண்டுள்ளது. சற்றே வித்தியாசமான கற்பனை.

மகரிஷி கௌதமரின் ஆசிரமத்துக்கருகில் ஓர் ஓரத்தில் கிடக்கிறது ஒரு பாறை. அதுதான் சாபம் பெற்ற அகலிகை. அவள் சாப விடுதலை பெறும் நேரம் நெருங்கி விட்டதை அறிந்த இந்திரன் ஒரு மேகமாக வந்து அந்தப் பாறையுடன் பேசுகிறான். கல்லுக்கும் பேசும் சக்தி அளிக்கிறான். இருவரது உரையாடலும், அகலிகை உள்நினைப்பும் சுவாரசியமாகச் சித்தரிக்கப் பட்டுள்ளன.

"மகரிஷி எப்போதோ உன்னை மன்னித்து விட்டார். நீ ஏமாற்றப்பட்டவள், குற்றவாளி இல்லை என்பதை அவர் உணர்ந்து விட்டார். இராமன் வருகிறான். அவனது பாததூளி பட்டு நீ உன் சுய உருவை அடைவாய். அசாதாரண அழகு மீண்டும் உனதாகும். அகலிகே சாபவிடுதலை பெற்ற பின் நீ எங்கே போவாய்? என்ன செய்வாய்?" என்று கேட்கிறான் இந்திரன்.

"நான் மகரிஷியின் ஆசிரமத்துக்கே திரும்புவேன்" என்று அகலிகை கூறவும், இனி அவள் சுதந்தரமானவள் என்றும் அவள் தன்னுடன் வரலாம். அவளுக்காக மற்றொரு மேலான சுவர்க்கத்தையே படைக்கமுடியும் என்றும் அவன் ஆசை காட்டுகிறான். இப்படிப் பேச்சு வளர்கிறது.

"அன்று கௌதமரின் ஆசிரமத்தில் என் தோல்வியை எதிர்கொண்டேன். இந்திரனாக உன் உள்ளத்தை ஈர்க்க இயலவில்லை என்னால். உன்னை அடைய நான் கௌதமராக வேடம் புனைய நேர்ந்தது. கணவனை நினைத்து நீ எனக்கு உன்னையளித்தாய். இந்தத் தோல்வி என்னை உறுத்திக் கொண்டேயிருக்கிறது. நீ என்னை — எனக்காக விரும்பும்போது அது என் வேதனையைப் போக்கிவிடும். நான் வேண்டுவது உன் உடலழகை மட்டுமில்லை. உன் உள்ளத்தையுந்தான்" என்கிறான். மறுப்புகள் கூறும் அகலிகைக்கு அவன் பசப்புமொழிகள் சொல்லி, அவள் மனத்தை மாற்ற முயலுகிறான். நீண்ட பேச்சு அது.

"அகலிகே இந்திரனின் ஸ்பரிசத்தை ஒருமுறை அனுபவித்தவள். அதைப் பின்னர் ஒருபோதும் மறக்க மாட்டாள். கௌதமர் உருவில் வந்த இந்திரனை நீ தினம் நினைத்துக் கொள்வாய். கணவருடன் உறவில் என்றாவது ஓர் அமைதியான — வழக்கத்துக்கு மாறுபட்ட இன்பம் உனக்குக் கிடைத்தால், உடனே உனக்கு ஐயமெழும். உன்னோடு உறவு கொண்டிருப்பவர் உண்மையில் கௌதமர்தானா அல்லது நானா என்று".

"இல்லையில்லை. நான் உன்னை முற்றிலும் மறந்து விடுவேன்.

நீதான் என் துன்பத்துக்குக் காரணம். என்னுள்ளத்தில் உனக்கு இடமில்லை" என்று அகலிகை உறுதியாகத் தெரிவித்தாள்.

தொலைவில் விசுவாமித்தரர் இராம லட்சுமணரோடு வருவது தெரிந்ததும் இந்திரன் மறைந்துவிட்டான்.

கௌதமர் திரும்பியதும் ஆசிரமத்தில் இருந்த அகலிகையைப் பார்த்துத் திகைத்தார். மகிழ்ந்தார். அவளது அழகு, முன்னைவிடக் கூடியிருப்பதாகத் தோன்றியது. அவருடைய மனக்குழப்பத்தைக் கதை வெளிப்படுத்துகிறது. தம் உணர்ச்சிகளை வெளியிட, கவர்ச்சிமொழியில் தம் காதலைத் தெரிவிக்க அவருக்குத் தெரியவில்லை. அவர் வேறுவிதமாக அவளிடம் தம் அன்பைக் காட்ட முனைந்தார். "அகலிகே உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள், நீ என்ன கேட்டாலும் தருகிறேன்" என்கிறார்.

அகலிகை அவரை நிமிர்ந்து பார்த்தாள். பிறகு சொன்னாள் "இந்திரனாக என்னிடம் வாருங்கள்".

கதை முடிந்தது.

அகலிகையின் கதை இன்னும் பல விதங்களில் பலரால் கற்பனை நயத்தோடு சித்தரிக்கப்பட்டிருக்கலாம். நான் அறிந்தது இவ்வளவுதான்.



# உண்மையான பெரிய மனிதர்

இந்த ஊரில் ஒருவர் பெரிய மனிதராக விளங்க வேண்டும் என்றால் அவருக்கு மூன்று தகுதிகள் இருக்கவேண்டும். ஏதாவது ஒரு நிறுவனத்தின் தலைவராக இருக்க வேண்டும் அவர். உள்ளூர் பார்பர் அவர் வீடு தேடிவந்து, காத்திருந்து தலைமுடி சிங்காரிப்பு — முக ஒப்பனை முதலிய வேலைகளைக் கவனித்து விட்டுப்போக வேண்டும். மூன்றாவதாக, அவர் ஒரு வைப்பாட்டி வைத்திருக்க வேண்டும். இந்தத் தகுதிகளைப் பெற்றிருப்பவர்களைத் தான் இங்கே பெரிய மனிதர்களாக மதிப்பது வழக்கம். இந்த வட்டாரத்தில் பெரிய மனிதர் அந்தஸ்து பெற்றிருக்கிற ஒவ்வொருவருக்கும் இம்மூன்று தகுதிகளும் இருக்கின்றன.

இப்படிச் சொன்னார் ஒரு நண்பர் தமது ஊரைப்பற்றி:

பார்க்கப்போனால் எல்லா ஊர்களுக்கும் பொருந்துகிற ஒரு பொதுஉண்மையாகவே இது அமையும். பெரியமனிதப் பம்மாத்துப் பேர்வழி களும், அவர்களுக்குத் துதிபாடுகிற அடியார் கூட்டமும் நாட்டில் அதிகரித்துவிட்டது. வியப்பர்களின் நோக்கில் எது எதெல்லாமோ அரிய பெரிய சாதனைகளாகவும் அசகாய சூரத்தனங்களாகவும் தென்படுகின்றன.

ஆனால் உண்மையான பெரிய மனிதர்கள் போலிப் பெருமைகளுக்கும், ஆடம்பரங்களுக்கும், வீணத்தனமான கெடுபிடிகளுக்கும் ஆசைப்படுவது கிடையாது.

மிகாயில் ஸோஷ்செங்கோ என்கிற ரஷ்ய எழுத்தாளர் எழுதியுள்ள ஒரு வரலாற்றுக் குறிப்பு எவ்வளவோ உண்மைகளை எடுத்துச் சொல்கிறது. அவர் எழுதியுள்ளது இது.

அன்று பார்பர் ஷாப்பில் ஏகப்பட்ட கூட்டம். சிகை அலங்காரத் தொழிலாளிகள் இருவர் கடுமையாக வேலை செய்து கொண்டிருந்தனர். வாடிக்கையாளர்கள் பலர் தங்களது முறைக்காகக் காத்திருந்தனர்.

அப்போது கதவுதிறந்தது. மக்கள் கமிசார்களின் கவுன்சில் தலைவர் விளாதிமிர் கடைக்குள் வந்தார். எல்லோரும் எழுந்து நின்றார்கள். "எப்படி இருக்கிறீர்கள் தோழர் லெனின்" என்று கேட்டனர். லெனினும் அவ்வாறே விசாரித்தார். பிறகு "வரிசையில் கடைசியாக இருப்பது யார்?" என்று கேட்டார்.

லெனின் கேட்ட கேள்வியால் எல்லோரும் ஆச்சர்யம் அடைந்தனர். லெனின் க்யூவில் காத்திருக்க வேண்டியதில்லை. அவர் அரசாங்கத்தின் தலைவர். அவரது ஒவ்வொரு நிமிஷமும் விலைமதிப்பற்றது என்று அங்கிருந்த அனைவரும் கருதினர். விளாதிமிர் இலியச், வரிசையில் கடைசியாக இருப்பது யார் என்பது முக்கியம் அல்ல. இப்போது அந்தத் தொழிலாளி வேலையை முடித்துவிடுவார். உடனே அந்த நாற்காலியில் உங்களுக்கு வேலைசெய்யும்படி கேட்டுக்கொள்கிறோம். நீங்கள் க்யூவில் வரவேண்டியதில்லை" என்று எல்லோரும் சொன்னார்கள்.

ஆனால் லெனின் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. தோழர்களே, மிக்க நன்றி. ஆனால் அது சரியல்ல. வரிசையில் வருவதை நாம் எல்லோரும் கண்டிப்பாகக் கடைப்பிடிக்க வேண்டும். நாம் ஒழுங்கை அனுஷ்டித்தாகவேண்டும். நாம் நமக்காகவே சட்டங்களை உருவாக்கிக்கொள்கிறோம். அவற்றை வாழ்வின் மிகச் சிறிய விஷயங்களிலும் நாம் நிறைவேற்றத்தான் வேண்டும் என்று சொன்னார். அங்கிருந்த நாற்காலி ஒன்றில் உட்கார்ந்து தமது கோட்டுப் பையிலிருந்து ஒரு செய்தித்தாளை எடுத்துப் படிக்கத் தொடங்கிவிட்டார்.

வாடிக்கையாளர்களில் ஒருவர் எழுந்து லெனின் அருகே வந்து பேசினார். விளாதிமிர் இப்போது என்னுடைய முறை வந்திருக்கிறது. ஆனால், உங்களை இங்கே காத்திருக்கும்படி செய்யாமலே இருப்பேன். இந்த வரிசைமுறைகளை மீறி நீங்கள்

போக விரும்பாததனால், நான் என்னுடைய முறையை உங்களுக்குக் கொடுக்க எனக்கு முழுஉரிமையும் இருக்கிறது.

அதற்குப் பதிலாக உங்கள் இடத்தில் கடைசியாக நான் இருந்து கொள்வேன் என்றார்.

பார்பர் ஷாப்பில் இருந்த எல்லோரும் இதற்கு லெனின் ஒப்புக்கொள்ளவேண்டும் என்று வற்புறுத்தினார்கள். அவர்களது வேண்டுகோளுக்கு அவர் இணங்கவேண்டியதாயிற்று.

சவரத் தொழிலாளி வேலையை முடித்தவுடன் லெனின் போய் வருகிறேன். தோழர்களே, மிக்க நன்றி என்று கூறிவிட்டு வெளியேறினார்.

அவர் உண்மையான பெரிய மனிதர். அவரிடம் மக்கள் மிகுந்த அன்பு கொண்டிருந்தார்கள்.

உழைக்காமல் இருப்பதுதான் பெரிய மனிதத்தனம் என்ற நம்பிக்கையோடு ரொம்பப் பேர் வாழ்கிறார்கள். வெறும் நபர்களே இப்படி என்றால் தலைவர்கள் ஆகிவிடுகிறவர்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும் ? சொந்த வேலையைக் கூடச் செய்யாமல் சுகவாழ்வு வாழ்வதே உயர்வுக்கு அடையாளம் என்று எண்ணு கிறவர்கள் அவர்கள். ஆனால் லெனின் அப்படிப்பட்டவர் அல்லர்.

"உழைப்பே இன்பம் என்று டால்ஸ்டாய் சொன்னார். இதை லெனின் பின்னர் திரும்பத்திரும்பக் கூறினார். லெனினும் தாமே உடலுழைப்பில் ஈடுபட்டார். ஆனால் கூலிக்காக அல்ல. எதிர்காலக்கம்யூனிஸ்ட் உழைப்பு என்று அவர் அதைக் குறிப் பிட்டார்" இப்படி எழுதியிருக்கிறார் மிக்கோயன், ஒரு கட்டுரையிலே.

உழைப்பு குறித்து லெனின் கொண்டிருந்த மனோபாவத்தை விளக்கும் ஒரு வரலாற்று நிகழ்ச்சி ரசமானது.

இளம் சோவியத் அரசின் நெருக்கடியான காலகட்டம் அது. உள்நாட்டு யுத்தத்தினாலும், அந்நியர் தலையீட்டினாலும் நிலைமை மோசமாகியிருந்தது. இளம்குடியரசு தனது பொருளாதாரத்தைப் புதிதாகக் கட்டவேண்டியிருந்தது. ஆகையால் விடுமுறை நாட்களிலும் வாரநாட்களின் ஓய்வு நேரங்களிலும், நாட்டுநலனுக்காக சோவியத் மக்கள் ஒன்று திரண்டு, இலவசமாக வேலை செய்ய முற்பட் டார்கள். பொதுவாக அவர்கள் சனிக்கிழமைகளில் வேலை செய்தார்கள். இதனால், மக்களில் பெரும்பகுதியினர் சுபோத் னிக்குகள் என்று அழைக்கப்பட்டனர். ரஷ்ய மொழியில் சுபோத்தா என்றால் சனிக்கிழமை என்று பொருள்.

1920ஆம் ஆண்டு மே முதல் நாள் அகில ரஷ்ய சுபோத்னிக்

தினமாகப் பிரகடனம் செய்யப்பட்டது. அந்த விடுமுறை நாளில் நாடெங்கும் மக்கள் உழைத்தனர். தொழிலாளர் அலுவலக ஊழியர் ராணுவப் பள்ளி ஒன்றின் மாணவர்கள் ஆகியோர் கிரெம்ளின் சதுக்கத்தில் காலை எட்டு மணிக்கே குழுமி விட்டார்கள். அந்தச் சதுக்கத்தைச் சுத்தம் செய்வதுதான் அவர்கள் பணி. லெனினும் அங்கே இருந்தார்.

அவர்கள் முதலில் மரக்கட்டைகளை அப்புறப்படுத்தத் தொடங்கினார்கள். இருவர் இருவராகச் சேர்ந்து வேலை செய்தார்கள். லெனின் ஒரு இளம் மாணவனுடன் இணையாக வேலை செய்தார். அந்த மாணவர் மரக்கட்டையின் ஒரு சிறிய பகுதியை மட்டும் லெனின் தூக்கும்படிச் செய்து, பெரிய பகுதியைத் தானே தூக்க முயன்றார். உடனேயே லெனின் இதைக் கவனித்துக் கொண்டார். பிறகு அந்த மாணவருக்கு முன்னதாகவே அவர் மரக்கட்டையிடம் முந்திக்கொண்டு தூக்கலானார். மாணவர் சொன்னார், நீங்கள் 50 வயதானவர். நானோ 28 வயதுடையவன் என்று. லெனின் கட்டையின் பளுவான பகுதியைத் தூக்கித் தோளில் சுமந்து கொண்டே, நான் உனக்கு சீனியராக இருப்பதால் என்னுடன் விவாதிக்காதே என்றார்.

மரக்கட்டைகள் எல்லாவற்றையும் அகற்றியபிறகு ஒக் பகுதிக்குத் திரும்பினார்கள். இங்கு லெனினுடன் மூன்று மாணவர் களும் இரண்டு தொழிலாளர்களும் வேலை செய்தார்கள். இது சற்று அதிகக்கடினமான வேலை. உடல் உழைப்பில் நன்கு பழக்கப் பட்ட தொழிலாளர்களின் முகத்தில் கூட வேர்வைத்துளிகள் பெருக்கெடுத்தன. அவர்களில் ஒருவர் லெனின் இல்லாமலேயே அந்த வேலையை அவர்கள் முடித்து விடஇயலும் என்றும் லெனின் இதைவிட முக்கியமான வேலைகளைக் கவனிக்கலாம் என்றும் அவரிடம் சொன்னார். லெனின் என்ன கூறினார்? “இந்த நேரத்தில் இதுதான் முக்கியமான வேலை என்று சொல்லி உழைப்பைத் தொடர்ந்தார். (ஆதாரம் அலெக்சாந்தர் கொனோனேவின் கட்டுரை)

புத்தகங்களைப் படிக்காமல் இருப்பது பெரிய மனிதப் பண்புகளில் ஒன்று என்று எண்ணியும் பேசியும் திரிகிறவர்கள் ஒன்றிருவர் அல்லர். எழுத்தாளர்களில்கூட இப்பேர்ப்பட்ட பெரியவர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால், பெரும்தலைவர் லெனின் ஓயாது ஒழியாது படிப்பதன் மூலம் அறிவை அகண்ட தாக்கி, நோக்கை விரிவு செய்யத் துடித்தார். எப்போதும், எங்கும் அவர் புத்தகங்களை அவாவினார். தலைமறைவு நாட்களிலும், அயல்நாடுகளில் வசித்தபோதும் புதிய புதிய புத்தகங்களைத் தமக்கு அனுப்பிக்கொண்டே இருக்கும்படி நண்பர்களுக்கு

அறிவிக்க அவர் தவறியதே இல்லை. அவருடைய கடிதங்களின் இத்தகைய குறிப்புகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

லெனின் என்றும் எளிய வாழ்வே வாழ்ந்தார். எல்லோருடனும் சமமாகவும் சகஜமாகவும் பழகினார். சிறு குழந்தைகளிடம் அன்பாகவும் அனுதாபத்தோடும் மகிழ்ச்சியுடனும் பழகும் சுபாவம் பெற்றிருந்தார். உண்மையான பெரிய மனிதராகத் திகழ்ந்தார் அவர்.

லெனின் மனிதநேயத்தைப் பெரிதும் போற்றிய மக்களின் தலைவர்.

வரலாறு சில மனிதருக்குப் பெருமை அளிக்கிறது. சிலர் தம் செயலாலும் சிந்தனைகளாலும் வாழ்க்கைமுறையினாலும் வரலாற்றுக்குப் பெருமை தருகிறார்கள். லெனினோ ஒரு நாட்டின், வரலாற்றை மாற்றி அமைத்து, மக்களுக்குப் புதுவாழ்வு தந்து, புதிய வரலாறு படைத்த மாமனிதர். அவர் பெயரும் வரலாறும் என்றென்றும் ஒளிச்சுடராக விளங்கி, உழைப்பில் உயர்வு காணத் துடிக்கும் மக்கள் அனைவருக்கும் நல்வழி காட்டும் என்பதில் சந்தேகமில்லை.



# வாழ்வின் ரசிகன்

வீணப்பெருமகன். எத்தன். அயோக்கியன். காமக்கலை வல்லான் என்றெல்லாம் புகழ் பாடப்பட வேண்டிய தகுதிகளைப் பெற்றிருந்த காஸனோவா வரலாற்றிலும் இலக்கியத்திலும் அழியாப் புகழ் பெற்றதற்குக் காரணம் அவன் தனது சுயசரிதையை ஒளிவு மறைவு இல்லாமல் எழுதி வைத்ததுதான். அவன் உல்லாசவாழ்வு வாழ்ந்து தீர்த்தபின் வாழ்வில் வெற்றிகளும் தோல்விகளும் அனுபவித்த பிறகு, முதுமையில் பொழுதுபோகாமலும் செய்வதற்கு எதுவும் இல்லாமலும் அவதிப்பட்ட காலத்தில், தனது கடந்த காலத்தைப் பற்றி அதிகம் எண்ணினான். அவற்றை எல்லாம் எழுதி வைத்தால் பொழுதும் போகும். செயல்திறம் இழந்து செல்லரிக்கும் நெஞ்சுக்கு இதமாகவும் இருக்கும் என்று கருதினான். எழுதினான். பதினாறு வால்யூம்கள் எழுதி வைத்தான்.

காஸனோவா சிறந்த எழுத்தாளன் அல்ல. கவிதை நயத்தோடு விஷயங்களைச் சித்திரிக்கும் ஆற்றல் பெற்ற கலைஞனும் அல்ல. ஆனால் அவன் வாழ்க்கையை மிக நன்றாகச் சுவைத்திருந்தான். அவ்அனுபவங்களை அப்படி அப்படியே எழுதிவைத்தான். அவை

எழுத்துலகத்துக்குக் கிடைத்த அரிய களஞ்சியம் ஆயிற்று. அவன் காலத்து நாட்டுநிலை, மனிதர்கள் நிலை, வாழ்க்கைநிலை அனைத்தையும் சித்திரிக்கும் அருமையான வரலாறு ஆகிவிட்டது அது.

அவன் வாழ்விலே உல்லாச வேட்டைக்காரனாக இருந்ததை மறைக்கவில்லை. மாறாகப் பெருமையே கொள்கிறான். சுரண்டப் படுகிறவனாக இருப்பதைவிடச் சுரண்டுவோனாக, மொட்டை அடிக்கப்படுகிறவனாக இருப்பதைவிட மொட்டை அடிப்ப வனாக, ஏமாளியாக இருப்பதைவிட ஏமாற்றுகிறவனாக இருப்பதே உயர்ந்தது, லாபகரமானது என்பது காஸனோவாவின் வாழ்க்கைத் தத்துவம். இந்த உலகத்திலே மக்கள் ஏமாற்றப்பட விரும்பு கிறார்கள். ஏமாறத்தயாராக இருக்கிறார்கள். அவர்கள் விரும்புவதை அவர்களுக்கு அளிப்பதே புத்திசாலித்தனம். இது அவன் நடை முறைக்கொள்கை.

அவன் தன்னை அல்பத்திருடன் ஜேப்படிக்காரன் ஜெயில் பறவை வகையராக்களோடு ஒப்பிட்டுப் பேசுவதை அங்கீகரித்த தில்லை. அவர்கள் வாழ்வின் அதலபாதாளத்தைச் சேர்ந்தவர்கள். இவனோ உயர்மண்டலத்தைச் சேர்ந்தவன். கலாசாரம் பணப் பகட்டு படாடோபம் முதலியன நிறைந்த உலகத்தைச் சேர்ந்தவன். மடத்தனம் பெற்ற மகானுபாவர்களிடமிருந்து பணத்தைத் திறமை யாய், வசீகரமாய், நயமாகக் கறந்துவிடும் திறமையன். இது அவனது தொழில் என அவன் கருதவில்லை.

அவனுக்கு அது ஒரு தனிப்பெரும் கலை. மனோகர விளையாட்டு. அருமையான கடமையும்கூட தனது இயல்புகளுக்கு ஏற்பத்தனக்கு மகிழ்ச்சி தேடிக் கொள்வதுதான் வாழ்க்கையின் உன்னத நோக்கம் என்று தத்துவஞானம் பேசிய அவன் தன் ஆற்றலுக்கு ஏற்றதைக் குறைவறச் செய்துவந்தான். மரமண்டையர் களைச் சுரண்டு, பகட்டர்களை ஏமாற்று அப்பாவிகளை அசடு களாக்கு. பெரும் செல்வம் பெற்ற கஞ்சனின் பணச்சுமையைக் குறை. கல்யாணம் செய்துகொண்டு பெருமைப்படுகிற கணவன் மார்களின் மனைவியரைப் படுக்கைத் துணையாக்கிக்கொண்டு அந்த ஆண்களை ஏமாந்த சோணகிரிகளாக்கி இன்புறுக — இவற்றை நிறைவேற்ற வேண்டியதை ஒரு தேவகட்டளையாகக் கொண்டுவிட்டவன் போல் அவன் வாழ்ந்தான். இந்தக் கடமை களை அவன் மனசுக்குப் பிடித்த வகையிலும் மகத்தான தன்னிறை வோடும் செய்து தீர்த்தான்.

மற்றவர்கள் தன்னைப்பற்றி என்ன கருதினார்கள் — கருது வார்கள் — என அவன் ஒருபோதும் கவலை கொள்ளவில்லை. நானே எனக்கு எஜமான். இதுவே என் பெரும் தனம். எதை

எண்ணியும் நான் பயப்படமாட்டேன் என்று எழுதியுள்ள காஸனோவா சுத்த சுயம்பிரகாசச் சுயேச்சை வீரனாகவே தன் நாட்களைக் கழித்தான். எந்தத் தனியொரு பெண்ணும் தன் அன்பில் அரவணைப்பில், அவனை அடிமைகொண்டதில்லை. எந்த மன்னனும் அவனைத் தன் நாட்டிலேயே இருத்தி வைக்க முடிந்ததில்லை. ஒருசமயம் தெளிந்த நீரோடையாய், இன்னொரு கட்டத்தில் துள்ளிக் குதிக்கும் மின்னொளி நீருற்றாய், வேறொரு இடத்திலே திடுமென வீழ்ந்து கசத்தினுள் மறையும் நீரருவியாய அவன் வாழமுடிந்தது அவனது இயல்புகளின் காரணத்தினால் தான்.

துணிச்சல் — இதுதான் காஸனோவாவின் வாழ்க்கைக் கலை. அவன் பெற்றிருந்த வரப்பிரசாதம் ஆபத்துக்கள் வராமல் முன்யோசனையோடு பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்று அவன் முயன்றானில்லை. என்ன அபாயம்தான் எதிர்நிற்கும், பார்ப்போம் என்று அச்சமற்று முன்னேறிய தீரன் அவன். முதலில் பாதுகாப்பு என்ற உணர்வு பெற்ற ஆயிரம் ஆயிரம் மக்கள் மத்தியிலே எதுவந்தால் என்ன எது போனால் என்ன, என்று அனைத்தையும் இழக்கத்துணிந்து எதையும் ஏற்க முனைந்து முன் பாயும் ஒற்றைத் தனி மனிதனாக விளங்கியவன் அவன். துணிந்த வனுக்கு அதிர்ஷ்ட தேவதை துணை நிற்பாள் என்றுதானே உலகஞானம் பேசுகிறது! அவள் அவனைக் கைவிடவில்லை என்பதை அவனது வரலாறு நிரூபிக்கிறது.

சதை உணர்ச்சிகளால் தூண்டப்பட்டு செயலாற்றியவன் காஸனோவா. அவனுக்கு மனப்போராட்டம் இருந்ததில்லை. மனச்சாட்சி என்கிற ஒன்று அவனிடம் இல்லாதிருந்ததனால் பாப புண்ணிய அரிப்பு, உள்ளுணர்வுக்குறுகுறுப்பு எனும் விவகாரம் எதுவும் அவனுக்குத் தெரியாது. ஆத்மா என்று சொல்லப்படுகிற ஒன்றை அவன் பெற்றிருக்கவில்லை. அவன் பெற்றிருந்தது உறுதியான இன்பவேட்கை மிகுதியாகக் கொண் டிருந்த சதையும் ஆண்மையும். அவன் அறிவை வழிபடவில்லை. புலன்உணர்வுகளைப் பூஜித்தான். ஆகவே அவன் பந்தம்பாசம் நிலையான குறிக்கோள் அறநெறி உணர்வுகள், சமுதாயப் பொறுப்பு போன்ற எதையும் அங்கீகரிக்கவில்லை.

கௌரவம் மரியாதை மானம் — இவை எல்லாம் அவனைப் பொறுத்தமட்டில் வெறும் வார்த்தைகள். இவற்றை எட்டிப்பிடிக்க முடியுமா? தொட்டு விளையாடக்கூடுமா? கிளுகிளுத்துக் குதூகலிக்கும் பொம்பிளைகளை அள்ளி அணைப்பதுபோல் ஆறத் தழுவிக் கொள்ளத்தான் இயலுமா? பின்னே என்ன விட்டுத் தள்ளு.

அவனது வாழ்க்கை தர்மம்: இன்ப உணர்வுகள் பொதிந்து

கிடக்கும் அற்புதம் இந்த உடல். இன்பங்கள் தரக்கூடிய இன்ப உணர்வு பெற்றவர்கள் பெண்கள். இன்பத்துக்கு வழிசெய்யும் உடலுக்கு ஆனந்த விருந்தளிக்கும் இன்ப ஊற்றுக்களான பெண்களில் எத்தனை பேரை கூடிக்களிக்க இயலுமோ அத்தனை பேருடனும் உறவாடி மகிழ்வோம். அவர்களுக்கும் மகிழ்வு அளிப்போம்.

ஆகவே காஸனோவா வாழப் பிறந்தவன். வாழத் துணிந்தவன். வாழத் தெரிந்தவன். வாழ்ந்து மகிழ்ந்தவன்.

வெட்கம் அவமானம் — இவ்வார்த்தைகள் அவன் அறியாதவை. ஏனெனில் இந்நுண் உணர்வுகள் அவன் உடம்பில் படிந்திருக்கவில்லை. எதையும் இயல்பாகவே அவன் சொல்வான். செய்வான். சூதாடும் போது நீ கள்ள ஆட்டம் ஆடினாயே என்று குற்றம்சாட்டப்பட்டபோது, ஆமாம் அதனால் என்ன? எனக்குப் பணம் தேவைப்பட்டது என்று சொன்னவன் அவன். யாரோ ஒரு பெண்ணைக் கெடுத்துவிட்டதாகப் பேசப்பட்ட போது, அவளுக்கு நான் ஜாலி அனுபவம் கற்றுக் கொடுத்தேனே என்று சிரித்தபடி சொன்னவன் அவன்.

அதுதான், அவனுக்கு மனச்சாட்சி. அறநெறிக் கட்டுப்பாடுகள் என்பது எதுவுமே கிடையாது. அவன் தன் கடந்தகாலச் செயல்களுக்காக வருந்தவில்லை. தன்னைப் பாவி என்று அலுத்துக் கொள்ளவில்லை. தான் வேறுவிதமாக வாழ்ந்திருக்கலாமே என்று எண்ணவே இல்லை. நான் இன்று பணக்காரனாக இருந்தால், என்னை நானே குற்றவாளி என்று மதிப்பிடவேண்டியதுதான். ஆனால் இன்று என் கையில் காசு எதுவும் இல்லை. கிடைத்ததை எல்லாம் அவ்வப்போது தாராளமாக அள்ளி வாரி இறைத்து விட்டேன். இது எனக்குப் பெரும் ஆறுதல் என்று அவன் தன் சுய சரிதையில் குறிப்பிட்டிருக்கிறான்.

வருங்காலத்துக்கு வேண்டும் என்று அவன் சொத்து சேர்த்ததுமில்லை. செத்ததற்குப்பின் நன்னிலை அடைய வேண்டும் என்று அஞ்சி இஷ்டங்களைப் பூர்த்தி செய்யாமல் விட்டுவிடவுமில்லை. அவனது எழுபத்துமூன்று வருட வாழ்க்கையில் இறுதியில் மிச்சமிருந்தது அவனது அனுபவ நினைவுகள்தான். அவற்றையும் அவன் தன்னுள் அடக்கி மக்கிப்போக விடவில்லை. உள்ளது உள்ளபடி தாளிலே அள்ளி இறைத்துவிட்டான். அதனால் அமரப் புகழ் பெற்றான்.

ஐயா, உலகத்தில் உயர்வு தாழ்வுகளே மிகுந்திருக்கின்றன. சிலபேர் ஜோராக டிரஸ் செய்து, சோம்பித் திரிந்து ஜாலியாக வாழ்கிறார்கள். வாகனங்களில் உல்லாசமாகப் போகிறார்கள். பலபேர் அழுக்கு உடையும், வெறும் வயிறுமாய் இருக்கிறார்கள்.

உழைக்கிறார்கள். நடந்துநடந்து கஷ்டப்படுகிறார்கள். உலகம் இப்படித்தான் இருந்தது. இப்பவும் இருக்கிறது. இன்னும் இப்படியேதான் இருக்கும். இது வேறுவிதமாக இருந்திருக்கலாமா வேறு வகையாக இருக்க வேண்டுமோ என்றெல்லாம் எண்ணிக் குழம்புவதும் குழப்புவதும் வீண்வேலை. சிலர் கஷ்டப்படவும் சிலர் சுகமாக வாழவும் தான் சூழ்நிலை உதவுகிறது என்றால், புத்திசாலி செய்யவேண்டிய காரியம் என்ன? தான் கஷ்டப் படாமல், சுகமாக வாழ வழிவகைகளைத் தேடிக்கொள்ள வேண்டும். ஆண்டவன் வந்து உதவமாட்டான். அவனவன் தன்தன் பாட்டைக் கவனித்தாக வேண்டும். இது மகத்தான சுயநலமா? ஏய், நன்றாக வாழ்ந்த சுகம் அனுபவித்து இன்புற வேண்டும் என்கிற வாழ்க்கைத்தத்துவம் நலத்தத்துவமாக அல்லாது வேறு எப்படி இருக்கமுடியும்? மற்றவர்களின் விதியைப்பற்றி கடின சித்தத்தோடு இராது வேறு என்ன செய்ய முடியும்? மனித இனத்தை நேசிக்க வேண்டுமா? நேசி. அது எப்படி இருக்கிறதோ குறைபாடுகள் நலன்கள் அனைத்துடனும் நேசி. இந்த விதமாக எண்ணிச் செயல்புரிந்தவன் காஸனோவா.

வாழ்வின் இன்பங்களைச் சுவைக்கவேண்டும் என்று ஆசைப் பட்ட காஸனோவாவைக் கவர்ந்த இனிமைகள் பெண்கள்தான். ஒளிப்பூக்கள் நிறைந்து குலுங்கும் இரவு வானமோ தகத்தகாயச் சூரியஉதயமோ, அந்தி வேளையின் விந்தைக்கோலங்களோ, இயற்கையின் அற்புதஅழகுகளோ அவன் உள்ளத்தைத் தொட்டதாக ஒருவரிகூட இல்லை. அவனது பதினாறு தொகுதி சுயவரலாற்றிலே. ஐரோப்பாவின் அழகு மிக்கப் பரப்புகளில் எல்லாம் சுற்றித் திரிந்தவன் தானே இந் ரசிகசிகாமணி. அங்குள்ள எழில்களில் எதைப் பற்றியோ மேதைகள் படைத்த ஓவியங்கள் சிற்பங்கள் பற்றியோ, கம்பீரமான கட்டிடங்கள் குறித்தோ அவன் எதுவும் எழுதவே இல்லை. அவன் உணர்ச்சியை இவை கிளர்ச்சியுறச் செய்ததில்லை.

ஆனால் போர்வீரர்கள் கூடியிருந்து குடிக்கும் இடத்திலே காணப்பட்ட அழுக்குப்படிந்த குட்டி ஒருத்தியைப் பற்றி அவன் சுவாரஸ்யமாக எழுதுவான். பசுமை படிந்த வயல்வெளிகளையும் தோட்டங்ளையும்விட இருண்ட சந்துகள் அவனுக்கு வசீகரமாகத் தோன்றின. உணர்வுக் கிளர்ச்சி ஏற்பட்டபோது வாய்ப்பாக எவளாவது சிக்கிய வேளையில் அவளோடு ஆனந்தம் அனுபவிக்க அத்தகைய இடங்கள் மிகுதியும் பயன்பட்டன அல்லவா!

மலர்கள் பயனுள்ள விஷயங்கள். எந்தச் சிங்காரியின் மனதையாவது தன் பக்கம் சுண்டி இழுக்க வேண்டுமானால், அறிமுக அன்பளிப்பாக வண்ண மலர்களை அவளுக்கு அனுப்ப முடியுமே.

நகரங்கள் அவனுக்கு ரொம்பவும் பிடித்திருந்தன. அங்கு தானே அவனது வேட்டைக்கு வாய்ப்புகள் நிறைய இருந்தன. அலங்காரிகளும் ஆடம்பரவல்லிகளும் சிங்காரிகளும் உல்லாச மோகினிகளும் அங்கு வீதிகளில், தியேட்டர்களில், வண்டிகளில் காட்சி அளித்தார்கள். சூதாட வசதி செய்யும் இடங்கள் இருந்தன. கேளிக்கை மண்டபங்களும் விபசார விடுதிகளும் இல்லாமலா போகும்? ஆகவே வாழத் துணிந்திருந்த அவனுக்கு இன்பவாழ்வு வாழ நகரங்களே வசதிசெய்து தந்தன.

அவன் ரசிகன். இன்னிசையை ரசித்தவாறு ஒரு கவிதையை வியந்தவாறு, கோப்பை மதுவைச் சுவைத்தவாறு, நயமான உரையாடலை வளர்த்தவாறு கவர்ச்சி நிறைந்த மங்கையின் அருகே அவளோடு நெருங்கி உட்கார்ந்திருப்பது அவனது வாழ்வின் இனிய கணங்களில் சுவை மிகச் சேர்க்கும். இசையும் நாடகமும் நாட்டியமும் பிறவும் உணர்வுகளைக் கிளர்வுறச் செய்ய, ஆனந்த அனுபவத்தை உயர்ந்த நிலைக்கு எவ்விட வைக்கத்தான். இவைகள் இன்ப முன்னுரைகள். தனிப்பெரும் ஆனந்தமான சதை இன்பத் துக்குப் பணிபுரியும் ஏவல் தெய்வங்கள்.

இன்பக் கலையிலே அவன் ஈடு இணையற்ற மன்னனாக திகழ்ந்தான். இந்த இத்தாலியனுக்குப் போட்டி போல — சமநிலையில் நிற்கக் கூடியவன்போல — விளங்கியவன் ஸ்பெயின் நாட்டினான டான்ஜூவான். ஆனாலும் அவனது நோக்கமும் கொள்கைகளும், வெற்றிப்பெருமைகளும் காஸனோவாவின் போக்குகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டவை.

இலக்கியச் சிறப்பு பெற்ற இவ்விருவரையும் ஒரு வரலாற்று ஆசிரியன் வெகு அழகாக ஒப்புநோக்கி எழுதியிருக்கிறான்.



# இன்றைய லட்சியவாதிகள்

தெற்குக் கடற்கரை ரஸ்தாவின் கீழ்ப்புற நடைபாதையின் கிழக்குப் பக்க வரம்பு ஆக அமைந்துள்ள உயர்ந்த பட்டியக்கல் மீது அமர்ந்து எதிரே இயங்கும் உலகத்தை வேடிக்கை யாகப் பார்த்துக்கொண்டிருப்பது என் பொழுதுபோக்குகளில் ஒன்று.

அன்றும் அப்படித்தான் இருந்தேன். வழியே போய்க் கொண்டிருந்த ஒருவன் என் முன் நின்றான். கல்லா ஆஸ்பத்திரி இங்கே எங்கே இருக்குது என்று கேட்டான்.

அப்படி எந்த ஆஸ்பத்திரியும் இந்தப் பக்கம் இல்லை என்றேன்.

இந்தப் பக்கம்தானே இருக்குன்னு சொன் னாங்க. அதுக்கு எதிரே பத்மினி வீடு இருக்கு தாமே? என்றான் அவன்.

கல்யாணி ஆஸ்பத்திரியைத் தான் அவன் அப்படி விசாரித்திருக்கிறான் என்ற விஷயம் எனக்கு இப்போதுதான் புரிந்தது.

அது எலியட்ஸ் ரோடில் இருக்கு. இங்கிருந்து இன்னும் அரை மைல் தூரம் நடக்கவேண்டும் என்றேன்.

அவன் என் பக்கத்தில் உட்கார்ந்து தன் கால்களைத் தடவ ஆரம்பித்துவிட்டான்.

காலையிலிருந்து நடைதான். காலையிலே ரெண்டு இட்டிலி சாப்பிட்டுவிட்டு நடக்க ஆரம்பித்தேன். நடந்து கொண்டே இருக்கேன். பத்துமைலுக்கு அதிகமாகவே நடந்திருப்பேன். இன்னும் நடக்க வேண்டியிருக்கு என்றான்.

அனுதாபத்தைத் தூண்டும் விதத்தில் தோற்றம் பெற்றிருந்த அவன் டீ குடிக்க ஏதாவது கொடுங்களேன் என்று காசு கேட்ப தற்குத்தான் இப்படி அடிபோடுகிறான் என்று என் மனம் முணுமுணுத்தது.

பல சினிமா ஆக்டர்கள் வீடுகளைப் பார்த்தாச்சு. பத்மினி வீட்டைப்பார்க்கணும். அப்புறம் வாத்தியாரைப் பார்த்துப் பேசணும். அடையாறுலே அவரு ஸ்டுடியோ இருக்கு தாமே? அடையாறு இங்கிருந்து ரொம்பதூரமா? என்று அவன் கேட்டான்.

அஞ்சு அல்லது ஆறு மைல் இருக்கும்.

அவ்வளவு தூரம் நடக்கணுமா? ஊம் பரவால்லே. வாத்தி யாரைப் பார்த்துப் பேசினால் என் கஷ்டமெல்லாம் தீர்ந்து போகும். ஸ்டுடியோவில் அவரைப் பார்க்க முடியுமா"?

எனக்குத் தெரியாது. அங்கே போய் முயற்சி செய்து பார்த்தால்தான் தெரியும் என்று சொன்னேன்.

போகத்தான் போறேன். எப்படியும் அவரைப் பார்த்துப் பேசத்தான் போறேன். அவன் திடநம்பிக்கையோடு பேசிக்கொண் டிருந்தான்.

அநேக வருஷங்களாக நம் நாட்டின் சாதாரண மக்களின் லட்சிய நாயக நாயகிகளாக சினிமா ஹீரோக்களும், ஹீரோயின் களும்தான் விளங்கி வருகிறார்கள். தமிழகத்தின் பல பகுதிகளி லிருந்தும் அவர்களையும் அவர்கள் வசிக்கும் வீட்டையும் பார்ப்ப தற்காக எத்தனையோ பேர் தலைநகரத்துக்கு வருகிறார்கள். பார்க்கப் போனால் எல்லா நாட்டு சாதாரண ஜனங்களும் இப்படித்தான் இருப்பார்கள். டாக்டர் சஞ்சீவியின் நினைவுகள் என்ற புத்தகத்தில் அவர் இதுபோன்ற ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டிருக்கிறார். திருப்பதிக்குப் போய் வெங்கடாசலபதியைத் தரிசித்து மொட்டை போட்டுக் கொண்டு டூரிஸ்ட் பஸ்ஸில் சென்னைக்கு வருகிற ஆந்திர நாட்டு யாத்ரீகர்கள். அந்தக் காலத்தில் பிரபலமாக விளங்கிய ஆந்திர சினிமா நடிகைகள். நடிகர்கள் வீடுகளைத் தேடிப்போய் அவர்களைத் தரிசித்து மகிழ்வது வழக்கம். பெரு மாளுக்கு அடுத்தபடியாக அவர்கள் அந்நடிகர்களை மதித்தார்கள் என்று அந்த டாக்டர் எழுதியிருக்கிறார். இப்பவும் இந்த வழக்கம் நீடித்து வருகிறது. திருப்பதி நெடுமாலைக் கும்பிட்டுவிட்டு

பட்டணம் பார்க்கவருகிற ஆந்திரநாட்டுப் பக்தர்கள். படங்களில் கிருஷ்ணர் வேஷம் போட்டுக் கவர்ச்சிகரமாக விளங்கியுள்ள ஒரு நடிகர் வீடு தேடிப்போய் அவரை விழுந்து கும்பிடுகிறார்கள் என்றொரு சேதி சில மாதங்களுக்குமுன்பு ஒரு பத்திரிகையில் வந்திருந்தது.

இவை என் மனசில் புரண்ட (எண்ண) நினைவுஅலைகள்.

அவன் பேசிக்கொண்டிருந்தான்.

நான் திருவனந்தபுரத்தில் வேலை பார்த்தேன். அப்போ என் பேர் அச்சுதன் நாயர். பிறகு கொழும்புக்குப் போனேன். அங்கே புத்த தேவா என்று சில வருஷம் இருந்தேன். அப்புறம் பம்பாயில் வேலைபார்த்தேன். பிரான்சிஸ் என்று பேர். இப்போ கிருஷ்ணன். என்.எஸ். கிருஷ்ணன் சாதாரணமாயிருந்து பல வேலைகள் பார்த்துத் தான் சினிமாவுக்கு வந்தார். காரிலே போக முடிஞ்சுது. வாத்தியாரும் சாதாரண நிலையிலிருந்துதான் உயர்ந்தி ருக்கிறார். பங்களாவாசம். பணம் எல்லாம் அடைய முடிஞ்சிருக்கு. இந்தக் கிருஷ்ணனும் சில வருஷங்களில் அப்படி வரத்தான் போறான். காரிலே இதே ரோடிலே போகத்தான் போறான். முதல்லே வாத்தியாரைக் கண்டுபேசணும். எனக்கு கத்திச்சண்டை தெரியும். கொழும்பிலே இருந்தப்ப கத்துக்கிட்டேன். பெரிய மாடியிலேயிருந்து ஜம்னு கீழே குதிப்பேன். ஒரு மொட்டை மாடியிலேயிருந்து ஒரு கிணத்துக்குள்ளே குதிச்சப்போதான் இந்தக் காயம் பட்டுது.

அவன் தன் கையையும் காலையும் அங்கே பதிந்திருந்த வடுக்களையும் காட்டினான்.

திடீரென்று அவன் பேச்சின் திசை மாறியது. இங்கேல்லாம் முடிவெட்டிக் கொள்ள என்ன கூலி என்று கேட்டான்.

ஒரு ரூபாய் ஐம்பது பைசா?

ஒண்ணரை ரூபாயா? ஷேவிங் மட்டும் என்றால்?

முப்பது பைசா. மவுன்ட் ரோடு பக்கம் இன்னும் அதிகம் இருக்கும். இருக்கத்தான் வேண்டும்.

அவன் தன் போக்கிலும் பேசிக்கொண்டிருக்கையில் என் மனம் நினைவு அசை போட்டது.

ஒரு சலூனில் புதிசாக என் பார்வையை உறுத்தின இரண்டு பெட்டிகள். ஒன்றின்மீது ஷாம்பு அன்ட் ஏர்டிரையிங் ஒரு ரூபாய் ஐம்பது பைசா என்றும் மற்றொன்றில் ஃபேஸ்மாசேஜ் 50 பைசா என்றும் ஆங்கிலத்தில் அழகாகப் பொறிக்கப் பட்டிருந்தது. இது

என்ன என்று விசாரித்தேன். ஷேவ் செய்து கொண்டபிறகு. முகத்தில் சுருக்கம் இல்லாமல் மழமழப்பு உண்டாக்கிவிட எலெக்ட்ரிக் மாசேஜ் செய்யலாம். ஹேர் கட்டிங் பண்ணிவிட்டு, குளிக்காமல் ஜம்னு சினிமாவுக்கோ வேறு எங்கோ போக விரும்பு கிறவங்க ஷாம்பு செய்துகொண்டு ஏர்டிரையிங் பண்ணிக் கொள்ள இது உதவும். இங்கே திருவல்லிக்கேணி ஏரியாவிலே இதுகளுக்கு மதிப்பு இல்லே. மவுண்ட் ரோடிலே, இந்த ஸலூான் இருந்தால் இவைகளுக்கு எப்பவும் வேலை இருந்துகொண்டே இருக்கும். பணமும் வரும் என்று முடிவெட்டும் தோழன் விளக்கினான்.

கிருஷ்ணன் பேசிக்கொண்டிருந்தான்.

நான் ஜோரா ஹேர்கட் பண்ணுவேன். வேகமாகவும் செய்வேன். தினசரி பத்துப்பேருக்கு முடிவெட்டினாலே பதினஞ்சு ரூபா கிடைச்சுப்போகும். ஷேவிங் பண்ணினால் அதிகப்படி வருமானம். நான் சலூன்வேலைதான் பார்த்தேன். ஒரு நாளைக்கு மூணரை ரூபா சம்பளம். நின்னுக்கிட்டே உழைக்கணும். அது தான் கஷ்டம். நான் வாத்தியார்கிட்டே பேசப்போறேன். அவரு எனக்கு சினிமா சான்ஸ் வாங்கித் தருவாரு. பேரை மாற்றிக் கொள்வேன். அப்புறம் பாருங்க. ஆனந்த் தியேட்டர் பக்கம் உள்ள ஒரு சலூனை விலைக்கு வாங்கி, பெரிசு பண்ணி ஏர் டிரையர் மாசேஜ் மிஷின் எல்லாம் வச்சு, நாலைஞ்சு ஆட்களை வேலைக்குப் போட்டு, ஆ அந்தக் காலம் விரைவாக வந்து கொண்டிருக்குது.

தன் கனவுச் சுகத்தில் தானே சொக்கிப்போய் சும்மா யிருந்தான் அவன் — ஒரு கணம்.

இதெல்லாம் நடக்காதுன்னு நெனைக்கிறீங்களா? நிச்சயமா நடக்கத்தான் போகுது. நான் தமிழகஅரசு பரிசுச்சீட்டுகூட வாங்கியிருக்கிறேன். எனக்குப் பரிசு கிடைக்கும் தான். எங்க ஆள் ஒருவருக்கு லட்சம் ரூபாய் பரிசு கிடைத்தது. அது மாதிரி எனக்குக் கிடைக்கும். அது கிடைத்ததும், ஓடியன் தியேட்டர் பக்கம். எழுபதினாயிரம் ரூபாய்க்கு விற்பனைக்கு இருக்கிற ஒரு சலூனை விலைக்கு வாங்கி பிசினஸை வளர்க்கலாம்னு எண்ணம்.

முதல்லே அடையாறு போகணும். வாத்தியாரைப் பார்த்துப் பேசணும். அவரைப் பார்த்துப் பேசிட்டாலே, எனக்கு அதிர்ஷ்டம் வந்தாச்சுன்னுதான் அர்த்தம்...

சரி, எனக்கு நேரமாச்சு நான் போறேன். சில கஜதூரம் நடந்திருப்பேன். ஸார்... ஸார் என்று அவன் கூப்பிட்ட குரல் என்னைத் திரும்பிப்பார்க்க வைத்தது. காசு கேட்கத்தான் கூப்பிடு வான் என்ற நினைப்புடன் நின்று திரும்பி அவன் பக்கம் பார்த்தேன்.

நன்றி ஸார். என் பேச்சைக் கேட்டதற்காக மகிழ்ச்சி என்று சொல்லி அவன் சலாமிட்டான். அவன் ஒரு பைத்தியம் என்று நான் முடிவு கட்டவில்லை. இப்படியும் ஒரு கேரக்டர் என்று தான் நினைத்தேன். நானும் சலாம் போட்டுவிட்டு நடந்தேன்.

உழைக்கும் ஆற்றல் இருந்தும் உழைக்க மனம் இல்லாமல் சுலபத்தில் பணம் பண்ணிவிடவேண்டும். எளிதில் பெரும் பணக்காரனாகி வாழ்க்கைச் சுகங்களை எல்லாம் அனுபவிக்க வேண்டும் என்கிற ஆசை மனித சமுதாயத்தில் அதிகமாகப் பரவி வருகிறது. இந்த நபர் அதற்கு ஒரு உதாரணம். இவன் அபூர்வப் பிரகிருதி அல்ல. சர்வசாதாரணமாகிவருகிற ஒரு சமுதாயப் பிராணிதான். இப்படி என் மனம் பேசிக்கொண்டிருந்தது.

ஜனநெருக்கடியும் வாகனப் போக்குவரத்தும் மிகுதியாக உள்ள தெருக்களின் வழியே நான் நடந்துகொண்டிருந்தேன். வழக்கம்போல் என் மனம் எங்கோ சஞ்சரித்த வண்ணமிருந்தது. அதனால் ஹல்லோ ஸார் என்ன கவனிக்காமலே போறீங்களே? என்று கேட்டபடி எதிரே வந்து நின்ற நபர் என்னைத் திடுக்கிட வைத்தார் என்றே சொல்லவேண்டும். அவர் எனக்கு நன்கு அறிமுகமான மிஸ்டர் ராவ்ஜி என உணர்ந்ததும் நான் இஹி ஹி என்று சிரிப்பு உதிர்த்து என்ன செளக்கியம்தானே? எனக்கேட்டு வைத்தேன்.

செளக்கியம் என்று சொல்லலாம்தான். ஆனால் இதிலே என்ன செளகரியம் இருக்கு? நாம் வாழ்வது ஒரு வாழ்க்கையா? என்னவோ சம்பாதிக்கிறோம். யாருக்காக? வீடுகட்டி வாடகைக்கு விடுகிறவனுக்காக. பால்காரனுக்கும் கடைக்காரன்களுக்கும் டாக்டருக்கும் பாக்கிப் பணத்தைக் கொட்டிக் கொடுக்கிறோம். நம் இஷ்டம்போல் செலவு செய்வதற்கு நம்ம சம்பாத்தியத்திலே ஏதாவது மிச்சமிருக்குதா என்ன? பேரு பட்டணத்திலே ஒரு கம்பெனியிலே வேலை. மாசச் சம்பளம் நானூறு ரூபாய். இது பாதி மாசத்துக்குள்ளேயே கரைஞ்சு போகுது அப்புறம் கைமாத்துக்கும் கடனுக்கும் அலைய வேண்டியிருக்கு. இதிலே ஏது செளகரியமும் செளக்கியமும் என்று நாடக மேடைப் பாணியில் பேசித் தீர்த்தார் நண்பர்.

இவர் ஒரு சுவாரஸ்யமான பேர்வழி. மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்த, மாசச்சம்பளம் பெறும் உத்தியோக இனத்தில் இடம் பெற்று, இன்னும் முன்னேறி உயர வேண்டும் என்ற ஆசைகளை வளர்த்து, ஆனால் உயரமுடியாமலும் இருக்கிற நிலைமையில் திருப்திகொள்ள இயலாமலும் திண்டாடுகிற எத்தனையோ பேர்களில் மிஸ்டர் ராவ்ஜியும் ஒருவர். தொழிலால் குமாஸ்தா.

பொழுதுபோக்குக்காக நாடகக்கலைஞர். மன அரிப்பைத் தீர்க்க நாடகங்களை எழுதிக் குவிக்கும் ஆசிரியர். கனவினால் சினிமா நடிகர். லட்சியம், பட்டணத்தில் வசதியான ஒரு வீடும் சுகபோக வாழ்வும். பார்க்கப்போனால் பெரும்பாலான மத்தியதரவர்க்கத்து ஆசாமிகளின் ஆசையும் கனவும் இப்படியே இருப்பது புரியும்.

ஸார். எத்தனை காலத்துக்கு நம்ம சம்பாத்தியத்தில் பெரும் பகுதியை வீட்டுக்காரனுக்கு வாடகையாகக் கொட்டிக் கொடுத்துக் கொண்டிருப்பது? நமக்கென்று ஒரு வீடு கட்டியாக வேண்டும். இந்த எண்ணம் எனக்குள் வளர்கிறது. சில வருஷங்களுக்குமுன் நடிக்க வந்த அவன் பெரிய வீடு கட்டிப் போட்டான். இவன் ஜோரான பங்களா கட்டிவிட்டான்.

சினிமா நாடக உலக நபர்களின் பெயர்களைக் கூறி அவர் களது வீடுகள் பற்றிய விவரங்களையும் சொல்லலானார் நண்பர்.

அவருக்கு நடுத்தெரு. பஜார் பிளாட்பாரம். ஓட்டல் முன்பு சினிமா தியேட்டர் ஓரம் என்கிற கவலை எதுவும் எப்பவுமே கிடையாது. எங்கே எந்த நேரத்தில் சந்தித்தாலும் சரி. அங்கேயே அசையாது நின்று தன் எண்ணங்களை உரத்த குரலில் பேச ஆரம்பித்து விடுவார். இப்பவும் அப்படித்தான்.

நானும் வசதிகள் நிறைந்த ஒரு வீடு கட்டியாக வேண்டும். அதற்குப் பணம் சம்பாதித்தாக வேண்டும். பணத்தை வேகமாக நிறையவும் சம்பாதிக்க ஒருவழி சினிமாவில் நடிப்பது தான். நான் அதுக்குத்தான் முயற்சி பண்ணி வருகிறேன். பல நடிகர்களை சந்தித்துச் சொல்லி வைத்திருக்கிறேன். தினசரி இதுவும் ஒரு முக்கிய வேலை ஆகிவிட்டது, நமக்கு. விரைவில் நான் சினிமாவில் நடித்து பணம் பெற்று சொந்தவீடு கட்டி விடுவேன். இந்த நம்பிக்கை எனக்கு இருக்கு ஸார் என்று உறுதி கனத்த குரலில் சொன்னார் நண்பர்.

வாழ்க உங்கள் நம்பிக்கை. உங்கள் முயற்சி வெற்றி பெறட்டும் என்றேன்.

பெரியவாள் ஆசீர்வாதம் என்று பணிவாகக் கும்பிட்டார் மிஸ்டர் ராவ்ஜி.

நான் பெரியவாளும் இல்லை. சின்னவாளும் இல்லை. நானும் சாதாரண மனிதன்தான் என்று சொல்லி வைத்தேன். தமிழக அரசுப் பரிசுச்சீட்டு வாங்கினீர்களா?" என்றும் கேட்டேன்.

வாங்காமல் இருப்பேனா? ஒவ்வொரு வரிசையிலும் ஒவ்வொரு சீட்டு வாங்கத்தான் செய்கிறேன். ஒரு ரூபாய் செலவில் லட்சாதிபதி ஆகிவிடும் வாய்ப்பு இருக்கிறபோது அதைப் பயன்படுத்தாமல்

விட்டுவிட முடியுமா? எப்படியும் எனக்குப் பணம் வந்தாக வேண்டும். நானும் சொந்தமாக ஒரு வீடு கட்டி அதில் வசதியாக வாழவேண்டும். அந்த நாடகக் கலைஞர் நாலைந்து வீடுகள் கட்டி வாடகைக்குவிட்டு சுகமாக வாழ்கிறார். இந்த நாடக முதலாளி இரண்டு பங்களா கட்டிக் கொண்டிருக்கிறார்....

மீண்டும் அதே பாடம் ஒப்புவிப்பு.

உங்களைப் பார்த்ததில் மிக்க மகிழ்ச்சி. உங்களோடு சிறிது நேரம் பேசமுடிந்ததில் எனக்கு நல்ல மனநிறைவு. ஏற்பட்டிருக்கிறது. ஸார் என்று கூறிப் பெரிதான ஒரு கும்பிடு போட்டு நகர்ந்தார் ராவ்ஜி.

எனது நினைவுகளும் நானுமாய் நான் என் வழியே நடக்கலானேன்.

ஒரு இடத்தில் பெரும் கும்பல். விலகிநின்ற என் நண்பர் சிவராமன் சிரித்தபடி என்னை நோக்கிவந்தார். லாட்டரி டிக்கட்டுக்குத்தான் கூட்டம். நானும் அதுக்காகத்தான் காத்து நிற்கிறேன். இது வரவர ஒரு சூதாட்டம் ஆகிவிட்டது. இருபது முப்பது நாற்பதுன்னு சீட்டுகள் வாங்க ஆரம்பிச்சிட்டாங்க. அதனாலேதான் இவ்வளவு டிமாண்டு. ஒரு வரிசைக்கு ஒரு சீட்டு என்று வைத்துக்கொள்வதில் அர்த்தம் இருக்கு. நான் அப்படித் தான் வாங்குகிறேன் என்றார்.

தானாகவே சிரித்துக்கொண்டார். தொடர்ந்து பேசினார்.

நீங்ககூட ஒன்று அல்லது இரண்டு சீட்டு வாங்கி வையுங்கள். லட்சம் ரூபாய் கிடைக்காவிட்டாலும் பத்தாயிரம் கிடைக்கலாம். இல்லை வெறும் ஆயிரம்தான் கிடைக்கட்டுமே! நம்மாலே ஆயிரம் ரூபாய் மொத்தமாக இந்த வாழ்க்கையிலே சேர்த்துவிடமுடியுமா என்ன? முடியாது நான் சொல்றேன் — நிச்சயமா முடியாது. ஆஃப்டர் ஆல் ஒரு ரூபா. ஒருவேளை டிபன் செலவு. அதுக்கு ஒரு தாள். அது ஒரு லட்சம் அல்லது பத்தாயிரம் அல்லது ஆயிரம் ரூபாயை அஸால்ட்டா கொண்டுதரும். இது ஏதோ மாயம் மாதிரி இல்லே? அல்லாவுதீன் மோதிரம், அற்புத விளக்கு. புதையல் என்கிற மாதிரி எல்லாம் இல்லே? எப்படி இருந்தால் என்ன, யாராவது லட்சாதிபதியாவது நிச்சயம். பெரும் பணம் சுலபமாகப் பெறப்போவது உண்மை. அது நாமாக ஏன் இருக்கக் கூடாது? பணம் யாருக்குத்தான் தேவை இல்லை? கஷ்டப் படாமல் சுலபமாக லட்சாதிபதியாக அல்லது பெரும் பணக்கார னாக மாற வழி ஏற்பட்டிருக்கு என்றால் அப்புறம் கஷ்டப்பட்டு உழைத்து அவதிப்படுவதில் அர்த்தமும் இல்லை. சுகமும் இல்லை. அதனாலேதான் நான் தமிழகஅரசுப் பரிசுச் சீட்டுகளோடு கேரளா,

ஒரிஸா, ராஜஸ்தான் லாட்டரிச் சீட்டுகளும் வாங்குகிறேன். ஜேக்பாட் டிக்கட்கூட வாங்குகிறேன். எப்படியும் நான் பணக் காரனாகிவிடுவேன். வாழ்க்கையை அனுபவிக்கத் தான் போகிறேன் என்றார் நண்பர்.

அப்பாவித் தோற்றமுள்ள நண்பர் சிவராமனின் நம்பிக்கை படிந்த இதயஒலியாக மட்டும் அது தொனிக்கவில்லை. இன்றைய நாட்டுமக்கள் முக்கால்வாசிப்பேரின் லட்சியக் கனவுக் குரல் போலவும் ஒலித்தது அது.

நேரமாகுது ஸார். பிறகு சீட்டுகள் தீர்ந்துபோனாலும் போயிடும் என்று கூறிவிட்டு வேகமாக ஓடினார் நண்பர்.

எப்படியும் பணக்காரராக வேண்டும். உழைக்காமல், கஷ்டப்படாமல் வெகு சுலபத்தில், கூடிய விரைவில் பெரும் பணக்காரனாகிவிட வேண்டும். இதுதான் இன்றைய மக்களின் லட்சிய வேகம். அந்த வேகத்தின் கண்கூடான உதாரணம் இந்த நண்பரும் பிறரும்.

இப்படிச் சொல்லியது என் மனம்.

## பதிப்பாளர் உரை

நெல்லை மாவட்ட நூல்களைப் பிரசுரிக்க மித்ர வெளியீடு ஒரு திட்டத்தினை வகுத்துச் செயலாற்றுகின்றது. அவர்களுடைய இலக்கிய முயற்சிகளிலே இணைந்து கொள்ளும் ஆர்வத்தினை நாம் வெளிப்படுத்தினோம். அத்திட்டத்தின் கீழ் எங்களையும் இரண்டு நூல்களை வெளியிட அனுமதி தந்தார்கள். அவற்றுள் ஒன்று வல்லிக்கண்ணன் கட்டுரைகள்.

இன்றையத் தமிழ் இலக்கிய உலகில் பிதாமகர் என்றும் பீஷ்மர் என்றும் வாஞ்சையுடன் அழைக்கப் படுவதற்கு வல்லிக்கண்ணன் இவர் முற்றிலும் தகுதி யுள்ளவர். 85 வயதான இளைஞர். நைட்டிகன். 72 வருட இலக்கிய வாழ்க்கை. சிறுகதை, நாவல் குறுநாவல், கட்டுரை, கவிதை, வாழ்க்கை வரலாறு, நாடகம், கடிதங்கள், மொழிபெயர்ப்பு எனப் பல துறைகளிலும் அறுபதுக்கும் மேற்பட்ட புத்தகங்கள் எழுதி உள்ளார்.

புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும் என்ற நூலுக்காக இந்திய சாகித்திய அகாதமிப் பரிசு இவருக்கு வழங்கப்பட்டது. தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சிப் பரிசு எழுத்தாளர்கள் பத்திரிகைகள் அன்றும் இன்றும் நூலுக்கு அளிக்கப்பட்டது. அக்னி அக்ஷ விருது, ஆழ்வார்கள் ஆய்வு மையம் விருது, தமிழ் சான்றோர் பேரவை விருது மற்றும் பல இலக்கிய அமைப்புகளின் தமிழ்ப்பணி விருதுகள் இவருக்கு வழங்கப்பட்டன.

இவர் இலக்கியப் பணிகள் தொடர என்றும் என் வாழ்த்துக்கள்.

— எஸ். பொன்னுத்துரை

திருநெல்வேலி மாவட்டம் ராஜவல்லிபுரத்தில், 12.11.20 இல் பிறந்தவர். 1934 முதல் இவரது சிறுகதைகளும் கட்டுரைகளும் வெளிவரலாயின. பல்வேறு பத்திரி கைகளின் ஆசிரியர் குழுவிலே பணியாற்றி, ஐம்பது களின் ஆரம்பத்தில் ஹனுமான் வார இதழில் துணை யா சிரியராகப் பணிபுரிந்தார். பின்னர் எந்த நிறுவனத்தி லும் சேராது சுதந்திர எழுத்தாளராக வாழ முற்பட்டார். தனது 72 வருட இலக்கிய வாழ்வில் சிறுகதை, நாவல், குறுநாவல், கட்டுரை, கவிதை, வாழ்க்கை வரலாறு, நாடகம், கடிதங்கள், மொழிபெயர்ப்பு எனப் பல துறை களிலும் அறுபதுக்கும் மேற்பட்ட புத்தகங்கள் எழுதி உள்ளார்.

**புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்** என்ற நூலுக்காக இந்திய சாகித்திய அகாதமிப் பரிசு இவருக்கு வழங்கப்பட்டது. தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சிப் பரிசு **எழுத்தாளர்கள் பத்திரிகைகள் அன்றும் இன்றும்** நூலுக்கு அளிக்கப்பட்டது. **அக்னி அக்ஷ** விருது, ஆழ் வார்கள் ஆய்வுமையம் விருது, தமிழ் சான்றோர் பேரவை விருது மற்றும் பல இலக்கிய அமைப்புகளின் தமிழ்ப்பணி விருதுகள் இவருக்கு வழங்கப்பட்டன.

ஆடம்பரமற்ற முறையில் எளிமையாக வாழும் இந்த 84 வயது பிரம்மச்சாரி இப்போதும் எழுதுவதிலும் படிப்பதிலும் பலரோடு கடிதத் தொடர்பு கொள்வதிலும் மகிழ்ச்சி காண்கிறார்.